# சுயம்வரம்

— நாடகம் —





கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர்

 2/-

# பொருளடக்கம்



# முன்னுரை

என்னுடைய நண்பர் ஒருவர் ஆவணி அவிட்டம் என்னும் சடங்கை விசித்திரமாகச் செய்வார். ரிக், யஜுர் வேதங்களை அநுசரிப்பவர்கள் செய்யும் தினம் வந்தால், 'எனக்கு இன்னிக்கு இல்லை, ஸார்! நான் ஸாம வேதம்' என்பார். பிறகு ஸாமகர்கள் செய்யும் தினம் வந்ததும், யாராவது அவரைக் கண்டு கேட்டால், 'ஆவணி அவிட்டமா? போன மாசத்திலேயே ஆயிடுத்து, ஸார்' என்பார். இது போன்ற ஒரு முறையைச் சிலர் நாடக இலக்கியத்தில் அநுசரிப்பது உண்டு. நாடகம், படிப்பதற்கு நன்றாக இல்லா விட்டால், 'நாடகத்தைப் படித்துச் சொல்ல முடியுமோ? நடித்த பிறகுதான் அதன் சிறப்பைக் கூறலாம்' என்பர். நடிப்பில் சிறக்காவிட்டால், 'நாடகம் நன்றாகத்தான் எழுதினேன். நடித்தவர்களுக்குத் திறமை இல்லை' என்பர். ஸால்ஜாப்புக்கு என்ன? எதை வேண்டுமானாலும் சொல்ல லாம். ஆனால் உண்மையாக ஒரு நாடகத்தைக் கலை ரஸம் உள்ளது என்று கூற வேண்டுமாயின் அது படிப்பதற்கும் நன்றாக இருக்க வேண்டும்; நடிப்பதற்கும் பொருந்தி யிருக்க வேண்டும். இந்த லக்ஷ்யத்தைக் கொண்டே, நான் பின் வரும் நாடகங்களை எழுதியுள்ளேன். இவற்றுள் சமீபத்தில் எழுதிய ஒன்றைத் தவிரப் பாக்கி எல்லாம் மேடையிலோ அல்லது 'ரேடியோ'விலோ நடிக்கப்பட்டவை. நடிப்புப் பரீட்சையில் தவறவில்லை என்று சொல்ல எனக்கு அநுபவமும் தைரியமும் இருக்கின்றன. படிப்பதற்கு எப்படி இருக்கின்றன என்பதை நீங்கள்தான் படித்துச் சொல்ல வேண்டும். என்னைக் கேட்டால், வாத்ஸல்யமுடைய தாய்மார் தங்கள் குழந்தையைப் போற்றுவதுபோல், 'மூக்கும் முழியுமாக நன்றா யிருக்கு!' என்றுதான் எனக்குச் சொல்லத் தோன்றும்.

இங்கே நான் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்வது அவசியம் ஆகும். என்னைக் 'கலைமகளு'க்கு அறி முகப்படுத்திய **ஸ்ரீ ராவ்ஸாஹிப் எஸ். ஜி. ஸ்ரீநிவாஸாச்சாரியார்** அவர்களுக்கும், என்னுடைய நாடகங்களை ஒழுங்குபடுத்தி வெளியிடுவதற்கு வேண்டிய சிரத்தையும் பிரயாசையும் எடுத்துக்கொண்ட **ஸ்ரீ கி. வா ஜகந்நாதன்** அவர்களுக்கும் நான் மிகவும் கடமைப்பட் டிருக்கிறேன்.

— ஆர். ஜகந்நாதன்

‘என்னவோ வரைஞ்சு வரைஞ்சு தள்ளி யிருக்கிறீர்களே யொழிய, வார்த்தை அத்தனை யும் என்னுதாக்கும் !’

*— என் மனைவி*

பரமபதம்: திருவாய்மொழிப் பாசுர சப்தம் தொனிக்க, தாய் வந்துகொண் டிருக்கிருள். தந்தை வரவேற்கிருர்.

**தந்தை:** வா அம்மா, வா.

**தாய்:** சட்டென்று உங்களுக்கு எப்படி அடையாளம் தெரிந்தது

**தந்தை:** முதலில் கொஞ்சம் தயக்கமாகத்தான் இருந்தது. கிட்டே நெருங்கினதும் புரிந்தது. சாமல் கோட்டையில் நான் உத்தியோகத்தில் இருந்தபோது உங்கள் அப்பா உன்னை முதல் தரம் அழைத்துக் கொண்டுவந்து விட்டாரே, அதே மாதிரி இருக்கே. அதே அச்சு என்பேன்; இல்லையா?

**தாய்:** நீங்களும் அப்போது இருந்தபடிதான் இருக்ககள். ஆனால், அந்த அதிகார தோரணையும் அதட்டலும் மாத்திரம் காணுமே.

**தந்தை:** இங்கே எதற்கு அதிகாரமும் அதட்டலும்? ஏம்மா நிற்கிறே? இன்னமும் பயமா? இங்கே அதெல்லாம் வேண்டாம். உட்கார்; சுவாதீனமும் சுதந்திரமும் எல்லையற்று இருக்கும் இடம் இது.

**தாய்:** (உட்கார்ந்து) இப்படி எப்போது பேசக் கற்றுக் கொண்டீர்கள்? என்னேடு இப்படிப் பேசுகிற வழக்கம் கிடையாதே.

**தந்தை:** குறை சொல்ல ஆரம்பித்துவிட்டை யோன்னே? இந்தப் பதினேழு வருஷங்களாக உன்னுடைய பேச்சைக் கேட்காமல் இருந்தது கொஞ்சம் குறையாகத்தான் இருந்தது. இருந்தாலும் ஒரு பொறுப்பை வகிப்பதற்காகத்தான் நீ பூமியில் தங்கவேண்டி யிருந்தது. ஏம்மா, கொஞ்சம் சீக்கிரமே வந்து வந்துவிட்டாய்போல் தோன்று கிறதே.

**தாய்:** சீக்கிரம் என்ன? காரியம் பூர்த்தி ஆகிவிட்டது; வந்தேன்.

**தந்தை:** எப்படிப் பூர்த்தி ஆகி இருக்கும்? நான் அறுபத்தொரு வருஷம் இருந்து பார்த்தேன். முடிந்தபாடு இல்லையே. நீ எப்படி ஐம்பத்தொன்பது வருஷத்திற்குள் முடித்துக்கொண்டு வந்து விட்டாய்? உழைப்பும் சுறு சுறுப்பும் அதிகமாக உள்ளவள் நீ; குழந்தைகளெல்லாம் இப்போது எப்படி இருக்கிருர்கள்?

**தாய்:** குழந்தைகள் எல்லாருக்கும் இப்போது அகமுடையாள் வந்தாச்சு. எல்லாருக்கும் குழந்தைகள் பிறந்தாச்சு.

**தந்தை:** பையன் என்ன பண்ணுகிறுன்? முன்னேற்ற அவா அதிகம் கொண்டவன் ஆச்சே.

**தாய்:** இஞ்சினீர் பண்ணுருன். 'இஞ்சினீர் பாட்டி' என்று தன்னை எல்லாரும் போற்ற வேண்டும் என்று ஆசைப்பட்டாரே மாமியார்! இருந்து பார்க்காமல் வந்துவிட்டார்.

**தந்தை:** நீ இருந்து பார்த்தாயா?

**தாய்:** ஆகா; மங்களூரில் இருக்கும்போது தலைக் காவேரிக்கு அழைத்துக்கொண்டு போனுன். கண்ணம்பாடியில் இருக்கும்போது தசராவில் மைஸூருக்கும் பிறகு திருநாராயணபுரத்துக்கும் அழைத்துக் கொண்டு போனுன்.

**தந்தை:** சம்பந்தி எப்படி இருக்கிறுர்?

**தாய்:** இப்போது வைஷ்ணவம் கொண்டாடுகிறுர். பலன் என்னவென்றுல் நம்ப மணிக்குச் சங்கடமாக இருக்கு.

**தந்தை:** மணி யாரு?

**தாய்:** உங்கள் பேரன். உங்கள் பெயர் வச்சிருக்கு. மணி என்று கூப்பிடுகிறது. என்ன நடக்கிறது தெரியுமா? லீவுக்குத் தாத்தா வீட்டிற்கும் போகிறுன். சம்பந்திப் பிராம்மணன் முதலில் அவனுடைய 'கிராப்'பை எடுத்துக் குடுமி வைக்கச் சொன்ன பிறகு தான் வீட்டிற்கு உள்ளே அழைத்துக்கொள்ளுகிறுர். பிறகு லீவு முடிந்த பின் நம்மாத்துக்கு வருகிறுன். பையன் அவனை உடனே 'ஸலூனு'க்கு அனுப்பி மறுபடியும், 'கிராப்' பண்ணிக்கச் சொல்லு கிறுன். இப்படி மணிக்கு, தடவைக்குத் தடவை தலை மாறுகிறது.

**தந்தை:** மாட்டுப் பெண் எப்படி?

**தாய்:** மகா கெட்டிக்காரி. பிறந்தாத்தில் அப்பா கட்சி; புக்காத்தில் பையன் கட்சி; ஆசாரத்துக்கு ஆசாரம், லௌகிகத்துக்கு லௌகிகம். குடித்தனம் சமத்தாய்ச் சிக்கனமாய்ப் பண்ணுகிறுள்.

**தந்தை:** சரி; ரவி என்ன செய்கிறுன்? அவனைப்பத்திக் கொஞ்சம் கவலை எனக்கு இருந்ததே.

**தாய்:** ஆமாம். ஞாபகம் வருகிறது. நுனி விரல்களால் சாப் பிடுவான். நீங்கள்கூட, 'அள்ளிச் சாப்பிடத் தெரியாத பிள்ளை எப்படிப் பிழைக்கப் போகிறதோ?' என்று சொல்வீர்களே!

**தந்தை:** ஆமாம்.

**தாய்:** இப்பவும் அதே நிதானம். மெதுவான பேச்சு. எல்லோரையும் நம்பும் குணம். பொம்மனுட்டிகளைக் கண்டால் தலையைக் குனிந்து போகிறது.

**தந்தை:** எங்கே இருக்கான் ரவி?

**தாய்:** அவனுக்கு வடக்கே வேலை. லீவுக்கு வந்திருந்தான். அவனுக்கு ரொம்பப் பிடிக்கு மேன்னு, மணத்தக்காளிக் காய்க் குழம்பும் மிதி பாகற்காய் வதக்கலும் பண்ணிப் போட்டேன். நானும் அவன் இருக்கும் இடத்திற்குப் போயிருந்தேன். ஹரித்துவாரம், குரு க்ஷேத்திரம் எல்லா இடங்களுக்கும் அழைத்துக்கொண்டு போனான்.

**தந்தை:** ஏம்மா, ரவிக்கு ஏதாவது குழந்தைகள் பிறந்திருக்கா?

**தாய்:** ஏன் ? பிள்ளை ஸாத்விகம் என்றால் குழந்தை பிறக்காதா ? முதலில் பெண் பிறந்தது. எனக்குக் கொஞ்சம் கவலையாக இருந்தது.

**தந்தை:** ஏன் ?

**தாய்:** அப்புறம் பிறக்கிறதெல்லாம், மச்சினருக்குப் பிறந்தாப் போல், பெண்களாகவே பிறக்குமோ என்று பயந்தேன். இல்லை; அப்புறம் இரண்டு பிள்ளை பிறந்தது.

**தந்தை:** ரவிக்கு எங்கே கல்யாணம் ?

. **தாய்:** நம்மூருக்குப் பக்கத்திலேயேதான் ; அவனுக்குத் தகுந்தாப் போல் ஒரு சம்பந்தி !

**தந்தை:** ஏன் ? பையன் மாமனார்போல் இல்லையா ?

**தாய்:** இல்லை. இவர் வேறு தினுஸு. ஆற்றல் அதிகம் இல்லை கிராமத்திலேயே இருப்பவர். மனுஷர் நல்லவர். மேலும் ஏக புத்திர விஷயம். தகப்பனார் பால்யத்திலேயே போய்விட்டார். வீட்டில் மூன்று கிழவிகளின் ஆதிக்கத்தின் கீழ் வளர்ந்து வந்தவர்.

**தந்தை:** ரவியின் அகமுடையாள் எப்படி ?

**தாய்:** அவளா ? சிறுசாய், மடிசாறு வச்சுக் கட்டிக்கொண்டு பார்க்கிறதற்கு ஆண்டாள்போல் இருப்பாள். நல்ல இனிமையான சாரீரம். கோவலன் பாட்டு, குசேலர் அவல் கொண்டுபோன பாட்டு இன்னும் என்னவெல்லாமோ கீர்த்தனங்களை எல்லாம் பாடச்சொல்லிக் கேட்டிருக்கேன். வினை, வஞ்சகம் ஒண்ணும் தெரியாது. வேடிக்கை வேடிக்கையாகப் பேசுவாள்,

**தந்தை:** ஏம்மா, நான் இருக்கச்சயே ரவி ஏதோ கவி, கதை யெல்லாம் கொஞ்சம் விநோதமாக எழுதுவனே, இப்பவும் எழுதறனா ?

**தாய்:** ஆகா. நாடகங்கூட ஏதோ எழுதிப் போட்டானும். நானும் இரண்டு, மூன்று ரேடியோவில் கேட்டேன். அதைப்பத்தி என்னை யாராவது கேட்டால், 'ஆமாம், என்னவோ எழுதறான். கெட்டியா ஆயுஸோடே அவன் நன்னா யிருந்தால் போரும் நேக்கு !' என்பேன்.

**தந்தை:** நம்பாத்து ரெட்டை மண்டை எப்படி இருக்கான் ? மகா அஷ்ட ஞச்சே ! பர பரவென்று ஏதாவது செய்துகொண்டே இருக்கணுமே அவனுக்கு. மேஜையை மாசத்திற்கு நாலைந்து தடவை இடம் விட்டு இடம் மாத்துவனே. கேள்விகள் கேட்டு, கோபால்ராவிடம் படிச்ச என்னைக்கூட மடக்குவனே !

**தாய்:** லக்ஷ்மியா? உங்க தசாஸ்ஸுக்கு ஊருக்கு வந்துவிட்டு உடனே பட்டணத்துக்குப் பரீட்சைக்குப் போனான். ரொம்ப ஒசத்தியாய்ப் பாஸ் பண்ணினான்; பரிசுகள், மெடல்கள் எல்லாம் வாங்கினான். ஐ. ஸி. எஸ். பாஸ் பண்ணினான்; உங்க மாமா சந்தோஷம் பூரித்து, ஈடு போருமா என்பதைக்கூடக் கவனிக்காமல் தன்னுடைய ஒன்பது வயசுள்ள பேத்தியை அவனுக்குக் கல்யாணம் பண்ண வேணுமென்று முயன்றார்.

**தந்தை:** ஆனால் அவனுக்கு எங்கே கல்யாணம்?

**தாய்:** கோயம்புத்தூரில் பிரதிவாதி பயங்கரம் வம்சம்.

**தந்தை:** ஏது, பயங்கரமா யிருக்கே!

**தாய்:** இல்லை. சம்பந்தி ரொம்ப நல்ல மாதிரி; பெரிய மனஸுடையவர். பொண்ணும் லக்ஷணம் பொருந்தியவள். அழகான மாட்டுப்பொண், நம்பாத்துக்கு இருக்கட்டுமே என்றுதான் தென்கலை யானாலும் பரவாயில்லை என்று சொன்னேன்.

**தந்தை:** லக்ஷ்மி மகா கோபக்காரன் ஆச்சே. அகமுடையாளை அடிக்காமல் இருக்கானா?

**தாய்:** அவன் என்ன பழைய நாள் லக்ஷ்மி என்று எண்ணினீர்களா? டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் ஆக்கும்!

**தந்தை:** அப்பா!

**தாய்:** சின்ன வயசிலிருந்த கோபம் எல்லாம் பறந்துபோய் விட்டது. அவனிடமும் போய் இருந்தேன். 'கட்டக்'கில் கலெக்டர் பண்ணினான்.

**தந்தை:** எங்கே? ஒரிஸ்ஸாவில் இருக்கும், 'கட்டக்'கா?

**தாய்:** ஆமாம், மகாநதி ஸ்நானம் கிடைத்தது. அப்புறம் காசி, பிரயாகை எல்லா இடங்களுக்கும் அழைச்சுண்டு போனான்.

**தந்தை:** சிறுசிலே இருந்தே அவன் பொறுப்பாளி ஆச்சே. 'மாட்டேன், மாட்டேன்' என்று சொல்லிக்கொண்டே கடைசியில் எல்லாத்தையும் நாம் சொன்னபடியே செய்து முடிப்பனே.

**தாய்:** ஆமாம்.

**தந்தை:** சரி; நம்ம கடைக்குட்டி என்ன பண்ணுறன்? 'நான் தான் சிவாஜி' என்று சொல்லிக்கொண்டு பசங்களைச் சண்டைக்கு இழுப்பானே.

**தாய்:** வருதுவா? அம்மாடா! கடைசியில் கல்யாணம் பண்ணிக் கொண்டான்.

**தந்தை:** என்ன அதை அவ்வளவு பெருமையாய்ச் சொல்லறே?

**தாய்:** ஆமாம், கல்யாணம் பண்ணிக்கவே மாட்டேன் என்று ஒரே பிடியாக இருந்தான். பள்ளிக்கூடத்து வாத்தியாராக இருப்பதே போரும் என்று சொல்லிக்கொண்டு, 'கல்யாணம் எதுக்கு, ஸந்ததி

எதுக்கு, ஆஸ்தி எதுக்கு, சம்பாத்தியம் எதுக்கு' என்று எப்பவும் கோணக்கட்சி பேசிக்கொண்டிருந்தான். கடைசியில், அவனுக்குத்தான் அலுத்துப் போச்சோ அல்லது என்ன தோணித்தோ, பண்ணிக்கிறேன் என்று ஈரொட்டாய்ச் சொன்ன சமயம் பாத்துப் புத்தியை மாத்துவதற்கு முன், பையன் ஒரு பொண்ணைப் பாத்து நிச்சயம் பண்ணி ஏற்பாடு பண்ணிவிட்டான்.

**தந்தை:** பொண் எப்படி இருக்காள் ?

**தாய்:** பொண் ஒசந்த வரன்.

**தந்தை:** அப்படியா ?

**தாய்:** மாட்டுப் பொண்களை நிக்க வச்சுப் பார்த்தால் பாக்கிப் பேரைக் காட்டிலும் ரங்கநாயகி ஒரு பிடி ஓசரம்; வருது, அகமுடையாளைப் பிரியமாய் வச்சுக்கொண்டிருக்கான். மாமனார் இல்லை. ஆனால் மாமியார் மகா கெட்டிக்காரி. விதரணை தெரிஞ்சவள்.

**தந்தை:** சின்ன வயசில் பள்ளிக்கூடம் போகமாட்டேன் என்பானே; இப்போ பள்ளிக்கூடத்து வாத்தியாராக இருப்பது வருதுவுக்குப் பிடிச்சிருக்கா ?

**தாய்:** பேஷாய் ! என்ன அவனைப் பழைய காலத்து வாத்தியார் என்று எண்ணினீர்களா ? எல்லாம் அவன் புது தினுசு; பசங்களை அடிப்பதே கிடையாது. சாந்தமாகவும் தெளிவாகவும் சொல்லித் தருகிறான். பேரன்களுக்கெல்லாம் வருது என்றால் ஒரே குதூகலம். நோட்டுப் புஸ்தகங்கள் கலர் பென்ஸில் எல்லாம் வாங்கிக் கொடுக்கிறான். யோகாசனமெல்லாம் சொல்லிக் கொடுக்கிறான். காலமே எழுந்தவுடன் பார்த்தால் ஒண்ணு, ஒத்தைக் காலில் நின்று குதிக்கிறது; இன்னொண்ணு பத்மாஸனம் கொண்டு இருக்கு; வேறொண்ணு தலைகீழாக நிக்கறது. கும்பகோணத்திற்கு வந்தானானால் மருமான்கள் அவனையே எப்பவும், 'மாமா, மாமா' என்று சுற்றிக்கொண்டிருப்பா.

**தந்தை:** கும்பகோணம் என்றவுடன் குட்டியின் நினைவு வருகிறது. மரப்பாச்சிபோல் இருப்பளே. உன்னிடம் எதுக்காவது அடிபட்டால், 'நானு, நானு' என்று தெலுங்கு பாஷையில் கூப்பிட்டுக்கொண்டு வருவளே. குழந்தை எப்படி இருக்கா ? எங்கம்மாபோல் லக்ஷ்மீ கடாக்ஷம் பொருந்திய முகம் ஆச்சே அவளுக்கு.

**தாய்:** நீங்க சீக்கிரம் வந்துவிட்டதால் நான் அவளிடந்தான் இவ்வளவு நாள் இருந்தேன். 'உத்தியோகத்தில் இருக்கும் பிள்ளைகளுடன் இராமல் பெண்ணினிடம் ஏன் இருந்தாள் ?' என்று சிலர் ஆச்சரியப்பட்டார்கள். படிக்க வச்சுக் கல்யாணம் செய்துவிட்ட பிறகு பிள்ளைகளிடம் பிரியம் எவ்வளவு இருந்தாலும் எனக்கு இருப்பில்லை. என் ஆதரவு பொண்ணுக்கு வேண்டியிருந்தது. அவளிடமே இருந்தேன்.

தந்தை: சரிதான். மாப்பிள்ளை இப்போ எப்படி இருக்கார்? கொஞ்சம் கண்டிப்பு மனிதர் என்று தோணித்தே. ஜயத்தினிடம் பிரியமா யிருக்காரா?

தாய்: முதலில் எல்லாம் கொஞ்சம் முறுக்காகத்தான் இருந்தார். நாங்கள் ஊருக்கு வருகிறோம் என்று தெரிந்துங்கூட ஸ்டேஷனுக்கும் வராமல், வீட்டிலும் இல்லாமல் டௌன் ஹாலுக்குப் போய்விட்டார். இப்போ ரொம்பத் தேவலே. பிரியமாகத்தான் இருக்கார் என்று சொல்லலாம்.

தந்தை: ஜயத்திற்குக் குழந்தைகள் எத்தனை?

தாய்: இரண்டு பிள்ளைகள் பள்ளிக்கூடம் போகிறார்கள். பூணல் போட வேணும்; அதன் பிறகு வரலாம் என்ற அஞ்ஞானம் எனக்கு. ஆனால் காரியம் முடிந்துவிட்டது என்ற நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. அதோடு தேகமும் கொஞ்சம் அசௌக்கியப்படவே ஒருவருக்கும் கஷ்டம் வேண்டாம் என்று எண்ணி வந்துவிட்டேன்.......ஏன்னா எல்லாம் என்னைப்பத்தியே விசாரித்தீர்களே தவிர, உங்களைப்பத்தி ஒண்ணுமே சொல்ல வில்லையே!

தந்தை: சாவகாசமாகச் சொல்லுகிறேன். இப்போ இதைச் சாப்பிடு, இவ்வளவு நாழி பேசினது களைப்பா யிருக்கும்.

தாய்: அது என்ன?

தந்தை: அமிர்தம்.

தாய்: களைப்பைத் தீர்க்க, 'காப்பி' போல் இருக்குமா?

தந்தை: சாப்பிட்டுவிட்டுச் சொல்லு. அமிர்தத்துக்கு ஈடுகட்ட முடியுமோ, அம்மா!

# சுயம்வரம்

**பாத்திரங்கள்**

பரிமளா

பார்வதி

ஸம்பத்

ஸதானந்தம்

காளிதாஸ்

பரிமளா ஒரு நாகரிகப் பெண், படித்தவள், பட்டண வாஸி. அவளுடைய தாய் பார்வதி என்பவள் பழைய மோஸ்தரா யிருந்தாலும் சில புதிய கொள்கைகள் உள்ளவள். சமையல் அறையில் இருந்து பரிமளாவின் அறைக்குச் செல்கிருள்.

பார்வதி: *பரிமளா, என்ன பண்ணிக்கொண் டிருக்கே? ஏம்மா, பரீட்சைதான் பாஸ் பண்ணிவிட்டாயே, வெறும்மனே புஸ்தகம் எதுக்கு? (பரிமளாவிடம் வந்து) என்னடீது? ஒரே கிறுக்கலாய்க் கிறுக்கித் தள்ளி யிருக்கயே! மேஜைமேல் இருக்கும் காகிதம் எல்லாத் திலும் வரைஞ்சு வச்சிருக்கயே. ஏதாவது கதை எழுதறயா?.... இது நல்ல வேலைய டீம்மா! ஒரு காகிதம் பாக்கி இல்லாமல், 'பரிமளா, பரிமளா' என்று உன்னுடைய பேரைத் திரும்பத் திரும்ப எழுதி யிருக்கயே! போது போகாதபோனல் நான் இல்லையோ? என்னேடு வந்து பேசப்படாதோ? இப்படி என்னத்துக்கு ஒரு பேபர் பாக்கி யில்லாமல் உன் பேரைக் கிறுக்கிக்கொண் டிருக்கே? ஸ்ரீ ராமஜயம் என்று எழுதினு லாவது புண்ணியம் உண்டு. பரிமளா, எழுந்திருந்து உள்ளே வா.*

பரிமளா: *அம்மா, எனக்கு என்ன பண்ணுவது என்று தெரிய வில்லை. மனசு கொஞ்சம் நிதானம் இல்லாமல் இருக்கு. அதுதான் இப்படிக் கிறுக்கிக்கொண்டே இருந்தேன்.*

பார்வதி: *மனசில் ஏன் நிதானம் இல்லே? நன்னுய்த்தான் பாஸ் பண்ணி யிருக்கயே. இனிமேல் நல்ல வரனைப் பார்த்து உனக்குக் கல்யாணம் பண்ணி வைக்க வேணும்.*

பரிமளா: *இதே விஷயத்தைப்பத்தித்தான் எனக்கும் கவலே.*

பார்வதி: *உனக்கென்ன கவலே? நானும் உன் அப்பாவும் எதுக்கு இருக்கோம்? எங்களுக்குத் தெரியாதா?*

பரிமளா: *இல்லே அம்மா. உங்கள் இருவரைத் தவிர வேறு மூணு பேர்கள் என்னுடைய கல்யாண விஷயத்தில் மும்முரமாக இருக்கிருர்கள். அதுதான் எனக்குக் கவலே.*

பார்வதி: *அவா யாரு?*

பரிமளா: *இதோ சொல்லுகிறேன்: அவா என்னேடு படிச்சவா. (டெலிபோன் மணி அடிக்கிறது.) பரிமளா, 'ஸ்பீக்கிங்'. ஸம்பத்தா? உன் கடிதாசு இன்னிக்கு வந்தது. பதிலா? டெலிபோனில் பதில் வேணுமோ? அப்பா அம்மாவிடம் இன்னும் பேசவில்லே.... நேரவே பேசணுமா? ஆகா, இப்பவேயா? சரி.*

பார்வதி: ஸம்பத்து யாரு?

பரிமளா: மூனு பேர் என்றேனே, அவர்களில் ஒருவன். என்னைக் கல்யாணம் பண்ணிக்க வேணுமாம். டெலிபோனில் பதில் கேட்கிறான்.

பார்வதி: நன்னா யிருக்கு!

பரிமளா: கணித சாஸ்திரத்தில் ராஜதானிக்கு முதலில் பாஸ் செய்தவன் அவன். கொஞ்சம் பரக்காவெட்டியே தவிர அவனுக்குத் தலை முழுவதும் மூளை. உனக்கு ஐ. ஸி. எஸ். மாப்பிள்ளை வேணுமானால் வேறு எங்கேயும் வரன் தேட வேண்டாம்.

பார்வதி: ஐ. ஸி. எஸ். ஸா இந்தப் பிள்ளை?

பரிமளா: இன்னும் இல்லை. பணம் கொடுத்துச் சீமைக்கு அனுப்பினாயோ அடுத்த வருஷம் நிச்சயமாக அவன் ஐ. ஸி. எஸ். ஆயிடுவான்.

பார்வதி: சரி; பாக்கிறத்துக்கு எப்படி இருப்பான்?

பரிமளா: துறு துறுவென்றிருப்பான். (டெலிபோன் மணி அடிக்கிறது.) பரிமளா, 'ஸ்பீக்கிங்'. ஸதானந்தமா? ரொம்ப ஆனந்தம்; உன் கடிதாசு வந்தது. ஸம்பத் உனக்கு டெலிபோன் பண்ணினானா? அதனால் என்ன? நீயும் வாயேன்; சரி. .

பார்வதி: இந்தப் பிள்ளை யார்?

பரிமளா: நான் சொன்ன வரன்களில் இரண்டாம் புள்ளி. ஸதானந்தம், பொருளாதார சாஸ்திரத்தில் புலி. சுய நலம் என்பது லவலேசமும் கிடையாது. முன்னேற்றந்தான் அவனது முக்கியக் கொள்கை. குணத்தில் பத்தரை மாத்துத் தங்கம். வாக்கு வன்மை அபாரம். உனக்கு உன் ஆயுளில் பிரதம மந்திரியின் மாமியாராக ஆக வேண்டுமென்று ஆசை இருந்தால் நான் ஸதானந்தத்தைத்தான் மணந்துகொள்ள வேண்டும்.

பார்வதி: இப்போ அவனுக்கு, சொத்து ஏதாவது இருக்கா?

பரிமளா: சொத்தா? அவனுடைய அப்பா வருஷத்துக்கு நாலாயிரம் ரூபாய்க்குமேல் வருமான வரி கொடுக்கிறார்.

பார்வதி: தேவலை. பிள்ளையாண்டான் எப்படி இருப்பான்?

பரிமளா: ஒத்தை நாடி. சோம்பல் கிடையாது. பம்பரமாகச் சுத்திக்கொண்டிருப்பான். வெங்காயம், உள்ளிப்பூண்டு எல்லாம் தள்ளுபடி. ரிக்ஷாவில் ஏறமாட்டான்.

பார்வதி: பின் என்ன வேண்டும்?

பரிமளா: எல்லாச் சீர்திருத்த சங்கங்களுக்கும் உதவிக் காரியதரிசி. ராத்திரிப் பதினொரு மணிக்கு முன்னால் வீட்டிற்கு வரமாட்டான். (டெலிபோன் மணி அடிக்கிறது.)

பார்வதி: இது யார்? மூன்றாம் புள்ளியா?

பரிமளா: பரிமளா, 'ஸ்பீக்கிங்'. காளிதாஸா ? உன் கடிதமும் கிடைத்தது. ஸதானந்தம் டெலிபோன் பண்ணினுனு ? நீயும் வா.... இங்கேயா ? ஒருவரும் இல்லே. எங்கம்மாதான். மேனகையா ?.... ஹா.....ஹா.....(சிரிக்கிருள்.) நேரே வந்து பார்.

பார்வதி: மேனகை யாரு ?

பரிமளா: நீதாணும்.

பார்வதி: என்னது ?

பரிமளா: ஆமாம், அம்மா. உன்னேத்தான் காளிதாஸ் மேனகை என்முன்.

பார்வதி: எதற்காக ?

பரிமளா: இவனுக்குக் கொஞ்சம் கவித் திறமை உண்டு; கலாபிமானம் உண்டு. வர்ணனே என்ருல் உயிர். என்னேச் சகுந்தலா என்றுதான் அழைப்பான்.

பார்வதி: ஏன் ? பரிமளா என்ற பெயர் உனக்கு நன்னுல்லேயா?

பரிமளா: இல்லே யம்மா. ஒரு நாள் என்னுடைய மோதிரம் கை நழுவிக் கீழே விழுந்துவிட்டது. நான் அதைக் கவனிக்க வில்லே. காளிதாஸ்தான் எடுத்துக் கொண்டுவந்து கொடுத்தான். அப்போ திருந்து என்னேச் சகுந்தலா என்று அழைப்பான். வேருெரு சந்தர்ப் பத்தில் அசல் சகுந்தலே, துஷ்யந்தனிடம் புறப்பட்டுப் போகும்போது வழியில் மோதிரத்தைத் தொலேத்துவிட்டுப் படாத கஷ்டப்பட் டாளே ; ஞாபகம் இருக்கா, உனக்கு ?

பார்வதி: அதற்காக என்னே எதற்கு மேனகை என்முன் ?

பரிமளா: சகுந்தலேயின் அம்மா மேனகை இல்லேயா ? காளிதாஸ் போக்கே அப்படித்தான். அவன் ஒரு கலேப் பித்தன். அழகு என்ருல் உலகத்தையே மறந்துவிடுவான். வாழ்க்கை என்பது அழகுடைய மங்கையரை மாற்றி மாற்றிக் கண்டுகொண் டிருக்கும் கனவு என்பான். என்னேப்பத்தி அநேகம் கவிதைகள் கோத்திருக்கிருன். ஒன்றின் பெயர், 'பரிமளா தண்டகம்!' வாசித்துக் காட்டட்டுமா ? 'நோபல் பிரைஸ்' வாங்கக் கூடிய மாப்பிள்ளே உனக்கு வேண்டுமாளுல் காளி தாஸைத் தவிர வேறு ஒருவரும் இங்கே இல்லே.

பார்வதி: அதெல்லாம் இருக்கட்டும். பரிமளா, நீ இப்போ என்ன செய்யப் போகிருய் ? மூணு பேரையும் வரச் சொல்லி யிருக்கயே ?

பரிமளா: உன் அபிப்பிராயம் என்ன ?

பார்வதி: ஐ. ஸி. எஸ். ஒசத்திதான். ஆனுலும் பிரதம மந்திரியாக இருப்பது அதைவிட ஒசத்தி யில்லேயா ? அதோடு பிள்ளேயும் நல்ல மாதிரி.

பரிமளா: எந்தப் பிள்ளே ?

பார்வதி: ஸதானந்தம்.

பரிமளா: அவனை நீ இன்னும் பார்க்க வில்லையே!

பார்வதி: அதனால் என்ன? அவப்பா நாலாயிரம் ரூபாய் வருமான வரி கொடுக்கிறார் என்றாயே!

பரிமளா: காளிதாஸுக்கு மாத்திரம் என்னம்மா குறைவு? 'பரிமளா தண்டக'த்தை வாசிக்காமலேயே அவனைத் தள்ளி விடலாமா?

பார்வதி: இவர்களில் யாரை உனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு?

பரிமளா: அது தெரிஞ்சால் நான் ஏன் உன்னைக் கேட்கிறேன்........(வாசற் கதவை யாரோ தட்டுகிறார்கள்.) அதோ வந்துவிட்டார்கள்போல் இருக்கு. கதவைத் திற, அம்மா. (ஸம்பத், ஸதானந்தம், காளிதாஸ் மூவரும் உள்ளே வருகிறார்கள்.) அம்மா, இவர்தான் ஸம்பத்.

ஸம்பத்: நமஸ்காரம்.

பரிமளா: இவர்தான் ஸதானந்தம்.

ஸதானந்தம்: மாதரம் வந்தே.

பரிமளா: இவர்தான் காளிதாஸ்.

காளிதாஸ்: தாயாருக்குத் தகுந்த பெண். உங்களை மாதாவாகக் கொண்ட பெண்மணியை பிரம்மச்சாரி உலகம் சரணாகதி அடைந்தாலும் பொருந்தியிருக்கும்.

பரிமளா: சரி......இப்போ கொஞ்சம் தாக சாந்தி செய்து கொள்ளுங்கள். ஸம்பத், இந்தா உனக்கு, 'டிகாக்ஷன்' நிறையச் சேர்த்த காபி.

ஸம்பத்: "தாங்க்ஸ்"

பரிமளா: ஸதானந்தம், உனக்கு உப்பும் கறி வேப்பிலையும் போட்ட மோர். காளிதாஸ், உனக்கு இந்தா காய்ச்சின பால்.

காளிதாஸ்: பாலும் சுவையும் கலந்து அளிக்கும் பரிமள வல்லியே! எனக்கு உன் பாணியையும் தருவாய்.

பரிமளா: அவசரப்படாதே. இந்த விஷயத்திற்காகத்தான் நீங்கள் மூவரும் இங்கே வந்திருக்கிறீர்கள். இதோ அம்மாவும் இருக்கிறாள். நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள். பிறகு என்னுடைய தீர்மானத்தைத் தெரிவிக்கிறேன்.

ஸம்பத்: தீர்மானம் செய்துவிட்டாயா?

பரிமளா: இல்லை, நீங்கள் எல்லாரும் பேசின பிறகுதான்.

ஸம்பத்: உங்கப்பாவைக் கேட்டாயா?

பரிமளா: அம்மாவும் நானும் சம்மதித்தால் அப்பாவைக் கேட்க வேண்டிய அவசியம் இல்லை,

ஸ்தானந்தம்: அது சரியாகாது. ஒவ்வொருவனுக்கும் தன்னுடைய அபிப்பிராயத்தை வெளியிடச் சுதந்தரம் உண்டு. பிறர் சொல்லைக் கேட்டு, ஆட்டு மந்தையைப்போல் போகக் கூடாது. என்ன காளிதாஸ் ?

காளிதாஸ்: முற்றும் சரி. 'சுதந்தரமே உயிரென்று துணிவேன் யானே!'

பரிமளா: சுதந்தரம் எனக்கு வேண்டாமா? நான்தானே கல்யாணம் பண்ணிக்கிறவள்? சரி; நமக்குள் ஒன்றையும் மறைக்க வேண்டாம். உங்களுடைய அசல் மனஸை அப்படியே சொல்லுங்கள். ஸம்பத், முதல் வாக்கு உன்னுடையது.

ஸம்பத்: ஏதோ ஒரு மகாநாட்டைத் திறந்து வைப்பவள் போலப் பேசுகிறுயே. சரி, விஷயம் இதுதான்: நீயும் நானும் ஒன்ருகப் படிச்சவா. என் படிப்பு முடிந்தாய்விட்டது. கல்யாணம் பண்ணிக்கணும். உன்னைத்தான் பண்ணிக்க வேணும்.

பரிமளா: ஏனோ ?

ஸம்பத்: ஐ. ஸி. எஸ். பரீட்சையில் மொத்தம் 1700 மார்க்கு. கணிதத்தில் 800-க்கு 700 வாங்கி விடுவேன். பாக்கி 900-க்கு அதும பட்சம் 400 வரும். மொத்தம் 1100 கிடைக்கும். 3-ஆவது அல்லது 4-ஆவதாக நிச்சயம் வருவேன்.

பரிமளா: ஆகையால் ?

ஸம்பத்: உன்னைக் கல்யாணம் பண்ணிக்க வேணும். எனக்கு வரதக்ஷிணை ஒன்றும் வேண்டாம். என்னைச் சீமைக்கு அனுப்பப் பண உதவி செய்யச் சொல்லு, உங்கப்பாவெ. பாஸ் பண்ணிவிட்டு வருகிறேன். திருப்பிக் கொடுக்கணும் என்ருல் வேலை ஆன பிறகு மாசம் மாசமாகக் கொடுத்துவிடுகிறேன்.

பார்வதி: நீ சொல்றது சரிதான். ஆனுல் ஒரு வேளை....... சொல்வதற்கு அச்சான்யமா யிருக்கு. இருந்தாலும் சொல்லி விடுகிறேன். நீ பாஸ் பண்ணுவிட்டால் ?

ஸம்பத்: இன்னொரு தரம் பரீட்சை கொடுத்துப் பாஸ் பண்ணின பிறகுதான் இந்தியாவுக்குத் திரும்புவேன்.

பரிமளா: அதைப்பற்றிச் சந்தேகம் வேண்டாம், அம்மா. ஸம்பத் பாஸ் பண்ணுவிட்டால் ஒருவனுலும் பாஸ் பண்ண முடியாது. அவன் பரீட்சைக்கென்றே பிறந்திருக்கிருன்.

பார்வதி: அது சரி, ஆனுல்—

ஸம்பத்: தயக்கம் என்ன, மாமி? நான் எல்லாத்தையும் உடைத்துச் சொல்லவில்லையா? மனஸில் தோன்றுவதை அப்படியே சொல்லுங்கோ.

பரிமளா: சொ.......மா.

பார்வதி: நீயோ சிறுபிள்ளை. அங்கே ஏதாகிலும் வெள்ளைக் காரப் பெண் உன்னை மயக்கிவிட்டாளானால் என்னவாகும் என்று பயப்படுகிறேன்.

ஸம்பத்: பயம் வேண்டாம், மாமி. மயங்கி விழறவனாக இருந் தால் சீமைக்கு எதுக்குப் போகணும்? நம்முடைய தேசத்திலேயே அதற்கு வேண்டிய பேர் இல்லையா?

ஸதானந்தம்: இருக்கிறார்கள். அவர்களின் வாழ்க்கையைச் சீர்திருத்தி, அவர்களை முன்னேற்றம் அடையச் செய்ய வேண்டும் என்பதே என்னுடைய முக்கியக் கொள்கைகளில் ஒன்று.

பரிமளா: அது இருக்கட்டும். ஸம்பத், நீ எல்லாம் சொல்லி முடித்தாய் விட்டதா?

ஸம்பத்: ஆகா.

பரிமளா: நான் எதற்காக உன்னைக் கல்யாணம் பண்ணிக்க வேண்டும் என்று சொல்ல வில்லையே?

ஸம்பத்: அதை நீதான் சொல்லவேண்டும்.

பரிமளா: உனக்காக ஒரு காரணமும் தோன்றவில்லையா?

ஸம்பத்: ஆகா! உனக்கும் படிப்பு முடிவடைந்துவிட்டது. கல்யாணத்துக்கு வயசும் ஆச்சு. இனிமேல் ஏன் தாமதம்?

பரிமளா: சரி....ஸதானந்தம், நீ என்ன சொல்ல விரும்பு கிறாய்?

ஸதானந்தம்: ஸ்வல்பம். சரியான ஆராய்ச்சி செய்யாமல் எந்தக் காரியத்திலும் துணியக் கூடாது. அதோடு எந்த விஷயத்திலும் ஓர் உன்னத நோக்கம் வேண்டும். இதுதான் முன்னேற்றத்திற்கு இன்றியமையாதது.

பரிமளா: இந்த உபந்நியாசத்திற்கும் எனக்கும் என்ன சம்பந்தமோ?

ஸதானந்தம்: இதோ சொல்லுகிறேன். நான் கல்யாணம் பண்ணிக்கொள்ள விரும்புகிறேன். யாரை? படித்த பெண்ணை; விசால நோக்கமுடையவளை. முன்னேற்ற அனல் எவளுடைய உள்ளத்தைப் புனிதப்படுத்துகிறதோ அவளை. சுதந்தர தாகம் உள்ளவளை. மனித வாழ்க்கைக்கு வேண்டியது எது? - சுதந்தரம். நம் நாட்டிற்கு வேண்டியது எது? - முன்னேற்றம்.

பார்வதி: இதில் பரிமளா எந்த வகையைச் சேர்ந்தவள்?

ஸதானந்தம்: எல்லா வகையையும் சேர்ந்தவள். பரிமளா பற்றற்றவள். மோகம் என்பது அவளிடம் இல்லை. சுயமரியாதை அதிகம். தைரியம் அபாரம். என்னை அவள் கல்யாணம் செய்து கொண்டால் நம் நாட்டு ஸ்திரீகள் வெகு சீக்கிரம் முன்னேற்றம் அடைவார்கள்.

பார்வதி: ஆனால் நீ வீட்டிற்கு ராத்திரிப் பதினொரு மணிக்கு முன்னால் வரமாட்டாயாமே, வாஸ்தவந்தானா ?

ஸதானந்தம்: மணிக்கு என்ன மாமி? கடியாரத்திற்குச் சாவி கொடுத்தால் மணி ஓடுகிறது. கொடுக்காவிட்டால் நிற்கிறது. ஆனால் முன்னேற்றம் என்பது ஒரு நாளும் தடைப்படாது. பரிமளாவும் அதில் ஈடுபடட்டும்.

பரிமளா: சரி, நான் உன்னை ஏன் கல்யாணம் பண்ணிக்க வேண்டுமென்று சொல்லவில்லையே.

ஸதானந்தம்: சொல்லவும் வேணுமா ? உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்குகிறதே.

பரிமளா: உள்ளங்கையில் நெல்லிக்கனி இல்லை. சுருங்கச் சொல்லு.

ஸதானந்தம்: இதோ சொல்லுகிறேன். கல்யாணம் என்ற ஏற்பாடு வாழ்க்கைக்கு ரொம்பப் பிரதானமானது. அதை எந்த மகான் முதல் முதலாகக் கண்டு பிடித்தாரோ அவரை நான் முடி வணங்குகிறேன். கல்யாணம் என்ற ஏற்பாட்டிற்கு முன்னால் மானிட இனம் வாழ்க்கையை எப்படி நடத்துவது என்று தெரியாமல் தத்தளித்தது. மனிதனின் முதல் முன்னேற்ற வெற்றி கல்யாணம்; என்னுடைய முன்னேற்ற முயற்சியின் முதலாவது மைல்கல் கல்யாணமே.

பரிமளா: போரும். காளிதாஸ், நீ என்ன சொல்ல விரும்பு கிறாய் ?

காளிதாஸ்: ஒரே ஒரு வார்த்தை.

பரிமளா: அது என்ன ?

காளிதாஸ்: பரிமளா.

பார்வதி: நீ எதற்காகப் பரிமளாவைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் ?

காளிதாஸ்: 'பரிமளா தண்டக'த்தில் சொல்லியிருக்கிறேனே.

பரிமளா: அது கிடக்கட்டும். தமிழில் சொல்லு. அம்மா வுக்குப் புரியும்படி சொல்லு.

காளிதாஸ்: ஆஹா, மாமி! என்னைப்பற்றி நீங்கள் கொஞ்சம் அறிய வேண்டும். நான் இரவில் தூங்குபவன். பகலில் கனவு காண்பவன். ஜகன்மாயையை நன்கு அறிந்தவன். ஸௌந்தரியம் ஒன்று தான் இப் பெரும் மாயையைத் தாண்டி நிற்பது. உதய சூரியன், சந்திர கலை, நக்ஷத்திர கணங்கள், பெண்மணிகளின் நடை, புன் முறுவல், கொண்டை அழகு, வானவில், நதிப் பிரவாகம், மலைச் சிகரம் இவைபோன்ற தோற்றங்களே என் உயிர். ஸீதை, அகலிகை, தமயந்தி, திரௌபதி, ராதை இவர் போன்றவர்களே மாயையைக்

கடந்தவர். இன்றும் நான் அவர்களை என் பகற் கனவுகளில் காண்கிறேன்.

பார்வதி: பரிமளாவிற்கும் நீ சொல்வதற்கும் என்ன சம்பந்தம்?

காளிதாஸ்: என்ன சம்பந்தமா? பரிமளாவைத்தான் நான் கலியுகத்தில் கண் கண்ட தெய்வமாகக் கருதுகிறேன். என்னுடைய கலைஞானமும் கவித் திறமையும் மேன்மை அடைய வேண்டுமானால் நான் பரிமளாவைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும். அந்தப் பாக்கியம் எனக்குக் கிடைத்தால் கலை உலகத்தைப் புது ஒளியுடன் பிரகாசிக்கச் செய்வேன்; பரிமளம் ஆக்குவேன்.

பார்வதி: இதெல்லாம் சரிதான். ஆனால் நீ என்ன உத்தி யோகத்திற்குப் போகப் போகிறாய்?

காளிதாஸ்: நல்ல கேள்வி கேட்கிறீர்கள்! கோகிலத்தை உனக்கு என்ன உத்தியோகம் என்று கேளுங்கள். தோகையை விரித்து ஆடும் மயிலை, உனக்கு என்ன உத்தியோகம் என்று கேளுங்கள். கவிதை என் உத்தியோகம். சௌந்தரிய வர்ணனை என் உத்தி யோகம். பரிமளாதான் என் உத்தியோகம்.

பார்வதி: ஆனால், பரிமளாவைக் கல்யாணம் பண்ணிக் கொண்டால் குடித்தனம் செய்வதற்குப் பணம் வேண்டுமே! என்ன செய்யப் போகிறாய்?

காளிதாஸ்: இது ஒரு பெரிய கஷ்டமா? புஸ்தகம் எழுது கிறேன்.

பரிமளா: சரி, காளிதாஸ். நான் எதற்காக உன்னைக் கல் யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று நீ சொல்லவில்லையே.

காளிதாஸ்: அதைச் சொல்லவும் வேண்டுமா? தெய்வத்தைக் கோவிலில் பூட்டி வைப்பதில் என்ன லாபம்? பக்தனை அணுகவிட வேண்டாமா? சந்திர கிரணங்கள் தவழ்ந்து பரவுவதற்குப் பூமி வேண்டாமா? இன்னிசையைக் கேட்டு ஆனந்திக்கச் செவிகள் வேண்டாமா? உனக்குப் பாமாலை சூட்டிப் புகழ்மாலை சாத்த ஒரு காளிதாஸ் வேண்டாமா? நீயே சொல்லு, பரிமளா.

பரிமளா: போதும் காளிதாஸ்..........நீங்கள் மூவரும் சொல்ல வேண்டியதைச் சொல்லி முடித்துவிட்டீர்கள். இனிமேல் என்னுடைய பொறுப்பு.

ஸம்பத்: வேண்டுமானால் ரகஸியமாக அம்மாவோடு கலந்து பேசிவிட்டுப் பிறகு தீர்மானத்திற்கு வா.

பரிமளா: வேண்டாம். ரகஸியம் எதற்கு? நீங்கள் மூவரும் உண்மையை உள்ளபடியே மறைக்காமல் சொல்லிவிட்டீர்கள். நானும் அப்படியே செய்கிறேன். ஸம்பத், ஸதானந்தம், காளிதாஸ், எனக்கு உங்கள் மூவரையும் ரொம்பப் பிடிச்சிருக்கு.

ஸதானந்தம்: தாரதம்மியம் இல்லாமலா?

பரிமளா: ஆமாம், தாரதம்மியம் இல்லாமல்!

ஸம்பத்: புரிந்தது. நாங்கள் மூவரும் கணக்கு இலக்கியத்தில் உன்னுடைய, 'க்யூப் ரூட்ஸ்' (Cube roots).

காளிதாஸ்: எனக்கும் புரிந்தது. நாங்கள் மூவரும் கவிதா இலக்கியத்தில் திரிமூர்த்திகள்.

பரிமளா: அது என்னவோ, எனக்கு இப்போ என்ன செய்வதென்று புரியவில்லை. உங்கள் மூவரையும் கல்யாணம் பண்ணிக்கொள்ள முடியாது. ஸம்பத்தின் துறு துறுப்பு, ஸதானந்தத்தின் ஸாமர்த்தியம், காளிதாஸின் கவித் திறமை - எல்லாம் என் மனத்தைச் சம வேகமாக இழுக்கின்றன. என்ன செய்வேன்? சரி, உங்கள் மூவரில் யார் என்னை அதிகமாக வேண்டுகிறீர்களோ அவருக்கே என்னை அர்ப்பணம் செய்கிறேன்; சொல்லுங்கள்.

ஸம்பத்: பரிமளா, நான் உன்னைக் கட்டாயம் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் என்னுடைய ஐ. ஸி. எஸ். மனப்பால் திரிஞ்சு போய்விடும்.

ஸதானந்தம்: பரிமளா, நான் உன்னைக் கட்டாயம் அடைய வேண்டும். இல்லாவிட்டால் என் முன்னேற்றக் கொள்கைகள் புகைந்து போய்விடும்.

காளிதாஸ்: பரிமளா, நான் உன்னைக் கட்டாயம் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் நான் இருப்பதும் ஒன்றுதான், இறப்பதும் ஒன்றுதான்.

பரிமளா: இது என்ன சங்கடம்! மூவரும் என்னைச் சமமாக அபேக்ஷிக்கிறீர்களே, என்ன செய்வேன்?

பார்வதி: பரிமளா, எனக்கு ஒரு யுக்தி தோணுகிறது; அப்படிச் செய்கிறயா?

பரிமளா: அது என்ன, அம்மா?

பார்வதி: சீட்டுப் போட்டுப் பாரு. அதிலே எனக்கு நம்பிக்கை உண்டு. நீ பிறப்பதற்கு முன்னால் பிள்ளை பிறக்குமா, பெண் பிறக்குமா என்று எனக்கும் உன் அப்பாவுக்கும் விவாதம் ஏற்பட்டது. அவர் ஸீமந்த புத்திரன் வேண்டும் என்றார். நான் தலைச்சன் பெண் வேண்டும் என்றேன். சீட்டுப்போட்டுப் பார்த்தோம். பொண் என்று கிடைத்தது. நீயும் அப்படியே செய்யேன்.

பரிமளா: இது நல்ல உபாயம். ஸம்பத், ஸதானந்தம், காளிதாஸ் இந்த முறை உங்களுக்கு முற்றும் சம்மதமா?

ஸம்பத்: எனக்குச் சம்மதம். எங்கள் ஒவ்வொருவனுக்கும் முப்பத்து மூணே சொச்சம், 'பர்ஸென்ட்' 'சான்ஸ்' இருக்கு.

ஸதானந்தம்: எனக்கும் சம்மதம்; இதுதான் நியாயமான வழி.

காளிதாஸ்: எனக்கும் சம்மதம்; தெய்வ சங்கற்பம் எப்படி இருக்கிறது என்று பார்ப்போம்.

பரிமளா: சரி, இதோ மூணு சீட்டுகள் எழுதியிருக் றேன். குலுக்கிப் போடுகிறேன். அம்மா கையினால் எடுக்கட்டும். யாருடைய பெயர் கிடைக்கிறதோ அவனைக் கல்யாணம் பண்ணிக்கிறேன். அம்மா, ஏதாவது ஒரு சீட்டை எடு. (குலுக்கிப் போடுகிறாள்.)

பார்வதி: (ஒரு சீட்டை எடுத்து) இந்தா!

ஸம்பத்
ஸதானந்தம்
காளிதாஸ் } மாமி, நீங்களே யார் பெயர் கிடைத்திருக்கு என்று பார்த்துச் சொல்லுங்கோ.

பார்வதி: சரி; (பிரித்துப் பார்த்து) இதென்ன, விசித்திரமாக இருக்கே!

ஸம்பத்
ஸதானந்தம்
காளிதாஸ் } யார் பெயர்?

பார்வதி: 'பரிமளா' என்ற பெயர்.

ஸம்பத்
ஸதானந்தம்
காளிதாஸ் } என்ன?

ஸம்பத்: பாக்கி இரண்டு சீட்டையும் பார்ப்போம். (ஒன்றை எடுத்துப் பார்த்து) இதென்ன? இந்தச் சீட்டிலும் பரிமளா என்று இருக்கே!

ஸதானந்தம்: (மற்றொன்றைப் பிரித்துப் பார்த்து) இதென்ன? இந்த மூன்றும் சீட்டிலும் பரிமளா என்றுதான் எழுதியிருக்கு!

காளிதாஸ்: 'ஸர்வம் பரிமளாமயம் ஜகத்.'

ஸம்பத்: சரி, இதனுடைய அர்த்தம் இப்போதுதான் தெரிந்தது. பரிமளா, நீ ஓர் அகம்பாவி. நாங்கள் பேசினது ஒன்றையும் நீ கவனிக்கவில்லை. உன்னைத் தவிர வேறொரு சிந்தனையும் உனக்குக் கிடையாது. வா, ஸதானந்தம், போகலாம்.

ஸதானந்தம்: ஆத்திரப்படாதே, ஸம்பத்; நிதானித்தால் பலன் கைகூடும். என்ன, காளிதாஸ்?

காளிதாஸ்: பலன் கிடைத்தால் என்ன? கிடைக்கா விட்டாலும் என்ன? கீதையில் சொல்லி யிருக்கு: 'கர்மண்யே வாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன.' பரிமளாவை என்னுடைய ஹ்ருதய கமலத்தில் பதிய வைத்திருக்கிறேன். நான் அவளைக் கல்யாணம் பண்ணிக்கொண் டாலும் சரி; வேறு யார் பண்ணிக்கொண்டாலும் சரி; பரிமளாவின் இருப்பிடம் என் ஹ்ருதயம்.

பார்வதி: இப்போதான் தெரியறது எனக்கு. எங்க பரிமளா வுக்கு ஏதாவது முக்கியமான விஷயத்தைப்பற்றி யோசிக்க வேண்டும்

என்றால் பக்கத்தில் இருக்கும் கடிதாசியில் எல்லாம் தன் பெயரைக் கிறுக்கிக் கிறுக்கித் தள்ளுவள். நீங்கள் இங்கே வருவதற்கு முந்திகூட மேஜைமேல் இருந்த கடிதாசு எல்லாவற்றிலும் பரிமளா, பரிமளா என்று கிறுக்கிக்கொண் டிருந்தாள்.

பரிமளா: நீ சற்று இரு அம்மா. ஸம்பத், ஸதானந்தம், காளிதாஸ் நீங்கள் என்னைக் குற்றம் சொல்லுகிறீர்களே; சுயநல மூர்த்திகளே! நீங்கள் உங்களைப்பற்றியேதானே எண்ணிக்கொண் டிருந்தீர்கள்? என்னைப் பிராதானமாக எண்ணினீர்களா? ஸம்பத்துக்கு ஐ. ஸி. எஸ். வேணும். ஸதானந்தத்திற்கு முன்னேற்றம் வேணும். காளிதாஸுக்குக் கவித்துவம் வேணும். பரிமளா உங்களுக்கெல்லாம் இரண்டாவது லக்ஷ்யந்தான். என்னைப்பற்றி யார் யோசிக்கிறது? நானேதான். இப்போ உங்களில் ஒருவரையும் நான் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போவதில்லை. நான் எல். டி. வகுப்பில் சேரப் போகிறேன். ஒரு வருஷம் கழித்து வாருங்கள். அப்போது உங்களில் யார் என்னை - தெரியுமா என்னை - அதிகமாக வேண்டுகிறீர்களோ அவரைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளுகிறேன்.

[திரை]

# 1

# ஸதி ஆலோசனை

**பாத்திரங்கள்**

ரவி
ராமர்
நளன்
துஷ்யந்தன்
யுதிஷ்டிரர்
ஜயம்மாள்

பிற்பகல் : ரவி ஒரு வாலிபன். நாற்காலியில் சாய்ந்த வண்ணம் தூங்கிக்கொண்டிருக்கிறான். அப்போது மெதுவாக ஸ்ரீராமபிரான் அவன்முன் தோன்றுகிறார்.

ராமர்: ரவி, எழுந்திரு. பகலில் தூங்கலாமோ? நானும் லக்ஷ்மணனும் சிறுவர்களாக இருந்தபோது விசுவாமித்திர முனிவர் எங்களுக்குக் குருவாக முன் வந்து ஒரு வேள்வியைக் காப்பதற்காக எங்களை அழைத்துச் சென்றார். உன்னைப்போல் எங்களுக்கும் அப்போது தூக்கத்தில் பற்று அதிகம். வெகு நேரம் கண் அயர்ந்து இருந்தோம். அப்போது அம் முனிவர்,

*கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே:*
*உத்திஷ்ட்ட நரசார்த் தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்:*

என்ற தர்மபூர்வமாக உள்ள சுலோகத்தை உச்சரித்தார். அன்று முதல் எனக்குத் தூக்கத்தில் உள்ள சபலம் விட்டுப் போயிற்று. ரவி, நீயும் இனிமேல் அபரிமிதமாகத் தூங்காதே; எழுந்திரு.

ரவி: எழுந்திருந்து இப்போது என்ன செய்கிறது?

ராமர்: என்ன கேள்வி இது? செய்யத்தானா காரியம் இல்லை? விசுவாமித்திரர் என்னைத் தூக்கத்தில் இருந்து எழுப்பிய பின் என்ன

என்ன செய்தேன் தெரியுமா? ராமாயணமே அதற்குப் பிறகுதான். தாடகையை வதம் செய்தேன்; முனிவரின் வேள்வியைக் காத்தேன்; அஹல்யையைச் சாபத்தினின்று மீட்டேன்; மிதிலைக்குச் சென்று சிவ தனுசை முறித்தேன்; ஜானகியை மணந்தேன்.

**ரவி:** என்னையும் நீங்கள் தூங்குமூஞ்சி என்று எண்ண வேண்டாம். நானும் சுறு சுறுப்புடன், செய்ய வேண்டிய காரியங்களைச் சரியான காலத்தில் செய்திருக்கிறேன்.

**ராமர்:** என்ன என்ன செய்து முடித்தாய்? சற்றுச் சொல்லு.

**ரவி:** ஐந்து வயசில் இருந்து இருபத்திரண்டு வயசுவரையில் உருப்போட்டேன்.

**ராமர்:** என்ன செய்தாய்?

**ரவி:** பாடங்களை உருப்போட்டேன். காலை, மாலை, ராத்திரி, பகல் எல்லா நேரங்களிலும் பள்ளிக்கூடத்துப் பாடங்களை மனப்பாடம் செய்து, பரீட்சைகளில் கதறிச் சுளை சுளையாக, 'மார்க்குகள்' வாங்கினேன். போட்டிப் பரீட்சைகளில் சேர்ந்தேன்; தேறினேன். எல்லாம் முடிந்துவிட்டன. இப்போது என்ன செய்வது என்று தெரியவில்லை. சுயேச்சையாக இருக்கலாம் என்றால் அப்பா, அம்மா எல்லாரும் கல்யாணம் பண்ணிக்கொள் என்று வற்புறுத்துகிறார்கள்.

**ராமர்:** ரவி, 'தந்தைசொல் மிக்க மந்திரமில்லை; தாய்சொல் துறந்தால் வாசகம் இல்லை.' ஆதலால் பெற்றோர் சொல்வதைக் கேள். கல்யாணம் தர்மங்களுள் முக்கியமானது.

**ரவி:** அப்படியானால், உங்கள் அநுபவத்தில் இருந்து எனக்கு உபதேசம் செய்யுங்கள். நான் அவசரப்படப் போகிறதில்லை. நல்ல பெண் கிடைத்தால்தான் பண்ணிக்கொள்வேன்; இல்லாவிட்டால் இப்படியே இருந்துவிடுகிறேன். உங்கள் அபிப்பிராயம் என்ன? எப்படிப்பட்டவள் எனக்குத் தக்கவள்?

**ராமர்:** யாராக இருந்தாலும் சரி. ரவி, தைரியம் இல்லாதவளை மட்டும் பண்ணிக்கொள்ளாதே. நிழலைப்போல் உன்னையே எப்போது பார்த்தாலும் பின்பற்றுபவள் வேண்டாம். இதுதான் ஜானகியிடம் உள்ள பெரிய குறை.

**ரவி:** பர்த்தாவை எப்போதும் அனுகி இருப்பது அல்லவா பதிவிரதையின் கடமை!

**ராமர்:** அது சரிதான். ஆனால், புருஷன் என்றால் சற்று அங்கே இங்கே செல்வதற்குச் சுதந்தரம் வேண்டாமா? எப்போது பார்த்தாலும் ஒரு பெண், 'கூட வருகிறேன்' என்று காலைச் சுற்றிச் சுற்றி வந்தாள் ஆனால் பிறகு நமக்குச் சாந்தி ஏது? சுகம் ஏது? 'காட்டுக்குப் போகிறேன்' என்னும்போதுகூடவா, 'நானும் வருகிறேன்' என்று பின் தொடருவது? காடுதான் சென்றேனே, சுயேச்சையாக இருக்க

முடிந்ததா? அதுவும் அழகான பெண்டாட்டியை வைத்துக்கொண்டு எனக்குச் சுகம் ஏது! முதலில் காகாசுரன் வந்து சேர்ந்தான். பிறகு மாரீசன் வந்தான்....அப்புறம் ராவணன்....

**ரவி:** ஸீதைமேல் இப்படிக் குறை சொல்கிறீர்களே, நீங்கள் அவளை ரொம்பப் பாடு படுத்தினீர்களாமே?

**ராமர்:** எவ்விதத்தில்? சொல்.

**ரவி:** ராவண வதம் ஆன பிறகு நீங்கள் அவளிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை யாமே?

**ராமர்:** என்ன செய்துவிட்டேனும்? சொல்லேன்.

**ரவி:** கொடூரமாக, 'ஸீதே, உனக்காகத்தான் இவ்வளவு கஷ்டப் பட்டேன் என்று எண்ணாதே. உன்நிமித்தம் நான் ராவணனைக் கொல்லவில்லை. சிநேகிதனாகிய விபீஷணன்பொருட்டும், எனது யசஸின்பொருட்டும் ராக்ஷஸர்களை வென்றேன்; உன்னை மீட்டேன். இனி உன்னால் ஆக வேண்டிய காரியம் எனக்கு ஒன்றும் இல்லை' என்று எல்லோர் முன்னிலையிலும் சொல்லி ஸீதையை அங்கிகரிக்க மறுத்தீர் களாம்.

**ராமர்:** எதற்காக அப்படிக் கூறினேன் தெரியுமா?

**ரவி:** எதற்காக? தெய்விக குணமுள்ள ஒரு ஸத் பத்தினியிடம் இப்படிச் சொல்லலாமோ?

**ராமர்:** ரவி, நீ என் சரித்திரத்தை நன்றாகப் படிக்கவில்லை. நானும் ஜானகியும் தெய்வங்களாக அவதரிக்க வில்லை. சாதாரண மனுஷ்யர்களாகவே வாழ்க்கையை நடத்தினோம். இதை நீ முக்கியமாக அறிய வேண்டும்.

**ரவி:** இருந்தாலும் நீங்கள் அவ்வளவு பொல்லாதவராக இருந் திருக்கக் கூடாது.

**ராமர்:** ரவி, உனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை; அதனால் தான் நீ இப்படிப் பேசுகிறாய். இதோ பார்; யாரை வேண்டுமானாலும் கல்யாணம் செய்துகொள். நான் ஆக்ஷேபிக்க வில்லை. ஆனால், மனைவி யிடம் உஷாராக இரு. தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடாதே. நீ செய்யும் காரியம் எல்லாம் அவளுக்காகத்தான் என்று நேரில் சொல்லாதே.

**ரவி:** அவள் நிமித்தமாக இருந்தாலுங் கூடவா?

**ராமர்:** ஆமாம்.

**ரவி:** ஏன்?

**ராமர்:** ஏன் என்று கேட்காதே? எல்லாவற்றிற்கும், 'அகமுடை யாள், அகமுடையாள்' என்று சொல்லிக்கொண் டிருந்தாயோ உனக்குச் சுதந்தரம் ஏற்படாது. அதுவும் பல பேர் முன்னிலையில் அவளைப் புகழ்ந்து பேசாதே.

ரவி: புகழ்ந்தால் என்ன ?

ராமர்: புகழ்ச்சி பெண்கள் தலைக்கு ஏறும். எல்லாம் நிஜம் என்று எண்ணி உன்னைப் படாத பாடு படுத்திவிடுவார்கள். என் தகப்பனருடைய சரித்திரத்தைக் கொஞ்சம் கவனி: என்னுடைய சிறிய தாய் கைகேயியைப்பற்றித் தெரியும் அல்லவா ? அழகில் அவளைப்போல் ஸ்திரீ இந்தப் பூலோகத்திலே முன்பும் இல்லை; பின்பும் இல்லை; ஸாமர்த்தியத்தில் மிகச் சிறந்தவள்; இருந்தாலும் இதை நேரே அவளிடம் சொல்லலாமோ ? என் தகப்பனர் கைகேயியை நேரே புகழ்ந்து மகிழ்ந்தார். அந்தப் பிசகிற்காகப் பிறகு துன்பம் அடைந்தார். உனக்குத்தான் தெரியுமே. ஆகையால் கொஞ்சம் ராங்கியாகவே இரு; அகமுடையாளை ரொம்ப ஸ்துதி செய்யாதே.

ரவி: தூக்கக் கலக்கமாக இருந்துவிட்டேன். என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்.

ராமர்: ஏன் ?

ரவி: உண்மையாகச் சொல்கிறேன். தவருக எண்ணுதீர்கள். என் மனப்பான்மை சற்று நாஸ்திகமாக இருக்கிறது. ஸ்ரீராமர் பிரத்தியக்ஷமாக எழுந்தருளி இருக்கிருரே என்று பய பக்தியாக வணங்கத் தெரியவில்லை. கேள்வி கேட்கும் ஆசைதான் அதிகரிக்கிறது.

ராமர்: ரவி, வேண்டும் அளவு கேள். பதில் சொல்லுகிறேன். அதற்குத்தானே இப்போது உன்னிடம் வந்திருக்கிறேன் ?

ரவி: ஒரே கேள்விதான். நீங்கள் எதற்காக ஜானகியை வயிறும் பிள்ளையுமாக இருக்கும்போது, எவனே ஒரு வண்ணன் உளறினன் என்று காட்டிற்கு அனுப்பினீர்கள் ?

ராமர்: எதற்காக அனுப்பினேன் ?

ரவி: அதைத்தான் கேட்கிறேன்.

ராமர்: எதற்காக அனுப்பினேன் ?

ரவி: என்னைக் கேட்டீர்களானல்....?

ராமர்: நீதான் பதில் சொல்லேன். இவ்வளவு பரீட்சைகளில் விடை அளித்திருக்கிருயே !

ரவி: ராஜாவாகிய தங்கள்மீது அபவாதம் ஏற்படாமல் இருக்கும்பொருட்டு. அதுமட்டில் சரி. ஆனல் ஜானகியைப் பற்றி யோசித்தீர்களா ?

ராமர்: யோசித்தேன். அவளுடைய நன்மைக்காகவே அனுப்பினேன். வண்ணன் சொல்வதற்கு முன்னமேயே இதை நான் தீர்மானித்துவிட்டேன்.

ரவி: இது புதுமையாக இருக்கிறதே. ஏன் அப்படித் தீர்மானித்தீர்கள் ?

ராமர்: அவள் அப்போது கர்ப்பவதி. தன்னுடைய தேக நிலையைச் சற்றும் கவனியாமல் எனக்கு ஸதா சுச்ருஷை செய்து கொண்டும் பம்பரமாகச் சுற்றிக்கொண்டும் அரண்மனையில் காரியங்களைச் செய்துகொண்டும் இருந்தாள். 'ஜானகி, இப்படி நீ உடம்பை அலட்டிக்கொள்ளக் கூடாது. அந்தப்புரத்தில் ஓய்வு எடுத்துக்கொள்' என்று பல முறை சொன்னேன். கேட்கவில்லை. 'பிறந்த அகத்துக்காவது போய்ச் சில மாசங்கள் இரு' என்றேன். அதையும் கேட்கவில்லை. பிறகு, நான் என்ன செய்வது? மாசமோ எட்டு நிரம்பிவிட்டன. லக்ஷ்மணனைக் கூப்பிட்டு, 'ஜானகியை வனத்தில் விட்டு வா' என்றேன். பிரசவ காலம் வரையிலாவது தனித்து ஓய்வுடன் இருக்கட்டும் என்று உத்தேசித்துத்தான் அப்படிச் செய்தேன்.

ரவி: அப்படியென்றால், எதற்காகக் காட்டிற்கு அனுப்பினீர்கள்? வேறு ஏதாவது செளகரியமான இடம் கிடைக்கவில்லையா?

ராமர்: காட்டுக்கு அனுப்பினால் என்ன செளகரியக் குறைவு? எனக்கும் ஸீதைக்கும் நகர வாஸத்தைக் காட்டிலும் வன வாஸத்தில் தான் பழக்கம் அதிகம். மேலும் எங்கள் நாளில் ரம்மியமான வனங்கள் நாடு முழுவதும் இருந்தன. காடு என்றால் ஏன் பயப்படுகிறாய், ரவி? இயற்கையின் விலாசம் காடு. மனத்திற்கு இசைந்த இடம் காடு. முனிவர்கள் நிறைந்த இடம் அது; வேதம் நிறைந்த இடம்; மான் கூட்டங்கள் சஞ்சரிக்கும் இடம்; மயில்கள் தோகை விரித்து ஆடும் இடம்; யோகிகள் நாடும் இடம். காட்டிற்கு என்ன அப்பா குறைவு? அது கிடக்கட்டும். ராமாயணப் பிரசங்கம் பண்ண வேண்டும் என்று நான் உன்னிடம் வரவில்லை. தகுந்த பத்தினியைத் தேர்ந்தெடுக்கும்பொருட்டு உபதேசம் செய்ய வந்தேன். ரவி, சொன்னதை ஞாபகம் வைத்துக்கொள். கொடியாக உன்னைச் சுற்றிக்கொள்பவள் வேண்டாம். தைரியமும், சுதந்தர மனப்போக்கும் உள்ளவளாகப் பார்.

[ராமர் மறைகிறார். ரவி சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறான். ஒரு புடைவைத் துண்டை உடுத்துக்கொண்டு நளன் வருகிறான்.]

நளன்: ரவி, தீர்மானத்திற்கு வரு முன் நான் சொல்வதையும் சற்றுக் கேட்க வேண்டும்.

ரவி: (திரும்பி நளனைப் பார்த்து) நீங்கள் யார் என்று தெரியவில்லையே! சற்று அருள் புரிய வேண்டும்.

நளன்: தெரியவில்லையா? (தலை குனிந்து தன் ஆடையை உற்று நோக்குகிறான்.)

ரவி: ஓகோ....அறிந்துகொண்டேன். நீங்கள் நிஷத தேசத்து அதிபதி நள மகாராஜா அல்லவா?

நளன்: ஆம்.

ரவி: நீங்கள் வந்ததில் எனக்கு ரொம்பத் திருப்தி. ஸ்ரீராமர் சரித்திரத்தைக்காட்டிலும் உங்கள் வரலாறு ரொம்ப ரசமானது! உங்கள் உபதேசம் என்ன?

நளன்: கல்யாணம் மங்களகரமான நிகழ்ச்சி; ஆகையால் செய்துகொள்.

ரவி: எப்படிப்பட்ட பெண் எனக்குத் தகுந்தவள்?

நளன்: எப்படிப்பட்டவளும் தகுந்தவள். ஆனால்....

ரவி: ஆனால்....?

நளன்: ரொம்பப் பேசுகிறவள் வேண்டாம். இதுதான் எனக்குத் தமயந்தியிடம் முக்கியமான குறை.

ரவி: நான் படித்த கதையில் தமயந்தி குறை அற்றவள் என்றும், நீங்களே குறை உள்ளவர் என்றும் படித்தேனே.

நளன்: கதையில் சொல்லியிருப்பதை நம்புகிறாயா? அல்லது நேரே நான் சொல்லுவதை நம்புகிறாயா?

ரவி: நீங்கள் சொல்வதில் எனக்கு அவநம்பிக்கை இல்லை. இருந்தாலும் தமயந்திமீது நீங்கள் தோஷம் சொல்லலாமா?

நளன்: ஏன் சொல்லக் கூடாது? வாய் ஓயாமல் புலம்பிக் கொண்டும் பேசிக்கொண்டும் ஒருத்தி இருந்தால்?

ரவி: தமயந்தி எப்போது அப்படிச் செய்தாள்?

நளன்: ராஜ்யத்தைத் தோற்றுவிட்டு, மானம் போய், நல்ல காலம் வருமட்டும் எங்காவது தலைமறைவாகச் சில நாட்கள் கழிக்கலாம் என்றால் என்னைத் தனித்திருக்க விட்டாளா? மரம், செடி, கொடி, மலை, முனிவர், வழிப்போக்கன் இன்னதுதான் என்று கவனிக்காமல் கண்ட பிராணியிடம் எல்லாம் என்னைப்பற்றிப் பிரலாபித்துக் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாக இருக்கும் என் மானத்தை முழுவதும் வாங்கிவிட்டாள் அப்பா!

ரவி: நீங்கள் மாத்திரம் சொல்லிக்கொள்ளாமல் பாதி ராத்திரியில் அவள் புடைவையைக் கிழித்துக்கொண்டு அவளை விட்டுப் பிரியலாமா?

நளன்: பிரிந்தால் என்ன, ரவி? அவள் ராணியா, அல்லது பூனைக்குட்டியா? ஏதோ ஒரு காரியத்தை உத்தேசித்துத்தான் பிரிந்திருக்க வேண்டும் என்று எண்ண வேண்டாமோ? நான் என்ன இரண்டுங்கெட்டான் குழந்தையா, தேடுவதற்கு? நினைவு தெரிந்தவன் அல்லவா? ராஜ்யம் போனாலும் சக்கரவர்த்தியாக இருந்தவன்தானே?

ரவி: இருந்தாலும் ஒரு வேளை மறந்து போய்விடுவீர்களோ என்ற பயத்தினால் அப்படிச் செய்திருக்கலாம்.

நளன்: எப்படி யப்பா மறந்து போவேன்? அதுவும் அவள் புடைவையை உடுத்துக்கொண் டிருக்கும்போது மறக்கவும் முடியுமோ?

ரவி: ஏதோ உங்களிடம் இருந்த பேரன்பால் அப்படிச் செய்தாள் என்று வைத்துக்கொள்ளுங்களேன். இதுவும் ஒரு குறை ஆகுமா?

நளன்: உனக்கு விஷயம் முழுவதும் தெரியாதுபோல் இருக்கிறது. காணமற் போன கணவனைத் தேடுவது குற்றம் அல்ல என்று ஒப்புக்கொள்வோம். இருந்தாலும் திரும்பவும் சொல்லுகிறேன்: வாய் அவ்வளவு கூடாது.

ரவி: இப்படிக் கொஞ்சம் கொஞ்சமாகச் சொன்னல் எனக்கு விளங்க வில்லையே! கொஞ்சம் விவரமாகச் சொன்னல் தேவலை.

நளன்: நான் சொல்வதற்கு என்ன அப்பா இருக்கிறது? அவள் என்னைக் குறித்துப் பிரயோகித்த மொழிகள் எட்டுத் திசைகளில் இருந்தும் இன்னும் கர்ஜிக்கின்றனவே. இருந்தாலும் உன்னிடம் சொல்லுகிறேன்: என்னைத் தேடப் புறப்பட்டவர்களிடம் என்ன சொல்லியனுப்பினள் தெரியுமா?

ரவி: என்ன சொன்னள்?

நளன்: ''எல்லா ராஜ்யங்களுக்கும் சென்று ஜனக்கூட்டங்களில், 'சூதாடியே, தூங்குகின்றவளும் காதலியுமான என்னைக் காட்டில் விட்டு என் பாதி ஆடையைக் கிழித்துக்கொண்டு நீ எங்கே போனய்? மனைவியானவள் கணவனல் எப்போதும் போஷிக்கத் தகுந்தவளும், காக்கத் தகுந்தவளும் அல்லவா? உனக்கு யாது காரணத்தால் இந்தச் சிந்தனை இல்லாமற் போயிற்று?' என்று ஒலி பரப்புங்கள். பதில் சொல்ல எவராது முன் வந்தால் அவருடைய பேர், ஊர், விலாஸம் எல்லாவற்றையும் அறிந்து வாருங்கள்'' என்று சொல்லியனுப்பினள். கேட்டாயா ரவி, பர்த்தாவுக்கு என்ன மரியாதை செய்தாள் தமயந்தி! 'சூதாடி' என்று பகிரங்கமாக நடுச் சந்தியில் நாலு பேருக்கு முன் கூப்பிடச் சொன்னள்.

ரவி: அதனல் என்ன பிரமாதம்! உள்ளதைத்தானே சொல்லச் சொன்னள்! நீங்கள் சூதாடினதனல்தானே ராஜ்யத்தை இழந்தீர்கள்?

நளன்: இருந்தாலும், 'சூதாடி' என்று அழைப்பது? உனக்கு வெங்காய ஸாம்பார் பிடிக்கும் என்று உன் மனைவி உன்னைப் பகிரங்கமாக, 'வெங்காய ஸாம்பார்!' என்று அழைத்தால் உனக்கு எப்படி இருக்கும்?

ரவி: சரி, நீங்கள் தமயந்தியின் நிலைமையில் இருந்தால் என்ன செய்திருப்பீர்கள்?

நளன்: நான் தமயந்தியாக இருந்தால் ஒரு நாளும் அப்படிச் சொல்லியிருக்கமாட்டேன். கஷ்ட நிஷ்டூரங்களை மனத்திற்குள்ளே வைத்துக்கொண்டு, மூன்றும் மனுஷ்யருக்குத் தெரியாமல் பர்த்தாவின் இருப்பிடத்தை அறிந்துகொண் டிருப்பேன். தெரிந்தாலும் தமயந்தி

செய்த மாதிரி, 'இரண்டாவது கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறேன்' என்று விளம்பரப்படுத்துவேன்? அகமுடையான் பெண்டாட்டிக்குள் ஆயிரம் இருக்கும். அதை எல்லாம் தம்பட்டம் போட்டு ஊர் சிரிக்கும்படி செய்யலாமா? ரவி, தமயந்தி மாதிரி அழகும், நல்ல ஒழுக்கமும், ஸாமர்த்தியமும் உள்ள பெண்மணிகள் இப்பூவுலகில் அடிக்கடி ஜனிப்பதில்லை. இருந்தாலும், வாய் இத்தனை கூடாது. வாய் அடக்கம் தமயந்திக்கு இருந்திருந்தால் எனக்கு ஒரு குறையும் இருந்திராது. இத்தனை நாழிகை உன்னிடம் பேச முன்வந்திருக்கவே மாட்டேன்....

[நளன் போகிறான். போவதைப் பார்த்துக் கொண்டே ரவி பிரமித்து நிற்கிறான். அப்போது துஷ்யந்தன், ராஜ தோரணையில் வருகிறான்.]

ரவி: (திரும்பித் துஷ்யந்தனை ராஜ வடிவத்தில் கண்டு) ஜய விஜயீ பவ! மகாராஜாவின் ஆக்ஞை என்ன?

துஷ்யந்தன்: ரவி, இந்த மரியாதை யெல்லாம் வேண்டாம். நான் துஷ்யந்தன். நாம் இருவரும் இப்போது சிநேகிதர்கள்போலப் பேசலாம் வா. கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறாயாமே?

ரவி: அப்படித்தான் யோசனை. உங்கள் உபதேசம் என்ன?

துஷ்யந்தன்: பேஷாகப் பண்ணிக்கொள். ஆனால்....

ரவி: ஆனால்?

துஷ்யந்தன்: பட்டண வாஸத்தில் இருப்பவளாகப் பார். நாட்டுப் புறப் பெண் வேண்டாம். என் அநுபவத்தை யொட்டிச் சொல்லுகிறேன்.

ரவி: சகுந்தலையைப்பற்றியா குறிப்பிடுகிறீர்கள்?

துஷ்யந்தன்: வேறு யாரை என்று எண்ணினாய்?

ரவி: இல்லை; சகுந்தலையிடம் குறை இருப்பதாக இதுதான் நான் முதல் தரம் கேள்விப்படுகிறேன்.

துஷ்யந்தன்: சகுந்தலையைப்பற்றி உனக்கு என்ன தெரியும், ரவி?

ரவி: ஏன்? மகா பாரதத்தில் விவரிக்கப்பட்ட சகுந்தலையை அறிவேன். காளிதாஸன் வர்ணித்த சகுந்தலையை அறிவேன். மேலும் நானே நாடக மேடையில் சகுந்தலையாக நடித்திருக்கிறேன்.

துஷ்யந்தன்: நான் நாடக மேடைத் துஷ்யந்தன் அல்ல; அசல் துஷ்யந்தன். சகுந்தலையைப்பற்றி என்னைக் கேள்.

ரவி: இடை சிறுத்த பொற்கொடியை, மாலினி நதிக்கரையில் விளையாடின மான் குட்டியை, பூங்காவனக் குயிலை, கண்வ மகரிஷியின் கண்மணியையா நீங்கள் நாட்டுப்புறம் என்கிறீர்கள்?

துஷ்யந்தன்: வர்ணனையில் ஈடுபட்டவனுக்கு உண்மை எப்படி விளங்கும்? சகுந்தலைக்கு ரூப லாவண்யத்தில் குறைச்சல்

என்றேனு? இல்லையே. ஆனால் பட்டணவாஸப் பழக்கம் இல்லாததால் என்னை வெகு கஷ்டத்துக்கு ஆளாக்கிவிட்டாள்.

ரவி: எப்படி?

துஷ்யந்தன்: நீயே யோசித்துப் பாரேன்: 'திடும்' என்று ஒரு யுவதி பன்னிரண்டு வயசுக் குழந்தையுடன் உன் முன் வந்து, 'நான் உன் பார்யை. இப் பாலகன் உன் புதல்வன்' என்று எதிர் பாராத செய்தியைக் கொண்டுவந்தால் நீ என்ன செய்வாய்?

ரவி: இந்தக் கேள்வி எதற்கு? சகுந்தலை உங்கள் மனைவி என்பது உங்களுக்குத்தான் தெரியாததோ?

துஷ்யந்தன்: நான் காந்தர்வ முறையில் முன்பு விவாகம் செய்துகொண்டது ஓர் இளம் பெண்ணை. அவள்தான் பன்னிரண்டு வயசுப் பாலகனுடன் வந்த அந்தத் தாய் என்று நான் எப்படி அறிவேன்?

ரவி: சகுந்தலைதான் நேரில் வந்து சொன்னாளே!

துஷ்யந்தன்: எப்போது சொன்னாள்? அதனால்தான் நாட்டுப் புறம் என்றேன். பன்னிரண்டு வருஷம் ஏன் மௌனமாக இருந்தாள்? பட்டமகிஷியாக இருக்க வேண்டியவள் நிர் விசாரமாகக் காட்டிலா வசிக்கிறது? என் வம்சத்தை விளங்கச் செய்யச் சந்ததி இல்லாமல் வாடி இருந்தேன். என்னுடைய ராஜ்யத்திற்கு இளவரசன் இல்லாத குறையினால் என்னுடைய பிரஜைகளும் நானும் ஏங்கி இருந்தோம். சகுந்தலை என்ன செய்தாள், தெரியுமா? தான் இருப்பதைப்பற்றியாவது, தனக்குக் குழந்தை பிறக்கப்போகிறது என்பதைப் பற்றியாவது, அல்லது ராஜ குமாரன் பிறந்த பிறகு, அதைப்பற்றியாவது எனக்குச் செய்தி அனுப்பினாளா? மரஞ் செடிகளுக்குத் தண்ணீர் விட்டுக்கொண்டும், மான் குட்டிகளோடு விளையாடிக் கொண்டும் காலத்தைப் போக்கினாள். சுத்த நாட்டுப்புறம்!

ரவி: சகுந்தலைக்குக் கொஞ்சம் சூடிகை போதாது என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் நேரில் வந்த பிறகு நீங்கள் ஏன் அங்கி கரிக்கமாட்டேன் என்றீர்கள்?

துஷ்யந்தன்: எப்படி அங்கீகரிக்க முடியும்? நீதான் சொல் லேன். பன்னிரண்டு வருஷம், பார்க்காமல் இருந்ததால் எனக்கு அடையாளமே தெரியவில்லை.

ரவி: 'உன் ஞாபகமே எனக்கு இல்லை' என்றீர்களே, அது பொருந்துமா?

துஷ்யந்தன்: மறதி யப்பா, மறதி! நான் என்ன செய்வேன்?

ரவி: மனைவியைக்கூட யாராவது மறந்து போய்விடுவார்களா? விநோதமாக இருக்கிறதே!

துஷ்யந்தன்: விநோதம் என்ன? மறதி எல்லாருக்குந்தான் உண்டு; உனக்குந்தான் உண்டு.

ரவி: ஒருகாலும் இல்லை.

துஷ்யந்தன்: அது போகிறது. எனக்குத்தான் மறதி என்றால் நான் அடையாளமாகக் கொடுத்து வைத்திருந்த மோதிரத்தை ஏன் தொலைத்துவிட்டாள்? நாலும் தெரிந்த நகரவாஸினியாக இருந்தால் அப்படிச் செய்திருப்பாளா? அதுவும் போகிறது. ராஜ சந்நிதானத்தில் வந்திருப்பவளுக்குக் கொஞ்சம் பொறுமை வேண்டாமா? அந்த க்ஷணத்தில் எனக்கு ஞாபகம் வரவில்லை என்றால் நாலு நாள் கழித்துத் தானே வருகிறது! நீ வர்ணித்த மாதிரி இருக்கும் மெல்லிய இடையாளை, பூங்காவனக் குயிலை என்னால் நெடு நாள் மறக்க முடியுமா? பிள்ளையும் கையுமாக வந்த ஓர் அந்நிய ஸ்திரீயைச் சட்டென்று மனைவியாக, அதுவும் பட்ட மகிஷியாக ஏற்றுக்கொண்டால் லோக அபவாதத்திற்கு ஆளாகமாட்டேனோ? என்னுடைய பதவியையும் கவனிக்க வேண்டும் அல்லவா? என்னுடைய சங்கட நிலைமையைக் கவனியாமல் சட்டென்று கோபம் அடைந்து அம்மாவுடன் ஆகாயத்தில் பறந்து போய்விட்டாளே! பிறகு அவளை மீட்க என்ன பாடு பட்டேன் தெரியுமா? கோபித்துக்கொண்டு போன மனைவியைக் கூட்டிக்கொண்டு வர, இந்திர லோகம் மட்டும் போக வேண்டி இருந்தது. ஆகையால்தான் ரவி, நாட்டுப்புறத்துப் பெண் வேண்டாம் என்கிறேன். அப்படி ஒரு வேளை உனக்கு நேர்ந்துவிட்டால் எல்லாவற்றையும் நீயே சொல்லிக் கொடுத்துப் பட்டணவாஸப் பெண்ணாக மாற்றிவிடு. என்னைப்போல் வருஷக் கணக்காகச் சும்மா இருந்துவிடாதே....ஆனால், சகுந்தலை போன்ற ஸ்திரீ ரத்னம் இவ்வுலகில் இனிமேல் கிடைக்கமாட்டாள்.

[இவ்வாறு சொல்லிக்கொண்டே துஷ்யந்தன் போகிறான்.]

ரவி: சர சரவென்று ஒருவர் மாற்றி ஒருவராக வந்து என் மனத்தைக் கலக்கிவிட்டார்களே! 'தைரியம் உள்ள பெண்ணைப் பார்' என்கிறார் ஸ்ரீராமர். 'வாயடக்கம் உள்ளவளாகப் பார்' என்கிறான் நளன். 'பட்டண வாஸினியாகப் பார்' என்கிறான் துஷ்யந்தன். என் பெற்றோர்கள் பார்த்து வைத்திருக்கும் பெண் எனக்குத் தகுந்தவளா அல்லவா என்பதை நான் எப்படி அறிவேன்? ஒரே கலக்கமாக இருக்கிறதே!

[யுதிஷ்டிரர் வருகிறார்]

யுதிஷ்டிரர்: சாந்திர் அஸ்து; ரவி, ஏன் கவலைப் படுகிறாய்? பொறுமையுடன் இரு; சாந்தி நிலையை விட்டு அகலாதே. நான் யார் என்று யோசிக்கிறாயோ? பாண்டவர்களுக்குள் மூத்தவன்: யுதிஷ்டிரன்; இஷ்டமானால் எனக்குத் தெரிந்ததை உனக்குச் சொல்லுகிறேன்.

ரவி: தர்மபுத்திரரே, நல்ல தருணத்தில் வந்தீர்கள்; உங்கள் உபதேசம் என்ன?

யுதிஷ்டிரர்: கல்யாணம் பண்ணிக்கொள்.

ரவி: என் பெற்றோர்கள் பார்த்து வைத்திருக்கும் பெண்ணையா?

யுதிஷ்டிரர்: இருக்கட்டுமே; பாதகமில்லை.

ரவி: நான் அவளைக் காதலிக்கவில்லையே!

யுதிஷ்டிரர்: பாதகம் இல்லை.

ரவி: அவளை முன்பின் அறியேனே!

யுதிஷ்டிரர்: பாதகம் இல்லை.

ரவி: தைரியம் இல்லாதவளாய் என் காலையே சுற்றிக்கொள்பவளாய் இருந்தாளானால்?

யுதிஷ்டிரர்: பாதகம் இல்லை.

ரவி: வாயடக்கம் இல்லாதவளாய் இருந்தால்?

யுதிஷ்டிரர்: பாதகம் இல்லை.

ரவி: சுத்த நாட்டுப் புறமாயிருந்தால்?

யுதிஷ்டிரர்: பாதகம் இல்லை.

ரவி: தர்மபுத்திரரே, என்ன சொன்னாலும், 'பாதகமில்லை' என்கிறீர்களே. யோசித்துச் சொல்லுங்கள். நான் ஐம்புலன்களும் நேர்மையாய்ப் படைத்த கலியுக மனுஷ்யன். என்னைப்பற்றி நானே சொல்லிக்கொள்ளக் கூடாது. இருந்தாலும் இப்போது உமக்குச் சொல்லுகிறேன். நான் யுவன், ரஸிகன், முற்போக்கான கொள்கைகள் உடையவன்.

யுதிஷ்டிரர்: பாதகம் இல்லை; ரவி, உனக்கு வேண்டியவள் ஒரு பெண்தானே?

ரவி: ஆனால் பெண்ணுக்குப் பெண் வித்தியாசம் இல்லையா?

யுதிஷ்டிரர்: வித்தியாசம் என்பது மாயை. எல்லாப் பெண்களும் ஒன்றுதான்; எந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொண்டாலும், இல்லற தர்மத்தை அநுசரிக்கலாம். ரவி, ரொம்ப நுட்பமான ஆராய்ச்சிகள் செய்யாதே.

ரவி: கவனியாமல் யாராவது ஒருத்தியைக் கல்யாணம் பண்ணிக்கொண்டேனானால் பிறகு கஷ்டப்பட மாட்டேனா?

யுதிஷ்டிரர்: தர்மத்தை அநுசரித்தால் ஒருநாளும் கஷ்டப்பட மாட்டாய்.

ரவி: தர்மம் நிறைந்தவரே! எனக்கு இவ்விதம் வேதாந்த சாரமாய் உபதேசம் செய்கிறீர்களே! உங்கள் அநுபவம் என்ன? திரௌபதியின்மீது உங்களுக்குக் குறை ஏதேனும் இல்லையா?

யுதிஷ்டிரர்: இல்லை.

ரவி: ஏண்டாப்பா இவளைக் கல்யாணம் பண்ணிண்டோம் என்று தோன்றவில்லையா?

யுதிஷ்டிரர்: இல்லை.

ரவி: அவள்மீது ஒரு போதும் நீங்கள் கோபம் அடைய வில்லையா ?

யுதிஷ்டிரர்: இல்லை.

ரவி: இல்லை என்று சொல்ல வேண்டாம்; கவனித்துப் பதில் சொல்லுங்கள். தத்துவத்தைப் போதிப்பதைக் காட்டிலும் எனக்கு உங்கள் அநுபவத்தைச் சொன்னால் நலமாயிருக்கும். கொஞ்சம் விவர மாய்க் கேள்வி கேட்க விரும்புகிறேன்.

யுதிஷ்டிரர்: தாராளமாய்க் கேள்.

ரவி: துரியோதனனுக்கு அடிமைகளான பிறகு சூதாட்டத்தில் திரௌபதியையும் வைத்துத் தோற்றுப்போய் அவளைச் சபைக்கு அழைத்தீர்களே. அப்போது அவள் என்ன பதில் சொன்னாள் ?

யுதிஷ்டிரர்: என்ன சொன்னாள் ? நீயே சொல்லு.

ரவி: 'தருமரை நான் கேட்டேன் என்று சொல்' என்று கூறி, 'அடிமையான பிறகு என்னை வைத்துச் சூதாட அவருக்கு உரிமை ஏது ?' என்று கேட்டு நீங்கள் சொன்ன வார்த்தையைக் கேளாமல் அவமரியாதையாய்ப் பதில் சொன்னாளே ! அப்போது உங்களுக்கு அவளிடம் கோபம் வரவில்லையா ?

யுதிஷ்டிரர்: கோபம் எதற்கு ? அவளுக்குத் தெரிந்த நியா யத்தை எடுத்துச் சொன்னாள்.

ரவி: அது போகிறது. பிறகு, ஆம் ! - நீங்கள் வனவாசம் செய்யும்போது, 'எனக்கு ஐந்து கணவர்கள் இருந்தும் நாதனற்ற வளாய் இருக்கிறேன்' என்று கிருஷ்ணனிடம் புலம்பினாளே ! அப் போதாவது உங்களுக்கு அவள்மீது கோபம் வரவில்லையா ?

யுதிஷ்டிரர்: கிருஷ்ணன்மேல் இருக்கும் அபார நம்பிக்கையால் அப்படிச் சொன்னாள். எனக்கு அவள்மீது எதற்காகக் கோபம் வர வேண்டும் ?

ரவி: அதுவும் போகிறது. விராட நகரத்தில் பீமனிடம் சென்று, 'மூத்தவர், பரம ஏகாந்தி; அவரால் பிரயோஜனம் இல்லை. அர்ஜுனன் பேடி; அவனால் பிரயோஜனம் இல்லை. நீதான் என்னைக் கீசகனிடமிருந்து காக்க வேண்டும்' என்று சொல்லிப் பஞ்சபாண்ட வரையும் சரிசமமாகப் பாவிக்காமல் பிராத்ருபேதம் செய்தாளே ! அப்போதாவது அவள்மீது உங்களுக்குக் கோபம் வரவில்லையா ?

யுதிஷ்டிரர்: கோபம் எதற்கு ? கற்பைக் காக்க அப்படிச் சொன்னாள்.

ரவி: உங்களைக் கேள்வி கேட்டுப் பிரயோஜனம் இல்லை. உங்கள் மனப்போக்கு விசித்திரமாயிருக்கிறது. ஸ்ரீ ராமர் சற்று முன்பு இங்கே வந்தார்; ஆறுணப்பட்ட சீதைமேல் குறை சொன்னார் ! நிஷத தேசாதிபதி நளன் வந்தான்; தமயந்தியை வாயாடி என்றான் !

பிறகு துஷ்யந்தனையும் கண்டேன்; சகுந்தலையைச் சுத்த நாட்டுப் புறம் என்றான்! நீங்களோ திரௌபதியிடம் ஒரு குறையும் இல்லை என்கிறீர்கள்; அதோடு நில்லாமல் என்னை, 'ரொம்ப மீனமேஷம் பார்க்காதே; எல்லாப் பெண்களும் ஒன்று' என்கிறீர்கள்.

யுதிஷ்டிரர்: ஆமாம் அப்பா, நீ என்னவோ உன் கல்யாணத்தைப்பற்றிப் பிரமாதமாய் எண்ணுகிறாய். சற்று யோசித்துப் பார்! நீ சாவித்திரியைக் கல்யாணம் பண்ணிக்கொண்டாலும் அல்லது சரசுவதியைப் பண்ணிக்கொண்டாலும் உலகத்திற்கு எல்லாம் ஒன்றுதான்.

ரவி: ஒருவரையும் கல்யாணம் பண்ணிக்கொள்ளாமற் போனால்?

யுதிஷ்டிரர்: பேஷாய்ப் பிரம்மசாரியாக இரு. பீஷ்மாசாரியார் இருக்கவில்லையா? வீணாகக் கவலைப்படாதே. தர்ம சிந்தனையுடன் இரு. இது ஒன்றைத்தான் நான் உனக்கு உபதேசிக்க வந்தேன். உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

[இவ்வாறு சொல்லிக்கொண்டே மறைகிறார்.]

ரவி: நல்ல ஆலோசனை! கலங்கியிருக்கும் மனதை இன்னமும் கலக்கிவிட்டுப் போய்விட்டாரே!

[ரவியின் தாய் வருகிறாள்.]

ஐயம்மாள்: பையா, எழுந்திரு. பெண்ணைப் பார்க்க வருகிறோம் என்று சொல்லியிருக்கிறோமே! நாழிகையாச்சு.

ரவி: (நினைவுக்கு வந்து) பெண் பார்க்கவா? இதோ வந்துவிட்டேன், அம்மா.

# 2

# பதி ஆலோசனை

**பாத்திரங்கள்**

உஷா
சீதர்
தமயந்தி
சகுந்தலை
திரௌபதி
சுதா

[உஷா நாகரிகப் பெண். 18-வயசு. படித்தவள். நாற்காலியில் சாய்ந்தவண்ணம் தூங்கிக்கொண் டிருக்கிருள். அப்போது மெதுவாகச் சீதாபிராட்டி உள்ளே வருகிருள்.]

சீதா : ஏனம்மா, பகல்லே தூங்கிப்போய்விட்டே?

உஷா : (தூக்கத்திலிருந்து விழித்துக் கவலை படர்ந்த முகத்துடன்) தூங்கிப்போய் விட்டேனு? யோசித்து யோசித்து என் மனசு ரொம்பக் கலங்கிப் போயிடுத்து, மாமி.

சீதா : என்னடியம்மா, உனக்கு அவ்வளவு யோசனை? சிறுசாய் இருக்கிறவா கலகலப்பாச் சிரிப்பும் விளையாட்டுமான்னு இருக்கணும்?

உஷா: மாமி, உங்களைப் பார்த்தால் தெரிஞ்சவா மாதிரி இருக்கு. ஆனுல் யாருன்னு தெரியல்லையே!

சீதா : தெரிஞ்சுக்கோயேன்; நான்தான் சீதை, உனக்கு ஏதாவது ஒத்தாசை செய்யலாமேன்னு வந்தேன்.

உஷா : நல்ல சமயத்தில் வந்தேள், மாமி. எனக்கு நாலஞ்சு நாளாய் ஒரே கவலை. 'கல்யாணம் பண்ணிக்கலாமா வேண்டாமா? பண்ணிண்டால் யாரைப் பண்ணிக்கறது? பண்ணிக்காமல் போனுல் எவ்வளவு நாள் அப்படி இருக்கலாம்?' - இப்படியெல்லாம் யோசித்து யோசித்து ஒரு முடிவுக்கு வரத் தெரியாமல் இருக்கேன். அநுபவமுள்ள உங்களையொத்தவாதான் எனக்குப் புத்தி சொல்லணும், மாமி.

சீதா: இதைப்பத்தித்தானு யோசனை? ஏன், உன் பாட்டி, அம்மா, அக்கா எல்லாரையும் கேட்டாயா?

உஷா: கேட்டாச்சு மாமி, கேட்டாச்சு! பிரயோஜனம் இல்லை. அவா எல்லாரும் அறியாப் பருவத்திலேயே கல்யாணம் பண்ணிண்டுட்டா. கிடைத்த அகமுடையானை வைத்துக்கொண்டு குடித்தனம் செய்யரு. எனக்கு அப்படி இல்லையே! வயசு வந்த பிறகுதானே இந்தக் கல்யாணப் பேச்சு வந்திருக்கு! அப்பா அம்மாவிடம் மாத்திரம் இதை விட்டுவிட முடியல்லே; என்னுலேயும் தீர்மானிக்க முடியல்லே.

சீதா: தீர்மானிக்க முடியாமே அப்படி என்னடீ கஷ்டம்?

உஷா: கஷ்டம் ஒண்ணு, ரெண்டா; எவ்வளவோ இருக்கு. இந்தக் காலத்துப் பிள்ளைகளை நம்பி ஏதாவது செய்ய முடியறதா? இன்னிக்கு என்னைப் பார்த்து, 'நீ ரதியோ, ராஜாத்தியோ!' என்று ஸ்தோத்திரம் செய்து கல்யாணம் பண்ணிக்குவா. நாளைக்கு வேறே யாராவது ஒரு பொம்மனுட்டியைக் கண்டு விட்டால், 'அவளைப் பார்த்தாயா? எவ்வளவு அழகாயிருக்கா! அவளுடைய மந்தகாசம் ஒண்ணுக்கே என் தலையைக் கிள்ளிக் கொடுத்து விடலாம்போல் இருக்கே' என்று குதிப்பா! அதுதான் மாமி, எனக்கு விசாரம். இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கு நிதானமே இல்லை. உங்காத்துக் காரர் மாதிரி பிதுர்வாக்கிய பரிபாலனம் செய்துகொண் டிருப்பாளா?

சீதா: எங்காத்துக்காரரைப் பத்தி உனக்கு என்னடியம்மா தெரியும்?

உஷா: நன்னுக் கேட்டேள்! வால்மீகிதான் ராமாயணம் பூரா வரைஞ்சு வெச்சிருக்காரே!

சீதா: அந்தக் கிழவர் என்னத்தைக் கண்டுவிட்டார்! எங்காத்துக்காரர் குணம் எனக்குன்னு தெரியும்! இதோ பார், உஷா, இனிமேல் ஏழு ஜன்மத்திற்கு எனக்கு இந்தப் பெண் பிறவியே வேண்டாம். அப்படித் தப்பித் தவறி எட்டாவது ஜன்மத்தில் பெண்ணுய்ப் பிறந்தேனுனல் இவர் எனக்குக் கணவராய் வாய்க்க வேண்டாம். வேறு ஆசையாய் வைத்துக் கொண்டிருக்கிறவராய்க் கிடைத்தால் போதும். மகாராஜாவும் வேண்டாம்; அம்மா, சின்னம்மா, சில்லறையம்மா, வழியில் போகிற வாள் - இவாளெல்லாம் சொல்ற வாக்கை வேதவாக்காய் எண்ணுகிற வரும் வேண்டாம்!

உஷா: ஒரு பாகவத புருஷர்மீது குறை சொல்லுகிறேளே, மாமி. அவருடைய சீலமும், தேஜஸும், தைரியமும், பராக்கிரமமும் உலகப்பிரசித்தமானவை யாச்சே!

சீதா: யாரடியம்மா; இல்லை என்கிறு? உங்களுக்கெல்லாம்

அவர் பாகவத புருஷர்தான். ஆனல், எனக்குத் தாலிகட்டின புருஷர் தானே? அவரைப்பத்திக் குறைசொல்ல எனக்கு ஸ்வாதீனம் இல்லையா? இதோ பார், உஷா, புருஷர்களுக்குச் சுயபுத்தி என்பதே இல்லை. அதுதான் இவரிடத்தில் எனக்கு முக்கியமான குறை. காட்டில் இருந்தோமோ, பிழைத்தோம். ஆசையாய்ப் பேசிண்டு உசிராய் என்னை வைத்துக்கொண் டிருந்தார்.

உஷா: அப்படிப் பிரியமா யிருக்கிறவரை, பொன்மானைப் பிடித்துக்கொண்டு வா என்று ஏன் விரட்டினீர்கள்? அதனல்தானே வந்தது கஷ்டமெல்லாம்!

சீதா: நானு விரட்டினேன்?

உஷா: பின்னே, யார் விரட்டினு? வால்மீகிதான் விஸ்தரிச் சிருக்காரே!

சீதா: வால்மீகியைப்பற்றிப் பேசாதே. பொம்மனுட்டி மனஸை அவரென்னடீ கண்டார்?

உஷா: ஆனல், பொன்மான் வேணுமென்று நீங்கள் ஸ்ரீ ராமரைக் கேட்கவில்லையா?

சீதா: கேட்டேன்! என்னத்துக்காகக் கேட்டேன் தெரியுமா?

உஷா: என்னத்துக்காக?

சீதா: எனக்கு மச்சுனன் என்ற கடுங்காவல் ஒண்ணு உண்டு தெரியுமோன்னே?

உஷா: லக்ஷ்மணரையா அப்படி நீங்கள் சொல்லுகிறீர்கள்? பாவம்! தம்முடைய அகமுடையாளை விட்டுவிட்டு உங்களுக்குச் சுச்ரூஷை செய்யக் காட்டுக்கு வந்தாரே!-

சீதா: ஆமாம்! ஏண்டாப்பா வந்தார்னு ஆயிடுத்து. இதோ பார், உஷா, நீ கல்யாணம் பண்ணிக்கற புருஷன் ஒரு மாதிரியாய் இருந்தாலும் பரவாயில்லை; சமாளிச்சுக்கலாம். ஆனல் மச்சுனன் செவ்வையாய் வாய்க்காமற் போனல் மகா சங்கடம்.

உஷா: மாமி, லக்ஷ்மணர் உங்களை என்ன செய்தார்? தேமேன்னு, அம்மா, அப்பா, அகமுடையாள் எல்லாரையும் விட்டுப் பிரிந்து காட்டிலேயும் முள்ளிலேயும் கூடவந்து, 'மன்னி', 'மன்னி' என்று உங்களைப் பாதுகாத்தாரே!......

சீதா: அதைத்தாண்டியம்மா நானும் சொல்லறேன். கொக்குக்கு ஒண்ணே மதி என்பார்களே, அதுமாதிரி எங்க மச்சுன னுக்குப் 'பாதுகாப்பு' என்ற ஒரே ஒரு மதிதான். என்னேடு ஒரு வார்த்தை பேசமாட்டார். தலையைக் குனிஞ்சுண்டு சதா என் கால் விரல்களையே பார்த்துக்கொண் டிருப்பார். அதற்காக நான் புடவையைச் சற்றுத் தாழ்த்திக் கட்டிப்பேன், அதை உடனே

அண்ணாவிடம் போய்ச் சொல்லிவிடுவார். அண்ணாவுக்குத்தான் சுய புத்தி இல்லையே! உடனே என்மேல் பாணம் தொடுக்க ஆரம்பிச்சு விடுவார்: 'காட்டில் வாசம் செய்கிறோம் என்று ஞாபகம் இல்லையோ? பொடவையைக் கொஞ்சம் தூக்கிக் கட்டிண்டால் என்ன முழுகிப் போச்சு! குப்பை செத்தை எல்லாத்திலேயும் பெரளணுமோ?' என்பார்.

உஷா: அதுக்கென்ன, மாமி! சற்றுத் தூக்கிக் கட்டிண்டால் போச்சு.

சீதா: சொல்லுவே நீ! உன் கால்விரல்களையே ஒருவர் எப்போதும் பார்த்துக்கொண்டிருந்தால் உனக்கு என்னவோ போல் இருக்காதா? எனக்கென்ன, யானைக்காலா?

உஷா: இதுக்கெல்லாம் கோவிச்சுக்கலாமா, மாமி? பாவம்! நல்ல பிள்ளை; சாஸ்திரத்தில், மதனியை ஒசத்தியாய் வைத்துக் கொள்ள வேணும், அவளுடைய பாதங்களைப் பூஜை செய்ய வேணு'மென்று சொல்லியிருக்கோன்னோ?

சீதா: பூஜை செய்வதோடு நிறுத்தினால் தேவலை. உடனே அண்ணாவிடம் போய், 'அண்ணா, மன்னியின் காலில் முள் தெச்சிருக்காப்போல் இருக்கு. நொண்டிக்கொண்டு நடக்கிறாள்' என்று சொல்லுவார். காட்டிலே முள் தெக்கிறதற்குக் கணக்கு உண்டா?

உஷா: நல்லதுக்குத்தானே மாமி, சொன்னார்?

சீதா: இப்படி ஒரு நாளைக்கு! மற்றொரு நாளைக்கு, 'அண்ணா, மன்னியின் காலில் இருக்கும் பித்தவெடி இன்னும் குணமாகவில்லை போல் இருக்கு. குதிகாலைக் கீழே வைக்க மாட்டேன் என்கிறாள்' என்பார்.

உஷா: அதுக்கு அண்ணா என்ன சொல்லுவார்?

சீதா: கோவிச்சுப்பார். 'என்னத்துக்குடீ இப்படிப் பம்பரமாய்ச் சுத்திண்டு காலில் முள் தெச்சுண்டும், பித்தவெடியை ஜாஸ்தியாக்கிண்டும் இருக்கே? உடம்பு சரியால்லேன்னா என்னிடம் சொல்லப்படாதோ?' என்பார். சொல்வதற்கு விட்டால்தானே? எல்லாத்துக்கும் மச்சுனர் முந்திக்கொண்டுபோய் அண்ணாவிடம் சொல்லிவிடுவார்: 'அண்ணா, மன்னியின் காலில் சேத்துப் புண்', 'அண்ணா, மன்னி ஜலம் எடுத்துண்டு வரும்போது தடுக்கி விழுந்தாள்', 'அண்ணா, மன்னி ரவிக்கையைக் குரங்கு தூக்கிண்டு போய்விட்டது', 'அண்ணா, மன்னியின் பொடவை முள்ளில் மாட்டிண்டு கிழிந்துபோய் விட்டது', 'அண்ணா, மன்னி குளிக்கும்போது கால் சுத்து நழுவி விழுந்துடுத்து', 'அண்ணா, மன்னி கட்டைவிரல் நகத்தில் மருதாணி அழிந்துவிட்டது' — இப்படித்தான் நித்தியம் சூரியோதயத்திலிருந்து அஸ்தமனம் வரையில், 'அண்ணா, மன்னி இதைப் பண்ணினா,

அதைப் பண்ணிஞ' என்று புலம்பிண்டே யிருப்பார். இத்தனை பேசருரே, தலை நிமிர்ந்து என்னேடு ஒரு வார்த்தை பேசமாட்டார். ஏன் கேட்கறே, போ! என் மச்சுனனுடைய நச்சை ஒருவராலும் பொறுத்துக்கொண் டிருக்க முடியாது.

உஷா: இதை அண்ணுவிடம் நீங்கள் சொல்லுகிறதுதானே?

சீதா: சொன்னேண்டியம்மா........என்ன பலன் தெரியுமா? 'சீதை, இங்கே வா. உனக்கு என்னத்துக்கு இந்தக் கஷ்டமெல்லாம்? ஆசிரமத்தைச் சேர்ந்த வேலைகள் எல்லாத்தையும் தம்பி பார்த்துக் கொள்வான். அங்கேயும் இங்கேயும் நடமாடி உடம்புக்கு வர வழைச்சுக்காதே! இப்படி வந்து உட்கார்' என்ருர்.

உஷா: நல்லதாச்சுன்னு உட்கார்ந்துகொள்றதுதானே?

சீதா: உஷா, என் மச்சுனன் சங்கதி உனக்குத் தெரியாது. உட்காருகிறதுதானே என்கிருய். பக்கத்தில் பெரிய பாருங்கல் இருந்தது. அதன்மேல் உட்காரத்தாண்டியம்மா போனேன். உடனே, 'அண்ணு, மன்னி உட்காரப் போகும் கல் ரொம்ப ஈரமாயிருக்கு' என்று சொல்லிவிட்டார். உடனே அண்ணு என்ன பண்ணிஞர் தெரியுமா?

'நான் இங்கிருக்கச்சே ஈரக்கல்மேல் ஏன் உட்காரணும்?' என்று சொல்லிவிட்டுச் சட்டென்று என்னை இழுத்துத் தம் மடிமேல் உட்கார வைத்துக்கொண்டார்.

உஷா: இவ்வளவு பிரியமாய் வைத்துக்கொண்டவரையா நீங்கள் 'சுயபுத்தி இல்லாதவர்' என்கிறீர்கள்?

சீதா: நன்ருயிருக்கு! இந்த அசட்டுக் காரியத்தையா பிரியம் என்கிருய்? மச்சுனனுக்கு எதிரே ஆத்துக்காரர் மடியில் எப்படி உட்காருகிறது?

உஷா: உட்கார்ந்தால் என்ன, மாமி? நாஞயிருந்தேன்ஞ அந்தக் காட்சியை உடனே 'போட்டோ' பிடித்துக்கொண் டிருப்பேன்.

சீதா: நீங்கள் என்னத்தைத்தான் இந்த நாளில் செய்ய மாட்டேள்! எனக்கோ வெக்கம் பிச்சுண்டு போச்சு! இவரோ என்னை விடுகிற வழியாய்க் காணும். மச்சுனனே போகிற மாதிரி யாய்க் காணும். எனக்கோ மூஞ்சியில் அசடு தட்டித்து! உடம்பு வேர்த்துக் கொட்டித்து. என்ன பண்ணறது என்று புரியல்லை. அப்போதான் நல்ல வேளையாய் ஆசிரமத்துக்கு அருகே மான் ஒண்ணு மேய்ந்துகொண் டிருந்தது. மச்சுனனை வெரட்டுவதற்கு இதுதான் நல்ல சமயம் என்று எண்ணி, 'ஏன்ஞ, இந்த மானைப் பாருங்கோ. எவ்வளவு அழகாயிருக்கு! எனக்கு அதைப் பிடிச்சுத் தரேளா?' என்று இவரைக் கேட்டேன்.

உஷா: லக்ஷ்மணரைக் கேட்கிறதுதானே?

சீதா: அவர்தான் முகத்தைப் பார்த்துப் பேச மாட்டாரே! எப்படிக் கேட்கிறது? இருந்தாலும் இவருக்கு என் சங்கடம் தெரிய வேண்டாமா? தம்பியை அனுப்பாமல் தாமே குதிச்சு ஓடினார். நாசமாப்போன மான், மாயாவி என்று நான் கண்டேனா? இவர் தான் அதை என்னத்துக்குத் தொரத்திண்டு போனார்?

உஷா: உங்களுக்குப் பொன் மான்மேல் ஆசை விழுந்த தோன்னோ? அதைக் கொண்டுவராமல் எப்படித் திரும்புவது என்று எண்ணினாராக்கும்.

சீதா: அதைத்தாண்டியம்மா நானும் சொல்லறேன்! அவ்வளவுதான் என்னை அறிந்துகொண்டார். எனக்குப் பொன் மான் மேலேயா கண் விழுந்தது? மச்சுனனுக்கு எதிரே இவர் மடி மேல் ஆசனம் வேண்டாமென்று நான் ஒரு சாக்குச் சொன்னால் உடனே அந்த வார்த்தையை நிஜமென்று எண்ணி நிறைவேற்றக் கிளம்பிவிட்டாரே! 'ஏதடா, இவள் எப்போதாவது, எந்த வஸ்து விலாவது மனம் வைத்ததுண்டா? வீடு, வாசல், நகை, பிறந்தகம் ஒண்ணும் வேண்டாமென்று வன வாசம் செய்ய வந்தவளாச்சே! பொன்மானை எதுக்குக் கேட்கப்போறா? இதிலே வேறு என்னவோ இருக்கு' என்று யோசிக்கப்படாது? அல்லது மான்தான் கிடைக் கிறதாயில்லையே என்று ஆசிரமத்துக்குத் திரும்பி வரப்படாது? உஷா, இதைப்பத்தி யெல்லாம் இப்போ சொல்லி என்ன லாபம்? படணும் என்று என் விதி! கஷ்டப்பட்டேன்.... என்னத்துக்கு இதை யெல்லாம் சொல்ல வந்தேனோ....

உஷா: எனக்குக் கல்யாண விஷயத்தைப்பத்தி உபதேசம் சொல்ல வந்தீர்கள்!

சீதா: ஆமாண்டியம்மா! அதுக்குத்தான் இவ்வளவு தூரம் ராமாயணம் படிச்சேன். இப்போ நான் சொல்றது என்ன தெரியுமா? சுயபுத்தி உள்ளவராய்ப் பார்த்துப் பண்ணிக்கோ. அல்லது சுயபுத்தி இல்லாதவராயிருந்தால் அகமுடையாள் புத்தியையாவது ஒட்டி நடக்கிறவராய் இருக்க வேண்டும்.

உஷா: ஆனாலும் மாமி, அவதார புருஷர் ஒருவர்மீது நீங்கள் குறை கூறுகிறீர்களே!

சீதா: நீதான் அவருடைய சரித்திரத்தைச் சற்றுக் கவனிச்சுப் பாரேன். சித்தி சொன்னாள் என்று காட்டுக்குப் போனார். சிநேகிதன் சொன்னான் என்று வாலியைக் கொன்றார். ராவணன் வீட்டில் இருந்த தற்காக என்னை அக்கினிப்பிரவேசம் செய்யச் சொன்னார். அப்புறம் எவனோ ஒரு வண்ணான் உளறினானென்று கர்ப்பிணியாய் இருக்கும் போது என்னைத் தனியாகக் காட்டில் கொண்டுபோய் விடச்சொன்னார். - இப்படியெல்லாம் செய்தவருக்குச் சுயபுத்தி இருக்கு என்கிறாயா?

உஷா: நல்லது, மாமி. நீங்க சொன்னதிலே இருந்து எவ்வளவோ விஷயம் தெரிஞ்சுண்டேன். புஸ்தகத்தில் போட்டிருப்பதையும் புருஷாள் சொல்லறதையும் நம்பவே கூடாது. உங்களைப் போல் அநுபவமுள்ள நாலு மாமிகள் சொல்றதைக் கேட்டால்தான் நல்லது.

[சீதாபிராட்டி மெல்ல மறைகிருள்.]

என்னுடைய கஷ்டம் என்னவென்ருல், எதுமாதிரிப் பிள்ளை எனக்குத் தருந்தவர் என்பதுதான். படித்தவராஞல் தொணதொண வென்று பிரசங்கம் செய்துகொண்டிருப்பார். படிக்காதவராஞல் என்னைச் சுத்திச் சுத்தி வந்து, 'இன்னிக்கு என்னடீ சமையல்?' என்று நித்தியம் பத்துத் தரம் கேட்பார். நான் எப்படித் தீர்மானிக்கிறது?

[தமயந்தி உள்ளே வருகிருள்.]

தமயந்தி: அது என்னவோ, உஷா, நீ யாரைப் பண்ணிக்கொண்டாலும் சரி. சீட்டாடற பேர்வழிக்கு மாத்திரம் இடம் கொடுக்காதே.

உஷா: வாங்கோ, மாமி. தலைப்பு அவிழ்ந்திருக்காப் போலே இருக்கே. நீங்கள் கவனிக்கல்லையா?

தமயந்தி: கவனிச்சுத்தான் இருக்கேன். என் பொடவைக்குத் தலைப்பு இல்லையடியம்மா. சீட்டாடறவரைக் கல்யாணம் பண்ணிண்டயோ உன் பொடவைத் தலைப்புக்கும் மோசம் வரும்.

உஷா: ஓ......நீங்க தமயந்தியோன்ளே மாமி!

தமயந்தி: ஆமாண்டியம்மா, அதஞல்தான் சீட்டாடற பேர்வழி வேண்டாம் என்கிறேன். பார், நான் ஒரு ராஜாவைத்தான் கல்யாணம் பண்ணிண்டேன். என்ன கதிக்கு வந்தேன் பார்த்தாயா? நடுக்காட்டிலே பாதிராத்திரி வேளையிலே என்னைத் தூங்கவிட்டுப் பொடைவைத் தலைப்பைக் கிழிச்சுண்டு என்னைத் தனியே பரிதவிக்க விட்டுப் போய்விட்டார்.

உஷா: ஆஞல், பொறந்தாத்துக்குப் போன பிறகு நீங்க ரொம்பப் பொல்லாதவள் என்று பேர் வாங்கினேளாமே?

தமயந்தி: என்ன அப்படிப் பொல்லாதவளாய்ப் போய் விட்டேன்? அவர் என்னை வெச்சிண்ட சவரணைக்கு நான் என்ன பொல்லாப்புப் பண்ணினேனும்?

உஷா: அவர் உயிரோடிருக்கச்சயே இரண்டாந்தரம் கல்யாணம் பண்ணிக்கப்போறேன் என்று விளம்பரம் பண்ண ஏற்பாடும் செய்தீர்களாமே!

தமயந்தி: அப்படித்தான் செய்தேன். மதி கெட்டவரை வழிக்குக் கொண்டு வருவதற்கு வேறே உபாயம் ஏது? பெரிய

ராஜ்யத்தைத் தோத்துவிட்டு, கட்டிக்கொண்ட பெண்டாட்டியைத் தனியே காட்டில் விட்டுவிட்டுப் பொறுப்பில்லாமல் அவர் மட்டுந் திரியலாமோ? நான் மறு விவாகம் பண்ணிக்கப் போறேன் என்று சொல்லி அவரை வரவழைக்கக் கூடாதோ? இதோ பார், உஷா, பொல்லாதவள் என்று பேர் வந்தால் பரவாயில்லை. ஆத்துக்காரருக்குச் சீட்டாட மாத்திரம் இடங் கொடுக்காதே. அதற்கென்று அவர் சிநேகிதர்கள் யாராவது வீட்டுக்கு வந்தால் அவாளுக்கெல்லாம் நன்ருகச் சூடு கொடு. குழந்தைகளை வெடுக்கென்று கிள்ளிக் கத்த விடு. வேலைக்காரர்களைக் கூப்பிட்டுப் பாத்திரம் பண்டங்களைக் கீழே போட்டு உடைக்கச் சொல்லு. 'அம்மா கூப்பிடரு' என்று அவரை அடிக்கடி குழந்தைகளை விட்டு நச்சுப்பண்ணச் சொல்லு. உபத்திரவம் பொறுக்காமல் உன்மேல் கோபிக்க வந்தாராணுல், 'ஆமாம், நான் பொல்லாதவள்தான்' என்று சொல்லு.

உஷா : அப்படியே செய்யறேன், மாமி. இப்படி யார் எனக்கு நல்லது சொல்லித்தரா? இப்போதான் எனக்குக் கல்யாணக் கவலை கொஞ்சங் கொஞ்சமாக நீங்கறது.

[தமயந்தி மறைகிருள். சகுந்தலை வருகிருள்; அவள் பத்து விரல்களிலும் மோதிரம் அணிந்துகொண் டிருக்கிருள்.]

சகுந்தலை : உஷா, நீ யாரைக் கல்யாணம் பண்ணிண்டாலும் சரி; ரகஸ்யமாக மாத்திரம் ஆத்தில் ஒருவருக்கும் சொல்லாமல் கல்யாணம் பண்ணிக்காதே! பத்து ஊருக்கு விளம்பரம் பண்ணி, ஹோமம் வளர்த்து, அக்கினி ஸாட்சியாக ஆயிரம்பேர் கண்முன் பண்ணிக்கோ.

[சகுந்தலையின் கைவிரலிலிருந்து ஒரு மோதிரம் நழுவிக் கீழே விழுகிறது. அதை அவள் கவனிக்கவில்லை. உஷா எடுத்துக் கொடுக்கிருள். அப்போது பத்து மோதிரங்களையும் பார்க்கிருள்.]

உஷா : இந்தாருங்கோ, மாமி! உங்கள் மோதிரம் கீழே விழுந்துவிட்டது. ஏன் மாமி இத்தனை மோதிரம் போட்டுண் டிருக்கேளே, எனக்கு ஒன்னு கொடுக்கறேளா?

சகுந்தலை : இந்தாம்மா, மகராஜியாய்ப் போட்டுக்கோ. நான் என்ன வெறும் ஐம்பத்துக்கு இத்தனை மோதிரம் போட்டுண் டிருக்கேன் என்று எண்ணறயோ?

உஷா : முதலில் அப்படித்தான் எண்ணினேன். இப்போ தெரிந்தது. நீங்க சகுந்தலையோன்னே, மாமி?

சகுந்தலை : எப்படி உனக்குத் தெரிஞ்சுது?

உஷா : முதலாவது, மோதிரத்தை நழுவ விட்டேள். இரண்டாவது, ரகஸ்யமாகக் கல்யாணம் பண்ணிக்காதே என்று சொன்னேள்;

சகுந்தலை: பின்னே என்னடியம்மா பண்ணறது? நான் பட்ட கஷ்டத்திலேயிருந்து தெரிஞ்சுண்ட நீதி அதுதான். பாரேன்; வேட்டையாடிக் களைத்து எங்கள் ஆசிரமத்துக்கு வந்தார். பார்க்கிறதற்கு மன்மதனாய் இருந்தார். பேச்சு ரொம்ப ரஸமாக இருந்தது. மகரிஷி அந்தச் சமயத்தில் ஆசிரமத்தில் இல்லை. 'கல்யாணம், ஆறும் மாசம், சாந்தி முகூர்த்தம் என்ற ஸம்பிரமம் எல்லாம் எதற்கு? தலைவன், தலைவி இருவர் மனசும் ஒன்றுபட்டால் இந்தச் சமூகச் சடங்குகள் ஒன்றும் வேண்டாம்' என்று எண்ணினேன். அவரிடம் என் மனசைக் கொடுத்து, மையல் கொண்டு என்னை அர்ப்பணம் செய்தேன். பலன் என்ன? ஊருக்குப் போனதும் என்னை அடியோடு மறந்துவிட்டார்.

உஷா: இதென்ன! அகமுடையானை மறக்கிறவருமா ஒருவர் இருப்பார்?

சகுந்தலை: அது என் தலைவிதியம்மா, தலைவிதி! என்னை விட்டுப் பிரியும்போது ஞாபகார்த்தமாக ஒரு மோதிரம் கொடுத்து விட்டுப் போனார். அதைக் குளிக்கும்போது வழியில் ஒரு குளத்தில் நழுவி விழும்படி விட்டேன். ஞாபகமூட்ட வேறு ஒரு வஸ்துவும் என்னிடம் இல்லை. என்ன செய்கிறது? 'நீ கொண்டு வந்திருக்கும் குழந்தை யாருடையதோ? உன்னை எப்படி நான் அங்கீகரிக்க முடியும்? அப்படிச் செய்தேனானால் என்னுடைய பேரோடு பிரதாபமும் கெட்டுப் போய்விடாதா?' என்றார் அவர்.

உஷா: உங்களுக்கு ஓர் அடையாளங்கூடவா கிடைக்கவே இல்லை?

சகுந்தலை: கிடைச்சு என்ன பிரயோஜனம்? சொன்னால் நம்பினால்தானே? 'உன்னைப்பத்தி எனக்குக் கொஞ்சங்கூட ஞாபகமில்லை. எனக்கு நீ சொல்லறது எல்லாம் கட்டுக்கதையாய் இருக்கு' என்று சொல்லிவிட்டார்.

அதுக்காகத்தான் திரும்பவும் சொல்றேன், உஷா. கல்யாணத்தை விமரிசையாக நடத்து. நாகஸ்வரத்தை முன்னால் பத்து நாள், பின்னால் பத்து நாள் வாசிக்கச் சொல்லு. பத்து விரலுக்கும் மோதிரம் பண்ணிப்போடச் சொல்லு.

கல்யாணத்திற்குப் பிறகு இரண்டு மூன்று வருஷமாவது சாந்திக் கல்யாணம் பண்ணிக்கொள்ளாதே. அகத்துக்காரரைக் கொஞ்சம் தவிக்கவிட்டுப் பிறகு குடித்தனம் பண்ணப் போ.

அப்படிச் செய்தாயானால் உன்னை மறந்து போகாமல் ஆசையாக வைத்துக்கொண்டிருப்பார்.

அப்புறம் இன்னும் ஒன்று சொல்கிறேன் கேள்; மறதிக் குணம் உள்ளவரைக் கல்யாணம் பண்ணிக்காதே. பண்ணிண்டயோ

குடித்தனம் செய்வது ரொம்பச் சிரமம். வெச்சது வெச்ச இடத்தில் இராது. நீ ஒண்ணு வாங்கிண்டு வரச் சொன்னால் அவர் ஒண்ணு வாங்கிண்டு வருவார். ஆத்துக்கு உன் தங்கை வந்திருந்தாளானால் அவளை நீதான் என்று எண்ணி 'உஷா' என்று கூப்பிடுவார். ஜாக்கிரதையாய் இருக்கணுண்டியம்மா. இவ்வளவு சொல்றேன்னு அலுத்துப் போகாதே. எனக்கு அப்பா, அம்மா செவ்வையில்லை. பிறந்தவுடன் என்னை விட்டுவிட்டுப் போய் விட்டார்கள். எனக்குச் சமத்துச் சொல்லிக்கொடுக்க ஒருவரும் இல்லை.

[மறைகிறாள்.]

உஷா: என்ன செய்வதென்று இன்னும் புரியவில்லையே! சீதையைக் கேட்டால், 'சுயபுத்தி இல்லாதவரைக் கல்யாணம் பண்ணிக்காதே' என்கிறாள். தமயந்தியைக் கேட்டால், 'சீட்டாடற பேர்வழியைப் பண்ணிக்காதே' என்கிறாள். சகுந்தலையைக் கேட்டால், 'மறதியுள்ளவர் வேண்டாம்' என்கிறாள். இப்படி நான் ஒவ்வொருவரையும் ஒதுக்கி வைத்தால் பிறகு யாரைப் பண்ணிக்கறது? ஒவ்வொருவரிடமும் ஏதாவது ஒரு குறை இருக்கிறது. என்ன செய்வேன்?

[திரௌபதி வருகிறாள்.]

திரௌபதி: கவலைப்படாதே, உஷா. லோகம் என்றால் நாலும் கலந்துதான் இருக்கும். எல்லாம் ஒரே இடத்தில் பொருந்தி இராது. அதனால் நான் சொல்வது என்னவென்றால், ஒத்தருக்கு நாலஞ்சாப் பாரேன்.

உஷா: பார்த்து என்ன மாமி, பிரயோஜனம்? ஐந்து பேரையும் கல்யாணம் பண்ணிக்க முடியுமா?

திரௌபதி: என்னைப்போல் மாமியாருடைய அநுக்கிரகம் இருந்தால் முடியும்.

உஷா: என் விஷயத்திலேயே கருத்தாய் இருந்ததனாலே நீங்க யாரென்று கவனிக்கவில்லை, மாமி. நீங்க திரௌபதி யோன்னோ? ஏன் மாமி, மச்சுனர்களாலே உங்களுக்கு உபத்திரவம் இல்லையோ?

திரௌபதி: உபத்திரவம் ஏது? மச்சுனர் எல்லாருமே எனக்குத் தலைவர்களாகித் தாங்கினார்களே. ஆனால் பெரிய மச்சுனர் மாத்திரம் என்னை நடுச் சபையில் பரிகாசமாகப் பேசினார். அப்போது அவர் என் மச்சுனர் என்று எங்களுக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் அவரையும் கல்யாணம் பண்ணிண்டிருப்பேன். பாரத யுத்தமே நடந்திராது.

உஷா: அது என்னவோ மாமி, உங்கள் ஒருவரால்தான் ஐந்து பேரைக் கல்யாணம் பண்ணிக்க முடிந்தது. வேறு யாராலே யாவது முடிந்ததா?

திரௌபதி: அதுதான் சொன்னேனே; எனக்குக் கிடைத்த மாமியார் மாதிரி கிடைத்தால் ஒரு கஷ்டமும் இராது. 'ஐந்தும் என் வயத்திலேயிருந்து பிறந்த குழந்தைகள். ஐவரையும் பண்ணிண்டு ஒத்துமையாய் இரு. வருங்காலத்தில் என்ன நடக்கப் போகிறதென்று யார் கண்டா? ஓர்ப்படிச் சண்டையில்லாமே நித்திய சுமங்கலியாய் இரு' என்று மாமியார் அநுக்கிரகம் பண்ணினார். அந்த மாதிரித் தங்கமான மாமியார் இந்தக் காலத்தில் எங்கே இருக்கிறாள் சொல்லு? அகமுடையானோடு ஒரு வார்த்தை ரகஸ்யமாகப் பேசினால், 'மாட்டுப் பொண் பொல்லாதது; சொல்லிக் கொடுக்கிறது' என்பாள்.

உஷா: அது என்னவோ, மாமி. அஞ்சு பேரைப் பண்ணிக்க உங்களால் முடிந்தது! நான் இப்போது அப்படிச் செய்தேனானால் ஊர் சிரிக்காதா?

திரௌபதி: ஊர் சிரிப்பதிலேயிருந்து ஒண்ணும் சொல்ல முடியாதுடீ. புருஷர்கள் மாத்திரம் கணக்கில்லாமல் பெண்களைக் கல்யாணம் பண்ணிக்கலாமோ? ஸ்திரீகளுக்கு மாத்திரம் ஒரு புருஷன் போரும் என்று இவர்கள் என்ன சாஸ்திரம் படிக்கிறது? நீயும் என்னைப்போல் ஐந்து பேர் இல்லாமற் போனாலும், இரண்டு பேரையாவது கல்யாணம் பண்ணிக்கோ. என்ன நடக்கிறது பார்ப்போம்.

உஷா: என்னை அவமானம் பண்ணி நிஷித்தப் செய்தார்களானால்?

திரௌபதி: அதுக்கெல்லாம் பயப்படாதே. நான் கவனிச்சுக்கறேன். என்னையுந்தான் அவமானப்படுத்தணுமென்று சபைக்கு இழுத்துண்டு வாவில்லையா? என்னுடைய வஸ்திராபஹரணத்தைப் பார்க்கணும் என்று புருஷப் பாவிகள் எல்லாம் ஊமைக் கோட்டான்போல் முழித்துக்கொண்டு காத்திருந்ததுகள். என்ன நடந்தது? ஸ்ரீ கிருஷ்ணபகவானைக் கூப்பிட்டேன். சட்டென்று என் மானத்தைக் காப்பாத்தினார்.

உஷா, அதே கிருஷ்ணனைத் திரும்பவும் கூப்பிட்டு இந்தப் பூலோகத்திலேயே இன்னும் நூறு வருஷத்திற்குப் பெண் பிறவியே பிறவாமல் இருக்கும்படி வேண்டுகிறேன். இப்போ சிரிக்கறவா எல்லாரும் அப்போ என்ன பண்ணுவா, தெரியுமா? உத்தியோகத்துக்கு அப்ளிகேஷன் போடறமாதிரி வருவா. ஒரு பெண் கல்யாணத்துக்கு இருந்தால் நூறுபேர் சேர்ந்து கல்யாணம் பண்ணிக்கறேன்னு கெஞ்சுவா.

உஷா: நிஜமாகவா, மாமி? அப்படியும் நேரிடும்படிச் செய்ய முடியுமோ?

திரௌபதி: ஏன் முடியாது? உனக்கு வேண்டுமானால் சொல்லு. இப்போதே கிருஷ்ணனைக் கூப்பிட்டு ஒரு வரம் வேண்டுகிறேன்; என்ன?

உஷா: இருங்கோ, மாமி. இந்த அவசரத்தில் எப்படிப் பதில் சொல்ல முடியும்? யோசித்து இரண்டு மூன்று நாளில் சொல்லுகிறேன்.

திரௌபதி: போடி, பயந்தாங்கொள்ளி! உங்களுக்கெல்லாம் தைரியம் ஏதடி? அதனால்தான் ஒரு அகமுடையான்கூடக் கிடைக்கிறதில்லை. பணத்தை வாரிக்கொடுத்து வாங்கவேண்டியிருக்கு. எனக்கு நேரமாச்சம்மா, நான் வரேன்.

[அவள் மறைய உஷாவின் தங்கை சுதா வருகிறாள்.]

சுதா: அக்கா, அம்மா காப்பி சாப்பிடக் கூப்படறா.

உஷா: (கண்ணைத் துடைத்துக்கொண்டு) யாருடீ நீ?......... அம்மா காப்பி சாப்பிடக் கூப்பிடறாளா? இதோ வரேன்.

# 3

# சதிபதி ஆலோசனை

**பாத்திரங்கள்**

உஷா
சுதா
ரவி

உஷாவின் வீடு: ஓர் அறையில் உட்கார்ந்து கொண்டு அவள் சங்கீதப் பயிற்சி செய்துகொண்டிருக்கிருள். 'கீதார்த்தமு' என்ற பாட்டின் கடைசியில் வரும் 'வரத்யாகராஜு' என்னும் பதத்தைத் திரும்பத் திரும்பப் பாடப் பழக்கிக்கொண் டிருக்கிருள்.

**உஷா:** (பாடுகிருள்) *'வரத்யாகராஜு'* சனியன் எத்தனை தரம் சொன்ஞலும் சரியாய் வரமாட்டேன் என்கிறதே; (பாடுகிருள்) *'வரத்யாகராஜு......'*

[சுதா பிரவேசிக்கிருள்.]

**சுதா:** ஏன் அக்கா, இதையே திரும்பத் திரும்பச் சொல்லிண்டிருக்கே?

**உஷா:** சொல்லிப் பார்க்கிறேன் நானும். சரியா வர மாட்டேன் என்கிறதேடி. (பாடுகிருள்) *'வரத்யாகராஜு......'*

**சுதா:** என்னத்துக்காக இந்தப் பாட்டைப் பாடறே? வேறு ஏதாகிலும் பாடுகிறதுதானே?

**உஷா:** இல்லே, சுதா. முதல் முதலாக வறவா மனசிலே பதியறத்துக்குச் சுருட்டி ராகம் நல்லது. புதிசாகக் கேட்க வறவாளுக்கு இது ரொம்ப நன்னுயிருக்கும். திரும்பவும் முதலிலேயிருந்து பாடறேன். (யாரோ வீட்டிற்குள் வருவதை அறிந்து) சுதா, யாரோ நம்மாத்துக்கு வந்திருக்காப்போல் இருக்கு. கீழே போய்ப் பார்த்துவிட்டு வா. சட்டுனு வந்து எனக்குச் சொல்லு.

சுதா, அங்கே போய் அவா பேசறதைக் கொஞ்சம் கவனி. எல்லாரும் இங்கே வரப் போருளா, இல்லாவிட்டால் ஒரு மாமா இருக்காரே அவர் மாத்திரம் வருரா என்று அவா பேசறதிலிருந்து தெரிஞ்சுண்டு வா.

சுதா : எந்த மாமா ?

உஷா : கீழே போயேன் தெரியும். என்னைப் பார்ப்பதற்கு ஒரு மாமி, ஒரு மாமா, அப்புறம் வேறொரு சின்ன மாமா எல்லாரும் வந்திருக்கா. எல்லாரும் இங்கே வரப்போறாளா, சின்ன மாமா மாத்திரமா என்று கவனித்துக் கேட்டுண்டு வந்து என்னிடம் சொல்லு, பார்ப்போம்.

சுதா : உன்னை எதற்காகப் பார்க்க வந்திருக்கா ?

உஷா : அப்புறம் சொல்றேன். சமத்தோன்னோ, ஓடு.

[சுதா போகிறாள்.]

உஷா : இதோ கடைசித் தரம் பாடிப் பார்க்கிறேன்.

['கீதார்த்தமு' என்கிற பாட்டைப் பாடுகிறாள். பாட்டு முடிந்ததும் சுதா திரும்பி வருகிறாள்.]

சுதா : அக்கா, உன் பாட்டு கீழே நன்னாக் கேட்டது. 'குரல் நன்னா இருக்கு' என்று வந்திருக்கிற மாமி, அம்மாவிடம் சொன்னாள்.

உஷா : அந்தச் சின்ன மாமாவைப் பார்த்தாயா ?

சுதா : பார்த்தேன், அக்கா. 'நீ போய்ப் பார்த்துவிட்டு வறயா ?' என்று அந்த மாமி அவரைக் கேட்டாள்.

உஷா : சரி; பொறுப்புடன் அவர் இங்கே வந்துட்டுப் போகிறமட்டும் சமத்தாய் இரு. குறுக்கே கிறுக்கே பேசாதே.

[ரவியின் வருகைக்குத் தயார் செய்துகொள்கிறாள்.]

சுதா : அவர் என்னத்துக்கு வரார் என்று சொன்னால்தான் ! உன்னைக் கல்யாணம் பண்ணிககவா ?

உஷா : நீ, பேசாமல் இரு. அப்புறம் சொல்றேன்.

[ரவி உள்ளே வருகிறான். இருவருக்கும் பரஸ்பரம் எப்படி நடந்து கொள்வது என்று புரியவில்லை. உஷா லஜ்ஜையுடன் ஓரத்தில் நிற்கிறாள். ரவி புஸ்தக அலமாரியிடம் போய் என்ன செய்வது என்று தோன்றாமல் புஸ்தகங்களை ஒவ்வொன்றாகக் கவனித்துப் பார்க்கிறான். பிறகு பேசியாக வேண்டுமே என்ற எண்ணத்தோடு நாற்காலியொன்றில் அமருகிறான்.]

ரவி : பாடினதைக் கேட்டேன். ரொம்ப நன்னா இருந்தது என்று அம்மா சொன்னா. இன்னும் ஒரு பாட்டைப் பாடுகிறாயா ?

உஷா : என்ன பாட்டுப் பாடறது ?

ரவி : 'சக்கனி ராஜா' என்ற பாட்டைப் பாடு. எங்க அம்மாவுக்கு ரொம்பப் பிடிக்கும் அது.

உஷா : எனக்கு அது பாடம் இல்லை.

ரவி : 'Light Song' (துக்கடாப் பாட்டு) ஏதாவது தெரியுமா ?

உஷா: 'ஆசைமுகம்' தெரியும்.

ரவி: அது வேண்டாம்! கேட்டுக் கேட்டுக் காது புளித்துப் போச்சு. 'நல்வாக்கு நீ கொடடீ' தெரியுமா? எங்க அம்மாவுக்கு அதுவும் ரொம்பப் பிடிக்கும்.

உஷா: (தைரியத்துடன்) அது பழைய காலத்துப் பாட்டுன்னு! அதை இப்போ யார் பாடறு?

ரவி: தெரியுமா என்று கேட்டேனே தவிர உன்னுடைய அபிப்பிராயத்தைக் கேட்கவில்லை. 'ஆசையுள்ள ரோஜாப் பூவே' தெரியுமா?

உஷா: தெரியாது.

ரவி: 'அத்தை மகன் கிருஷ்ணசாமி என்ன சொன்னுரு' என்கிற பாட்டுத் தெரியுமா?

உஷா: தெரியாது.

சுதா: எனக்கு ஒரு பாட்டுத் தெரியும் மாமா, பாடட்டுமா?

உஷா: பேசாமல் இரு.

ரவி: பாடட்டுமே! (சுதாவைப் பார்த்து) பாடு பார்ப் போம்.

சுதா: (பாடுகிறுள்.)

''மாடுன்னு மாட்டைப் பாருங்கோ—ஏசாமி
மயிலைக் காளையைக் கட்டிப் பாருங்கோ!
மாடுன்னு மாட்டைப் பாருங்கோ—ஏசாமி
மயிலைக் காளையைக் கட்டிப் பாருங்கோ!
முன்சுழியும் பார்த்துக்கோ
பின்சுழியும் பார்த்துக்கோ. (மா)

கும்பகோணம் ரோட்டுலே
குமுக்குப் போடற ரோட்டுலே,
தஞ்சாவூரு ரோட்டுலே
தமுக்குப் போடற ரோட்டுலே. (மா)

கொள்ளு மூட்டையும் ஏத்திக்கோ
எள்ளு மூட்டையும் ஏத்திக்கோ
வறவனையும் ஏத்திக்கோ
போறவனையும் ஏத்திக்கோ
மாடுன்னு மாட்டைப் பாருங்கோ—ஏசாமி
மயிலைக் காளையைக் கட்டிப் பாருங்கோ!''

ரவி: பேஷ்!

உஷா: (சுதாவைப் பார்த்து) சுதா, உன்னை அம்மா கூப்பிடறுள்போல் இருக்கு. போய்ப் பார். (ரவியைப் பார்த்துக் கிண்டலாக) உங்க அம்மாவுக்கு இன்னும் என்ன பிடிக்கும்?

ரவி : இப்போ உன்னைப் பிடிச்சிருக்கு. 'பொண் பார்ப்ப தற்குத் தேவலை. பாட்டும் நன்னாப் பாடுகிறாள்' என்றாள்.

உஷா : சந்தோஷம். அம்மா நம்முடைய கல்யாணத்தை நிச்சயம் செய்துவிட்டாரோன்னோ ?

ரவி : முக்கால்வாசி !

உஷா : அப்பா என்ன சொன்னார் ?

ரவி : 'நல்ல வரன் என்று எனக்குத் தோன்றதுடா' என்றார்.

உஷா : இன்னும் யாராவது, ஏதாவது சொல்லவில்லையா ?

ரவி : யாரைக் குறிப்பிடுகிறாய் ?

உஷா : யாராவது இருப்பாளே ! உங்கள் சிநேகிதர்கள் என்ன சொன்னார்கள் ?

ரவி : இந்த வரன் நிச்சயமானா அவர்கள் எல்லாரையும் 'pictures' (சினிமா) பார்ப்பதற்குக் கூட்டிக்கொண்டு போகச் சொல்லி இருக்கார்கள்.

உஷா : உங்களுக்குச் சொல்லிக் கொடுக்க இன்னும் ஒருவரும் இல்லையே ?

ரவி : என்னவோ பொடி வைத்துப் பேசுகிறாயே ! உன் 'idea' (கருத்து) என்ன ?

உஷா : என் 'idea' (கருத்து) என்னவா ? ஒளிக்காமல் சொல்லட்டுமா ?

ரவி : சொல்லு.

உஷா : நீங்கள் ஸ்ரீராமர் 'type' (மாதிரி) என்று தோன்றுகிறது.

ரவி : ஏன் ?

உஷா : உங்களுக்காக ஒரு தீர்மானமும் இல்லை போல் இருக்கே ! அம்மாவுக்குப் பாட்டுப் பிடிக்கும் என்று என்னைப் பாடச் சொன்னீர்கள். அப்பாவுக்கு வான் சம்மதமென்று என்னைப் பார்க்க வந்தீர்கள். உங்களுக்காக ஒரு 'idea' (கருத்து)வும் கிடையாதா ?

ரவி : ஏன் இல்லை ? என் 'idea' (கருத்து)வை ஒளிக்காமல் சொல்லட்டுமா ?

உஷா : ஆஹா !

ரவி : நீ தமயந்தி 'type' (மாதிரி).

உஷா : ஏன் ?

ரவி : உன்னோடு இரண்டு வார்த்தை பேசுமுன் என்னுடைய குறைகளை ஆராய்ச்சி செய்து விஸ்தரிக்க ஆரம்பித்து விட்டாயே ! அதை நான் பொருட்படுத்தவில்லை. கபடில்லாமல் பேசுகிறாயே; அது எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு.

உஷா : சந்தோஷம். இவ்விடத்திலும் அப்படியே!

ரவி : இப்படிப் பேசிக்கொண்டிருப்பதில் பயனில்லை. நான் வந்த காரியம் உன்னைப் பாடச்சொல்லிக் கேட்கவும், உன்னைப் பார்க்கவும் மாத்திரமல்ல. இவைகளின் 'effect' (குணம்) 'temporary' (அந்த ஸமயத்துக்கு மாத்திரமே.) உன் குண தோஷம் என்ன, என்னோடு பொருந்தினதா என்று அறியும் பொருட்டு......

உஷா : எனக்கும் உங்களுடன் குணப் பொருத்தம் உண்டா என்று அறிய ஆவலாயிருக்கு.

ரவி : நான் சொல்வதையே திருப்பி நீயும் சொல்லாதே; சீதை 'type' (மாதிரி) ஆகிவிடுவாய். உனக்காகப் பிரத்தியேகமான 'ideas' (கருத்துக்கள்) இருக்க வேண்டும். கொடிபோல் என்னைப் பற்றிக் கொண்டு சுற்றிச் சுற்றி வரக் கூடாது.

உஷா : அதிகாரம் வேண்டாம்! நான் இன்னும் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கவில்லை என்பது ஞாபகம் இருக்கட்டும்.

ரவி : இல்லை; என்னுடைய கொள்கையைச் சொன்னேன். எனக்குத் தகுந்த மனைவியினிடம் இருக்கவேண்டிய குணங்களை விளக்கிச் சொன்னால்தானே நமக்குப் பொருத்தம் இருக்கா, இல்லையா என்பது வெளிப்படும்?

உஷா : நீங்கள் சொல்வதில் எனக்கு ஆக்ஷேபமில்லை. நானும் எனக்குத் தகுந்த கணவரிடம் இருக்கவேண்டிய குணங்களைச் சொல்ல விரும்புகிறேன்.

ரவி : தாராளமாகச் சொல்.

உஷா : நீங்கள் அபரிமிதமாகச் சீட்டாடக் கூடாது. வீட்டுப் பொறுப்பையும் சற்றுக் கவனித்துக் கொள்ளவேண்டும்.

ரவி : சரி. நீ நாட்டுப் புறமாய் இருக்கக் கூடாது. நாகரிகமாகப் பழகத் தெரிந்துகொள்ள வேண்டும். என் சிநேகிதர் யாராவது வந்து நான் இல்லாதபோது கேட்டால், எலிக் குஞ்சுபோல் உள்ளே இருந்துகொண்டு, 'அவர் இல்லை' என்று பதில் சொல்லக் கூடாது.

உஷா : சரி. நான் சொல்வதையெல்லாம் நீங்கள் ஒரு காதால் கேட்டு மற்றொரு காதால் விடக்கூடாது. ஞாபகமாக, எதை வாங்கி வரச் சொல்லுகிறேனோ அதை வாங்கி வர வேண்டும்.

ரவி : ஏன் இப்படியெல்லாம் நிபந்தனைகள் போடுகிறாய்?

உஷா : நீங்கள் மட்டும், 'இப்படி இருக்கணும்' என்று கோடிக்கிறீர்களே!

ரவி : அதற்கெல்லாம் காரணம் உண்டு.

உஷா : என்ன காரணம்?

ரவி : ஒரு கனவு கண்டேன்.

உஷா: கனவா? நானும் ஒரு கனவு கண்டேன்.

ரவி: இதோ பார். நான் எதைச் சொன்னாலும் நீயும் அப்படியே திருப்பிச் சொல்லுகிறாயே! இது என்ன? என்னைத் திருப்தி செய்வதற்காகவா?

உஷா: உங்களை எதற்குத் திருப்தி செய்ய வேண்டும்? நீங்கள் இன்னும் என் கணவர் அல்லவே!

ரவி: தெரியும்: பின் ஏன் நான் பேசுவதை ஒட்டியே பேசுகிறாய்?

உஷா: நம்பினால் நம்புங்கள். இல்லாவிட்டால் பரவாயில்லை. கனவு கண்டேன் என்கிறேனே!

ரவி: என்ன கண்டாய்?

உஷா: சீதை, தமயந்தி, சகுந்தலை, திரௌபதி எல்லாரையும் கண்டேன். சரியான கணவரைத் தேர்ந்தெடுக்கும் பொருட்டு எனக்கு உபதேசம் செய்தார்கள்.

ரவி: ஸ்ரீராமர், நளன், துஷ்யந்தன், யுதிஷ்டிரர் எல்லாரையும் நான் கண்டேன். நல்ல மனைவிக்கு வேண்டிய குணங்களைப்பற்றி எனக்குப் போதித்தார்கள்.

உஷா: ராமர் சுயபுத்தியே இல்லாதவர்.

ரவி: சீதை சுத்தப் பயந்தாங்கொள்ளி.

உஷா: நளன் வெறும் சூதாடி.

ரவி: தமயந்தி பெரும் வாயாடி.

உஷா: துஷ்யந்தன், தான் கட்டின பெண்டாட்டியைக் கூட மறந்தவன்.

ரவி: சகுந்தலை சுத்த நாட்டுப்புறம்.

உஷா: திரௌபதி சொன்னதை மாத்திரம் உங்களிடம் சொல்ல மாட்டேன். அது ஒரு ரகசியம்!

ரவி: சொல்லாது போனால் போ. யுதிஷ்டிரர் சொன்னதை நான் உன்னிடம் சொல்ல மாட்டேன். அது இன்னும் பெரிய ரகசியம்.

உஷா: அவர்களைப்பற்றி யெல்லாம் சொல்லி என்ன பயன்? நாம் எப்படி?

ரவி: அதுதான் தெரியவில்லை. சற்றுப் பொறுமையுடன் ஆலோசிப்போம். உண்மையைச் சொல்லு; என்னுடைய தோற்றம் உனக்குப் பிடித்திருக்கா?

உஷா: பாதகமில்லை.

ரவி; படிப்பு, பணம், பதவி,......

உஷா: ஆக்ஷேபமில்லை.

ரவி: என் அம்மா, அப்பா....

உஷா: அவர்களை ஏன் இழுக்கிறீர்கள்? தனியே இருக்கட்டும் அவர்கள்.

ரவி: அப்படியானால் உனக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதில் இஷ்டந்தானே ?

உஷா: நான் அப்படிச் சொல்லவில்லையே ?

ரவி: ஏன் இன்னும் சொல்லவில்லை ?

உஷா: எப்படிச் சொல்வது? ஐந்து நிமிஷத்தில் ஒரு மனிதரை முற்றும் எப்படி அறிய முடியும் ?

உங்கள் குலம், கோத்திரம், 'degree' (பட்டம்), 'Principal's certificate' (பிரின்ஸிபாலின் நற்சாட்சிப் பத்திரம்) இவைகளைக் கொண்டு எவ்வளவு தூரம் சொல்லலாம்? அந்தரங்கத்தில் நீங்கள் பொல்லாதவராக இருக்கலாம், முன்கோபியாக இருக்கலாம், அகமுடையாளை அடிப்பவராக இருக்கலாம்.

ரவி: இல்லை; ஒருபோதும் இல்லை.

உஷா: எப்படிச் சொல்ல முடியும்? மறைந்திருக்கும் குணங்களை யாரால் காண முடியும்? மனைவி என்றால் கிள்ளுக் கீரைபோல் பாவிக்கும் குணம் உங்களிடம் இருக்கலாம். மனைவியின் சமையலில் எப்போதும் குறை சொல்லும் குணம் உங்களிடம் இருக்கலாம். அல்லது பிறத்தியார் பெண்டாட்டியை உற்றுப் பார்க்கும் குணம் உங்களிடம் இருக்கலாம்.

ரவி: என்னைப் பார்த்தால் அப்படித் தோன்றுகிறதா ?

உஷா: இப்போது இல்லை; ஆனால்....

ரவி: எப்போதும் இல்லை. உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டேனானல் வேறொரு பெண்ணைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டேன். நீ உண்டு, என் உத்தியோகம் உண்டு.

உஷா: உத்தியோகத்தை இளையாளாகக் கொண்டு 'file' (ஆபீஸ் கட்டு) களை வீட்டுக்குக் கொண்டுவருபவராய் இருக்கலாம்; லீவு நாட்களில் ஆபீஸுக்குப் போகிறவராய் இருக்கலாம்.

ரவி: என்னைச் சொல்லுகிறாயே, நீ மாத்திரம் என்ன? உன்னிடம் மறைந்த குணங்கள் எவ்வளவு இருக்கோ? யார் கண்டா? உன் பாட்டையும் முகவெட்டையும் கொண்டு நான் எவ்வளவு தூரம் போக முடியும்? நீ நகைப் பைத்தியமுள்ளவளாய் இருக்கலாம்; சிறிய விஷயங்களுக்காக என்னை நச்சுப் பண்ணுறவளாய் இருக்கலாம்; மற்ற எல்லா ஸ்திரீகளுடனும் பழகத் தெரியாமல் சண்டை போடுகிறவளாய் இருக்கலாம்; பெண் குழந்தைகளையே பெறுபவளாய் இருக்கலாம்; அஷ்ட தரித்திரமாய் இருக்கலாம்.

உஷா: என்னைத் தூஷிப்பதற்கா இங்கே வந்திருக்கிறீர்கள்? பாக்கி இருப்பதையெல்லாம் சொல்லிவிடலாமே !

ரவி: பாக்கி இல்லை. சொல்லி என்ன பயன்? நம்முள் மறைந்திருக்கும் குணதோஷங்களைப்பற்றி எதற்கு ஆராய்ச்சி செய்ய வேண்டும்? உனக்கே உன்னைப்பற்றி முழுவதும் தெரியாது; எனக்கும்

என்னைப்பற்றி எல்லாம் தெரியாது. மறைந்த தோஷங்கள் மறைவிலேயே இருக்கட்டும். இப்போது தெரிய வேண்டிய அவசியமும் இல்லை. இப்போது இருக்கிறபடியே நீயும் நானும் கல்யாணம் பண்ணிக்கொள்வோம்.

**உஷா :** எதற்காக?

**ரவி:** 'Let us form an axis'. (நாம் ஒரு கூட்டு அல்லது அச்சு ஒப்பந்தம் செய்துகொள்ளலாம்.) ரவி - உஷா 'Axis' (ஒப்பந்தம்) பிரசித்தமடையலாம்.

**உஷா:** எப்படி?

**ரவி:** நான் சொல்கிறபடி செய். என்னுடைய குணங்களை எல்லாரிடமும் பிரகடனம் செய். என் சம்பளத்தைப் பதின்மடங்காக்கிச் சொல். என் புத்தியை நூறு மடங்காக்கிச் சொல். எனக்கு உன்மேல் இருக்கும் பிரியத்தை ஆயிரம் மடங்காக்கிச் சொல்.

**உஷா:** 'Axis partner' (அச்சுக் கூட்டாளி)க்கு நீங்கள் என்ன செய்வீர்கள்?

**ரவி:** எது வேண்டுமானாலும் செய்கிறேன். சம்பளத்தை அப்படியே உன் கையில் கொடுக்கிறேன்; அம்மாவை அகற்றுகிறேன்; உன்னைத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடுகிறேன்.

சரி, போகட்டுமா? 'பெண்ணைப் பார்த்தேன். சம்மதம்' என்று அம்மாவிடம் சொல்லட்டுமா?

**உஷா:** வேண்டாம்.

**ரவி:** ஏன் வேண்டாம்? உனக்கு என்ன ஆக்ஷேபம்?

**உஷா:** ஆக்ஷேபம் இல்லாவிட்டாலும் இப்போ எதற்குத் தீர்மானத்திற்கு வர வேண்டும்? கல்யாணத்தில் எனக்கு இன்னும் உத்ஸாகம் ஏற்படவில்லை.

**ரவி:** இல்லாவிட்டாலும் இப்போ தீர்மானத்திற்கு வந்தாக வேண்டும். எல்லா ஏற்பாடுகளும் தயாராய் இருக்கின்றன. நம் பெற்றோர் லௌகிக விஷயத்தைப்பற்றித் திருப்திகரமான முடிவுக்கு வந்திருக்கிறார்கள். 'மாட்டேன்' என்று சொல்லி அவர்களை ஏமாற்றம் அடையச் செய்யலாமா?

**உஷா:** நீங்கள் சொல்ல வேண்டாம். நான் 'மாட்டேன்' என்று சொன்னதாகச் சொல்லிவிடுங்கள்.

**ரவி:** அது ரொம்பக் கேவலம்னு!

**உஷா:** ஏன்?

**ரவி:** என்னைக் கல்யாணம் பண்ணிக்க ஒரு பெண் மறுத்துவிட்டாள் என்றால் என்னுடைய 'Position' (அந்தஸ்து) என்னவாகும்? அது ரொம்ப மரியாதைக் குறைச்சல்! 'பெண் கறுப்பாயிருக்கு' என்று நான் சொல்லி மறுத்தால் பரவாயில்லை. ஆனால் இப்போ

அதுவும் பிரயோஜனப்படாது. உன்னைக் காட்டிலும் மோசமாய் உள்ள ஒரு பெண் என்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டுவிடும்.

உஷா: ஏன்?

ரவி: பிரம்மசாரியாய் எப்படி அதிக நாள் இருக்க முடியும்? கல்யாணம் என்பது நாம் செய்துகொள்ள வேண்டிய சடங்கு. இல்லாமற்போனால் உற்றார், உறவினர், சிநேகிதர் எல்லாரும் வெளிப்படையாகவோ, ஜாடையாகவோ எல்லாவித முயற்சிகளாலும் வற்புறுத்திக் கடைசியில் கால்கட்டுக் கட்டிவிடுவார்கள். ஆகையால் இப்போதே சம்மதித்துவிடுறேன். நீயும் அப்படியே செய்.

உஷா: நீங்கள் சம்மதிப்பதற்காக நான் எதற்குச் சம்மதிக்கணும்? வேறு மனப்பூர்வமான காரணம் வேண்டும்.

ரவி: உன்னிடம் அதிக தோஷம் இல்லை.

உஷா: அது மட்டும் போதுமா?

ரவி: நீ ஒன்றும் கோரமாய் இல்லை

உஷா: அது போதுமா?

ரவி: உள்ளதை உள்ளபடி ஸகஜமாகப் பேசுகிறாய். அது எனக்குப் பிடித்து இருக்கு. நானும் என் மனத்தில் இருப்பதை உன்னிடம் விளக்கிச் சொல்லுகிறேன்:

என்னுடைய வாழ்க்கைக்கு உதவியாய் இருக்க ஒருத்தி வேண்டும். என் வீட்டிற்கு எஜமானி வேண்டும். நமக்குள் இருக்கும் அரிய குணங்களை வெளிப்படுத்திப் பிரகாசிக்கச் செய்ய வேண்டும். என் குலத்திற்கு ஒரு குத்துவிளக்கு வேண்டும். எனக்குத் தனிமையாய் இருந்து அலுத்துப் போய்விட்டது. மனத்தில் ஒருவிதத் தேக்கம் ஏற்பட்டுவிட்டது. ஏன்? — பெண்மையின் மேன்மையை நான் அறியாததனால்! பாதி உலகம் பெண்பால்; பெண்மையை அறியாதவன் பூவுலகை அறியமாட்டான். 'நான்' என்னும் பித்தத்தைக் கொண்டு நிலையில்லாமல், மார்க்கம் தெரியாமல் ஒளியிழந்து இருப்பான். சிருஷ்டியின் சிகரம் ஸ்திரீ. தர்மத்திற்குச் சிறந்த சாதனம் ஸ்திரீ. உன்னுடன் பழகி உன்னை நன்றாய் அறிந்தேனானால் எல்லா ஸ்திரீகளையும் அறிந்ததுபோல் ஆகும். அவர்களையெல்லாம் உன்னிடம் காண்கிறேன். பெண்மையின் அழகை உன் முகத்தில் காண்கிறேன். பெண்மையின் ஒளியை உன் கண்களில் காண்கிறேன். ஸீதை, சகுந்தலை, தமயந்தி, திரௌபதி எல்லாரும் நீயே. உனக்குப் பொருத்தமாகத்தான் உஷா என்று பெயர் இட்டிருக்கிறார்கள். சூரியோதயத்திற்கு முன் எழுந்தவள் நீ. உன்னை நான் இன்றுதான் கண்டேன் என்று எண்ணாதே. பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்னமேயே எனக்கு உன்னைத் தெரியும். பஞ்சபூதங்களாகப் பிரிந்து இருப்பிடம் இல்லாமல் ஸஞ்சாரம் செய்யும்

ஆத்மாக்களுக்குப் பிறவி அளிப்பவள் நீ. பிறக்கும் குழந்தைக்கு அன்பும் ஆதரவும் ஊட்டுபவள் நீ. 'ஓ ஜகஜ்ஜனனீ, ஓங்கார ரூபிணி, மனோன்மணி, கல்யாணி' என்று வழங்கப்படுபவளும் நீயே!

இதுதான் நான் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டிய தற்கு மனப்பூர்வமான காரணம்.

உஷா: எனக்கு இவ்வளவு பேசத் தெரியாது. ஆனால் ஒரு விஷயத்தை மாத்திரம் நன்றாய் அறிவேன். நாம் கல்யாணத்தி னின்று தப்ப முடியாது. நீங்கள் இப்போது மறுத்தாலும் நான் மறுத்தாலும் interview-க்கு (என்னைப் பார்க்க) நாளைக்கு மற்றொரு பிள்ளை வருவான். உங்களைப்போல் பாடச் சொல்வான். கேள்விகள் கேட்பான்; மண்பான்மையை ஆராய்ச்சி செய்வான்.

ரவி: (தீர்மானமாக) மாட்டான்.

உஷா: ஏன் மாட்டான்?

ரவி: நான் அவனுக்கு அவ்விதச் சந்தர்ப்பம் கொடுத்தால் தானே? (நெருங்கி) சரிதானே, உஷா?

உஷா: (வேறு பதில் சொல்லத் தோன்றாதவளாய்) சரி.

# மேக ஸந்தேசம்

## பாத்திரங்கள்

சாரங்கன்
மேகம்
ரங்கநாயகி
ஜயம்
மேகமாலா

# 1

ஸிம்லா. கோடைக்காலம். சாரங்கன் என்னும் யௌவன புருஷனின் அறை. இரவு நேரம். கடிகாரம் 11 மணி அடிக்கிறது.

சாரங்கன் : (படுக்கையில் புரண்டு கொண்டே) ஆச்சு; பதினொரு மணியாச்சு! இன்னமும் தூக்கம் வரவில்லையே! இப்படி நான் ஒருபோதும் இருந்ததில்லையே! நாளைக்குப் பரீக்ஷை என்றால்கூட முந்தின நாள் இராத்தூக்கம் கலையாமல் கவலையற்று இருப்பேனே! ஒரு நாளா, இரண்டு நாளா? ஆறுமாச காலமாயிற்று; இப்படி இருக்கிறேன். இதற்கெல்லாம் காரணம்? (தன்னுடைய மனைவி ரங்கநாயகியின் போட்டோவை எடுத்துக்கொண்டு) 12 சதுர அங்குலத்திற்குள்ளாகி, அழகு அனைத்துக்கும் இருப்பிடமாகி, கண் கொட்டாமல் என்னை இப்படி உற்று நோக்கிக்கொண்டு, பேசா மடந்தையாய் ஏன் இருக்கிறாய்? தம்பி கல்யாணத்திற்குச் சென்றவள், கல்யாணமான பிறகு வந்தாயா? அக்காவின் வளைகாப்புக்கு இருந்து விட்டு வருகிறேன் என்று எழுதினாய்! வந்தாயோ? மன்னியின் சீமந்தத்திற்கு இருந்துவிட்டு வருகிறேன் என்றாய்! சீமந்தமானதும் என்ன சொன்னாய்? தாத்தாவின் ஷஷ்டியப்த பூர்த்திக்கு இருந்து விட்டு உடனே வருகிறேன் என்றாய்! இந்த ரீதியில் போனால் என்னுடைய ஷஷ்டியப்த பூர்த்திக்குத்தான் வருவாயோ என்னவோ? ரங்கநாயகி, இதோ பார்; உன்னுடைய பேச்சில் எனக்கு நம்பிக்கை இல்லை. இனிமேல் நான் உனக்குக் கடிதம் எழுதப் போவதில்லை.

[வானத்தை அளாவிக்கொண்டிருக்கும் மேகம் ஒன்று ஜன்னலருகே வருகிறது.]

மேகம் : சாரங்கா, கோபம் கொள்ளாதே!

சாரங்கன் : யார் அது?

மேகம் : நான்தான்; மேகம்!

சாரங்கன் : மேகமா! உன்னுடைய குரல் பெண்ணின் குரல் போல் இருக்கிறதே! உள்ளே வா. என்ன சமாசாரம்?

மேகம் : (உள்ளே ஸ்திரீ ரூபமாய் வந்து) என்னுடைய விஷயம் ஒன்றும் இல்லை. தூக்கம் இல்லாமல் விரக தாபத்தால் பரிதபிக்கும் உனக்கு ஏதாவது உதவி புரியலாம் என்று எண்ணியே உன்னிடம் வந்தேன்.

சாரங்கன் : என்மேல் தயை கூர்ந்ததற்கு வந்தனம். இப்போது நான் என்ன செய்வேன்! விரக தாபத்தை என்னால் பொறுக்க முடியவில்லையே!

மேகம் : அதைத் தீர்க்க ஓர் உபாயம் இருக்கிறது.

சாரங்கன் : என்ன?

மேகம்: நீயாகச் சொல்லு, பார்க்கலாம். என்னைப் பார்த்ததும் உனக்கு ஒன்றும் தோன்றவில்லையா?

சாரங்கன்: உனக்கு மேகமாயிருப்பதைக் காட்டிலும் மனித ரூபந்தான் ரொம்பப் பொருந்தி யிருக்கிறது என்று தோன்றுகிறது.

மேகம்: சபல புத்தியுள்ளவனே, நான் சொல்லுகிறேன். கேள்: 'ஸெக்ரெடரியேட்' டின் குல தெய்வம் யாது? 'ஸம்பிரதாயம்' (precedent) அல்லவா?

சாரங்கன்: ஆமாம்!

மேகம்: அந்த முறையை உன்னுடைய சொந்த விஷயத்தில் பிரயோகம் செய்.

சாரங்கன்: எப்படி?

மேகம்: உனக்கு எல்லாம் சொல்லித் தர வேண்டுமா? (காளிதாஸனின் 'மேகதூத' த்திலிருந்து முதல் இரண்டு சுலோகங்களைப் பாடுகிருள்.) தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டு ஹிமாசலத்தில் ராமகிரி என்னும் ஆசிரமத்தில் வசித்து வந்த யக்ஷன் ஒருவனிடமிருந்து நான் அவனுடைய மனைவிக்குச் சேதி கொண்டு போனதை மறந்துவிட்டாயோ?

சாரங்கன்: எனக்கும் அவ்விதம் உதவி செய்வாயோ?

மேகம்: வேறு எதற்கு உன்னிடம் வந்தேன்? விஷயத்தைச் சொல். இப்போதே புறப்பட்டுப் போகிறேன். உன் மனைவி எங்கே இருக்கிருள்? அந்த ஊருக்கு மார்க்கம் எப்படி? விவரமாகச் சொல்.

சாரங்கன்: கிட்டே வந்து உட்கார். நீ இங்கே வந்ததனுலேயே எனக்கு மனசு நிம்மதியாகிவிட்டது. எல்லா மேகங்களும் உன்னைப் போலிருந்தால் லோகத்தில் விரக தாபம் ஏற்படாது.

மேகம்: முகஸ்துதி செய்யாதே. விஷயத்தைச் சொல்.

சாரங்கன்: சொல்லுகிறேன். கேள்: முதல் முதலாக இங்கிருந்து 'கால்கா' வுக்குப் போய்ச் சேரவேண்டும். வெகு சிரமமான பிரயாணம். ரெயிலில் போனுல் 113 குகை வழிகளைக் கடக்க வேண்டும். நரக வேதனை! ரெயில், மலைகளைச் சுற்றிச் சுற்றித் தட்டாமாலையாடும். உன்னுடைய தலைக்குப் பித்தம் ஏறும். வாயில்ஜலம் ஊறும்; வாந்தியெடுக்கும்; மோட்டாரிலும் போகலாம். பிரயாணம் 3½ மணி சாவகாசம். கோணம் கோணமாக வளைந்து வளைந்து போகும் (Hair pin bends). தட்டுத் தவறினுல் ஸ்ரீவைகுண்டப் பிராப்திதான்.

மேகம்: ரெயிலும் வேண்டாம்; மோட்டாரும் வேண்டாம். மேகமாய் மாறிப் பிரயாணம் செய்கிறேன். ஆனுல் இந்தப் பக்கம் சஞ்சாரம் செய்யும் எனக்குத் தமிழ் நாட்டுப் பெண்களிடம் பரிசயம் இல்லை. உன்னுடைய மனைவியைப் பார்க்குமுன் சில தமிழ் நாட்டுப் பெண்களைப் பார்க்க வேண்டும்போல் இருக்கிறது.

சாரங்கன் : ரொம்ப நல்லது. அப்போதுதான் ரங்கநாயகிக்கும் இதர ஸ்திரீ வர்க்கத்துக்கும் உள்ள தாரதம்மியங்கள் புலப்படும். சரி, டெல்லிமட்டும் மேகமாகச் செல். அங்கே ஸ்திரீயாக மாறி, மேகமாலை என்று பெயர் வைத்துக்கொள்.

மேகம் : டெல்லியில் எங்கே தங்குவது ?

சாரங்கன் : அதைப்பற்றித்தான் யோசிக்கிறேன்.

மேகம் : யோசனை என்ன ? நீ இவ்வளவு நாள் இந்தப் பக்கம் உத்தியோகம் செய்கிறாயே ! உனக்குச் சிநேகிதர்கள் இல்லையா ?

சாரங்கன் : மேகமாலா, உனக்கு எங்களுடைய குண விசேஷங்கள் எப்படித் தெரியும் ? டெல்லியில் எனக்குச் சிநேகிதர்கள் இருக்கிறார்கள். ரங்கநாயகிக்கும் இருக்கிறார்கள். ஆனால் என்னுடைய சிநேகிதர்களின் மனைவிகளுக்கும் ரங்கநாயகிக்கும் பொருத்தம் இல்லை. அவ்விதமே, ரங்கநாயகியின் சிநேகிதிகளின் கணவர்களுக்கும் அடியேனுக்கும் பொருத்தம் குறைச்சல்.

மேகம் : ஏன் இப்படி இருக்கிறார்கள் ?

சாரங்கன் : ஏன் என்று கேட்காதே. அது இயற்கையின் ரீதி. உதாரணமாக, கிருஷ்ணனும் நானும் ஆப்த நண்பர்கள். 'My dear brother' (என் அன்புள்ள சகோதரா) என்றுதான் கடிதாசு எழுதிக் கொள்வோம். ஆனால் கிருஷ்ணனுடைய அகமுடையாளும் ரங்கநாயகியும் ஒருவரை ஒருவர் பார்க்கக்கூட மாட்டார்கள்.

மேகம் : காரணம் ?

சாரங்கன் : காரணம் என்ன ? குழந்தைகள் சண்டை. அப்புறம், ரங்கநாயகியும் ருக்மிணியும் பேசுவது இல்லை. ஏன் தெரியுமா ? செல்லம் என்ற பெயரை எப்படி ஆங்கிலத்தில் எழுத்துக் கூட்டுவது என்று விவாதம் ஏற்பட்டது. ஸெல்லமென்று சொல்வதா ? செல்லமென்றா ? முடிவு என்னவென்றால் அவர்களுக்குள் இப்போது பேச்சு வார்த்தை இல்லை.

மேகம் : இவ்வளவு குறுகிய நோக்கமுள்ளவர்களா உங்கள் ஸ்திரீகள் ? அவர்களுடைய அற்பத்தனத்தை ஒழிக்க அவர்களைச் சற்று மேகமண்டலத்திற்கு அழைத்துக்கொண்டு போகலாம் என்று தோன்றுகிறது. சரி, எங்கேயோ ஆரம்பித்து எங்கேயோ வந்து விட்டோமே ! நான் டெல்லியில் எங்கே தங்குவது ? சொல்லு.

சாரங்கன் : நீ கனகவல்லி மாமியகத்தில் தங்கு.

மேகம் : மாமி நல்லவளா ?

சாரங்கன் : பத்தரை மாற்றுத் தங்கம். கழுத்து, மூக்கு, காது, இடுப்பு, கை எல்லாம் கனகமயமா யிருக்கும். விருந்தோம்பல் என்றால் மாமிக்கு ரொம்ப இஷ்டம். உன்னைப்போல் சிறு பெண்களைக் கண்டால் உடனே 'லேடீஸ் க்ளப்'பில் சேர்த்த பிறகு

தான் மறுகாரியம் பார்ப்பாள். ஆனால் மாமிக்கு ஒன்று மாத்திரம் விஷம்; ஞாபகம் இருக்கட்டும்.

மேகம்: என்ன அது?

சாரங்கன்: சிவப்புத் தோடு. சிவப்புத் தோடு போட்டுக் கொண்டு போனாயோ, உன்னுடைய அந்தஸ்து மேகமண்டலத்தி லிருந்து பாதாள லோகத்திற்கு இறங்கிவிடும். ஜாக்கிரதை!

மேகம்: சரி, கமலமாய் இழைத்துக்கொண்டு மாமியிடம் போகிறேன். சரி, இன்னும் எந்த எந்த மாமிகளை நான் டெல்லியில் பார்க்க வேண்டும்? அவர்களிடம் எப்படிப் போக வேண்டும்?

சாரங்கன்: அதற்கு நீ ஒன்றும் சிரமப்பட வேண்டாம். கனகவல்லி மாமியே உன்னை எல்லாருக்கும் அறிமுகப்படுத்தி விடுவாள். ஆனால் நீ கொஞ்சம் உஷாராக இருக்க வேணும்.

மேகம்: ஏன்? உங்கள் ஸ்திரீகளோடு பழகுவது அவ்வளவு கஷ்டமா?

சாரங்கன்: பொதுவாகவே ஸ்திரீகளோடு பழகுவது கஷ்டந் தானே? நீயோ இப்போதைக்கு ஸ்திரீ. ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று பேசி வைத்தாயானால்?

மேகம்: நன்றாய்ச் சொன்னாய்! யக்ஷனிடமிருந்து தூதுபோன எனக்கா சாமர்த்தியம் போதாது என்கிறாய்?

சாரங்கன்: உன் சாமர்த்தியத்தை ஒரு விநாடியில் விழுங்கி விடுவார்கள் எங்கள் ஸ்திரீகள். நான் சொல்வதைக் கேள். தங்கம் மாமியோடு பேச ஆரம்பித்தவுடன் உன் அகத்துக்காரருக்கு 500 ரூபா சம்பளம் என்று எவ்விதமாவது தெரியப்படுத்து.

மேகம்: எனக்கு அகத்துக்காரர் வாய்த்த பிறகல்லவா அவருடைய சம்பளத்தைப்பற்றிப் பேசலாம்?

சாரங்கன்: அதெல்லாம் தங்க மாமிக்கு அக்கறை இல்லை. உன் அகத்துக்காரர் பெரிய சம்பளக்காரராய் இருந்தால், மாமி உனக்கு ரொம்ப அநுகூலமாய் இருப்பாள். வழிக்கு வறுவல் வறுத்து, புளியஞ்சாதமும் பிசைந்து கொடுப்பாள்.

மேகம்: போதும், போதும். உனக்கு ஏதாவது உதவி பண்ணலாம் என்றால் என்னைப் பொய் சொல்லச் சொல்கிறாயே!

சாரங்கன்: இதெல்லாம் பொய் அல்ல, மேகமாலா. ஸௌஜன்ய பாவம், அது. எங்கள் எல்லாரையும்போல் பிறந்து வளர்ந் திருந்தாயானால் உனக்குத் தெரிந்திருக்கும். ஏதோ திடுதிப்பென்று மேகத்திலேயிருந்து குதிச்சவளல்லவா? அதனால் தயங்குகிறாய். நீ எப்படித்தான் மரகத மாமியையும் வெங்க லக்ஷ்மியையும் பார்த்து நல்ல பேர் எடுத்துக்கொண்டு வரப் போகிறாயோ!

மேகம்: ஏன்? அவ்வளவு கஷ்டமானவர்களா?

சாரங்கன்: தெரியாதவர்களுக்குக் கஷ்டம். தெரிந்தவர்களுக்குச் சுலபம்.

மேகம்: என்ன தெரிந்துகொள்ள வேண்டும்?

சாரங்கன்: இரண்டு சின்ன உபாயங்கள். மரகதத்திற்குத் 'தன் மயம் ஜகத்.' ஞாபகம் வைத்துக்கொள். மரகதத்தின் குழந்தைகள் மணிகள். மரகதத்தின் ஆபரணங்கள் ஈடும் எடுப்பும் இல்லாதவை. மரகதத்தின் புடைவை அலாதி நெசவு. மரகதத்தின் பேச்சுக்கள் உதிர்ந்த முத்துக்கள். மரகதத்தின் பிறந்தகம் அளகாபுரி. இந்தத் தத்துவத்தை யொட்டி மாமியோடு பேசினுயாஞல் உனக்கு நல்ல பெயர் கிடைக்கும். இல்லாவிட்டால் இரண்டே வார்த்தைகளில் உன்னை மூட்டைப் பூச்சியைப்போல் நசுக்கிவிடுவாள்.

மேகம்: வெங்க லக்ஷ்மி?

சாரங்கன்: வெங்க லக்ஷ்மிக்குக் கேள்வி என்றால் ரொம்பப் பிரியம். அதற்கு இடம் கொடுக்காதே. நீ முந்திக்கொள். அவளுக்கு இடம் கொடுக்க ஆரம்பித்தாயோ மோசமாய்ப் போய் விடும். கேள்விகளைத் தொடர்பாகக் கேட்டு அடுக்கிக்கொண்டே போவாள். 'உனக்கு எத்தனை குழந்தைகள்? கடைசிக் குழந்தைக்கு எத்தனை வயசு? ஏன் அதற்கப்புறம் ஒன்றும் பிறக்கவில்லை? அதற்காக என்ன உபாயத்தை அநுசரிக்கிறாய்?' என்றெல்லாம் சரமாரியாய்க் கேட்டுப் பொழிவாள். உன்னைப்போல் முன் பின் பெண்ணாய் இராதவளுக்குச் சங்கடமாக நேரிடும்.

மேகம்: சரி, நீ என்ன காலை வரையில் என்னோடு பேசிக்கொண்டிருக்கலாமென்று பார்க்கிறாயா? இன்னும் டெல்லியை விட்டே போகவில்லையே! அதற்கப்புறம் உன் மனைவியின் ஊருக்கு எப்படிப் போவது?

சாரங்கன்: டெல்லியைத் தாண்டிவிட்டால் பிறகு உனக்கு அதிகச் சிரமம் இராது. மேகமண்டலம் போய், 'கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்' மார்க்கத்தை யொட்டிச் செல். வழியில் வடமதுரையைக் காண்பாய். வஸுதேவன் அர்த்த ராத்திரியில் கடந்த யமுனை நதியைப் பார்ப்பாய். பிருந்தாவனம் போ. கோப ஸ்திரீகள் இருக்க மாட்டார்கள். ஆனால் நம்மூர் மாதிரிக் கோபுரம் வைத்த கோவில் இருக்கிறது. வேளைக்குச் சென்றால் தேசாந்திரி விநியோகம் கிடைக்கும். பிறகு ஆக்ராவுக்குச் சென்று தாஜ்மஹாலை நிலாவில் பார். ஒரு சின்னச் சலவைக்கல் தாஜ்மஹல் பிரதிமையை ரங்கநாயகிக்கு வாங்கிக்கொண்டு போ. ஹோஷங்காபாத்தில் நர்மதையைப் பார். பஞ்ச தந்திரக் கதைகள் நிகழ்ந்த இடம். லகுபதனன் என்ற காக்கை உன்னை வரவேற்கும். பிறகு நாகபுரிக்குப் போ. ஐந்து டஜன் 'ஸந்த்ரா' (oranges) வாங்கி வைத்துக்கொள். அங்கும் நிற்காமல் பெஜவாடாவுக்குப் போ. கிருஷ்ணா தீரம்: ஆந்திர தேசம்: 'அரவம்

மாட்டோடாதே.' அங்கிருந்து சென்னபட்டணம் போ: என்னுடைய அத்தையகத்தில் தங்கு.

மேகம்: பட்டணத்தில் பார்க்க வேண்டியதென்ன?

சாரங்கன்: ரொம்ப உண்டு. ஆனால் இப்போது உனக்கு அவகாசம் இல்லை. திரும்பி வரும்போது பார்க்கலாம். மறுநாள் தென்திசை நோக்கிச் சோழ நாட்டிற்குப் போ. கோவில் நிறைந்த கும்பகோணம் கிட்டியவுடன் தெற்கே போ. வலங்கைமான் வரும். மகாகனம் சாஸ்திரியாருடைய ஊர்! இன்னும் தெற்கே போ. நீடாமங்கலத்தில் நிற்காதே! மன்னார்குடியை அணுகியவுடன் பிரயாணம் முடிந்தது என்று மூச்சு விடு.

மேகம்: ஏன், அதுதான் உன் மனைவியின் ஊரோ?

சாரங்கன்: கேட்பானேன்? மன்னார்குடியின் எல்லையை நெருங்கியவுடனே உனக்கு அது புலப்படும். நல்ல புஷ்பங்களின் மணம் உன்னைக் கவரும். கோவில் மணிகள் உன்னை வரவேற்கும். பெரிய தடாகங்கள் உன் அழகைப் பளிங்கு போல் உனக்குக் காட்டும். ஆனால் ராத்திரி வேளை மட்டும் அங்கே போகாதே!

மேகம்: ஏன்? உன் மனைவியின் தூக்கத்தை நான் கலைத்து விடுவேனோ?

சாரங்கன்: அந்தப் பயம் எனக்கு இல்லை. ரங்கநாயகியும் என்னைப் போலத்தான் தூக்கம் வராமல் வாடியிருப்பாள். இருந்தாலும் உன்பொருட்டுச் சொன்னேன்; மன்னார்குடி கொசுக்கள் உன்னை இருக்கவிட மாட்டா.

மேகம்: சரி, நாழிகையாகிறது. உன் மனைவியின் விலாசம் என்ன?

சாரங்கன்: ரங்கநாயகி என்பது அவளுடைய பெயர். அவளை எல்லாரும் 'செல்லம்மா' என்று அழைப்பார்கள். நான் மட்டும் 'பட்டுச் செல்லு' என்று கூப்பிடுவேன். நீயும் அப்படியே கூப்பிடு. என்னிடமிருந்து வருகிறாய் என்று அவள் உடனே தெரிந்து கொள்வாள்.

மேகம்: சரி, கதவைச் சாத்திக்கொள். நான் போய் வருகிறேன்.

சாரங்கன்: இதற்குள்ளேயா? நான் இன்னும் சேதி ஒன்றும் சொல்லவில்லையே!

மேகம்: நீ பேச ஆரம்பித்தால் காலை வரைக்கும் சேதி சொல்லிக்கொண்டிருப்பாய். என்ன சொல்ல வேண்டுமென்பது எனக்குத் தெரியும். போய் வருகிறேன்.

மறைகிறாள்.)

[சாரங்கன் மேகதூதத்திலிருந்து ஒரு சுலோகத்தைச் சொல்லிக்கொண்டே தூங்கப் போகிறான்.]

மன்னார்குடியில் ரங்கநாயகியின் வீடு. இரவு. ரங்கநாயகியும் அவளுடைய சகோதரி ஐயமும் உட்கார்ந்திருக்கின்றனர். ஐயம் ஒரு புஸ்தகத்தை வாசித்துக் கொண்டிருக்கிருள். ரங்கநாயகி கம்பளித் தையல் நூலை வைத்துக் கொண்டு பாதிக்கு மேல் போடப்பட்ட சட்டையைப் பார்த்துக் கொண்டே யோசனையில் ஆழ்ந்திருக்கிருள்.

ரங்கநாயகி: *நாளைக்குத் தந்தியாவது அனுப்பட்டமா?*

ஐயம்: *(கவனியாதவளாய்) ம்......*

ரங்க: *உன்னோடு போய்ப் பேச வந்தேனே!*

ஐயம்: *என்னடீ! 'உம்' என்று கேட்கிறதற்குள் உனக்குக் கோபம் வந்துடறது?*

ரங்க: *நாளைக்குத் தந்தி அனுப்பட்டுமா என்று கேட்டேன்.*

ஐயம்: *யாருக்கு?*

ரங்க: *எல்லாம் உனக்கு விஸ்தரிக்கணுமா! அவருக்குத்தான்!*

ஐயம்: *இப்போது என்ன அவசரம்? இன்னும் இரண்டு மூன்று நாள் பாரேன்.*

ரங்க: *இப்படி அவர் இருந்ததே இல்லையே! நித்தியம் எழுதுவாரே. உடம்பு ஏதாவது அசௌக்கியமோ? அல்லது நான்தான் வராமல் ஸால்ஜாப்பு சொல்லிக்கொண்டே இருக்கிறேன் என்று கோபமோ என்னவோ?*

ஐயம்: *அதைப் பற்றியெல்லாம் இப்போது யோசனை செய்யாதே. மணி பத்து ஆச்சு; தூங்கப் போகலாம், வா.*

ரங்க: *நீ போ. நான் சட்டையை இன்னும் கொஞ்சம் போட்டுவிட்டு வருகிறேன்.*

(ஐயம் போகிருள்.)

[ரங்கநாயகி மெல்லிய குரலில் 'ஆசை முகம்' என்னும் பாட்டைப் பாடிக்கொண்டே நூல் போடுகிருள். அப்போது மேகமாலா உள்ளே வருகிருள்.]

மேகமாலா: *சரி, உங்களுக்கும் தூக்கம் இல்லையா?*

ரங்க: *யார்?*

மேகம்: *நான் மேகமாலா! உங்கள் அகத்துக்காரரிடமிருந்து வருகிறேன்.*

ரங்க: இதென்ன விசித்திரமாயிருக்கு! உன் பெயர் என்ன வென்று சொன்னே?

மேக: மேகமாலா.

ரங்க: அப்படி ஒருவரும் ஸிம்லாவில் இருப்பதாக எனக்குத் தெரியவில்லையே! நீ என்ன, புதிசாக ஸிம்லாவுக்கு வந்தாயா? உங்காத்துக்காரர் யாரு? எந்த ஆபீஸ்?

மேக: எனக்கு ஆத்துக்காரர் இல்லே, மாமி.

ரங்க: பின்னே உனக்கு ஸிம்லாவில் என்ன வேலே? பள்ளிக் கூடத்து வாத்தியாரா?

மேக: அதெல்லாம் உங்களுக்கு எதற்குத் தெரிய வேண்டும்? நான் உங்கள் அகத்துக்காரரிடமிருந்து செய்தி கொண்டு வந்து இருக்கேன்.

ரங்க: கேட்ட கேள்விக்குச் சரியான பதிலேக் காணும்; எங்காத்துக்காரரிடம் உனக்கு என்ன வேலே? அதுவும் நான் இல்லாத சமயத்தில்?

மேக: ஏன் மாமி, சந்தேகப் படுகிறீர்கள்? நான் உண்மை யில் ஸ்திரீ ஜாதியல்ல. நான் மேகம்!

ரங்க: என்னது?

மேக: நான் ஒரு மேகம். என்னைக் கண்டவுடன் மயிலினங்கள் தோகையை விரித்து ஆடுகின்றன. சாதக பக்ஷி மனமுவந்து மெய் யன்புடன் என்னை எதிர்கொண்டு அழைக்கும். 'ஜாக்கோ'வும் 'தாரா தேவி'யும் எனக்குத் தாமதிக்க இடம் கொடுப்பார்கள். நீங்களோ என்மேல் நம்பிக்கை வைக்காமல் என் நடத்தையிலும் சந்தேகம் கொள்ளுகிறீர்கள். சரி, நான் இப்போதே திரும்பிப் போகிறேன்.

ரங்க: கோவிச்சுக்காதே, மேகமாலா. காலம் கெட்டுக் கிடக்கிற தோன்னோ? நான் இங்கு வந்து கிட்டத்தட்ட ஒரு வருஷமாகிறது. புரு ஷர்களை நம்ப முடிகிறதா? எல்லாவற்றையும் யோசித்தால் சந்தேகமா யிருந்தது. சரி, என்னுடைய அகத்துக்காரர் என்று உனக்கு அவரை எப் படித் தெரிந்தது? என்னை நான்தான் என்று எப்படித் தெரிஞ்சுண்டே?

மேக: நான் அவரிடமிருந்துதான் வருகிறேன் என்பதில் உங்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டால், என்னால் உடனே ருஜுப் படுத்த முடியும்.

ரங்க: எப்படி?

மேக: 'பட்டுச் செல்லு' என்று உங்களை அவர் அழைக்கச் சொன்னார்.

ரங்க: மானம் போறதுடியம்மா நேக்கு! அகமுடையான் பெண்டாட்டி ரகசியங்கள் எத்தனையோ இருக்கும். அதெல்லாமா உன்னிடம் சொல்வது? சரி, பின்னும் என்ன சொன்னார்?

மேக: அவர் உங்கள்மேல் கோபம் கொண்டிருக்கிறார். உங்களுக்கு இனிமேல் கடிதம் எழுதமாட்டாராம்.

ரங்க: நான் என்ன செய்வது? நீயே சொல்லு, மேகமாலா. பெண்டுகளுடைய கஷ்டம் புருஷர்களுக்குத் தெரிகிறதோ? ஆபீஸுக்குப் போய்விட்டு வந்தால் எல்லாம் ஆய்விடுகிறதா? அக்கா தங்கையோடு கூடப் பிறந்தவான்று, நினைச்சபோது புறப்பட்டு வரமுடியுமோ?

மேக: அக்கா தங்கை என்றவுடன் அவர் சொன்னது ஞாபகம் வருகிறது.

ரங்க: என்ன சொன்னார்?

மேக: உங்களுக்குப் பிறந்தகத்து வாஞ்சை அபரிமிதமாய் இருக்கிறதென்றும் அதைப் பற்றிப் பேசும்போது கொஞ்சம் கற்பனா சக்தியையும் சேர்த்துவிடுகிறீர்கள் என்றும் சொன்னார்.

ரங்க: நன்றாய்ச் சொன்னார்! நானென்றால் அவருக்குக் கொஞ்சம் இளப்பந்தான். என்ன அப்படிப் பிரமாதமாக எங்கள் பிறந்தகத்தைப் பற்றிப் புகழ்ந்துகொண்டேனாம்? அப்படி ஏதாவது இருந்தால் என்னிடம் நேரே சொல்லுகிறதுதானே?

மேக: நீங்கள் ஊருக்கு வந்த பிறகுதான் உங்கள் குணாதிசயங்களை நன்றாய் ஆராய்ச்சி செய்ய முடிந்ததாம். மேலும் அவரிடம் நீங்கள் சரியாகத்தான் இருக்கிறீர்களாம். இதர ஸ்திரீகளோடு பழகும் போதுதான் நீங்கள் கொஞ்சம் உண்மைக்கு விலக்காகப் பேசுகிறீர்களாம்.

ரங்க: நான் என்ன அப்படிப் பொய் சொல்லிவிட்டேனாம்?

மேக: உங்களுக்கு அவர் ஒரு புடைவைகூட இன்னும் வாங்கினது இல்லை; எல்லாம் பிறந்தகத்துச் சீர் என்றீர்களாம். டிப்டி தாசில்தார் வேலை பார்க்கும் உங்கள் தம்பியை டிப்டி கலெக்டர் என்றீர்களாம். பிறந்தகத்தில் குபேரன் கொல்லை வழியாகப் போனான் என்றீர்களாம். பிறந்தகத்து உப்புத் தித்திக்கும் என்றீர்களாம். பிறந்தகத்தில் யானை பானையில் தூங்கிற்று என்றீர்களாம். இன்னும்....

ரங்க: இன்னும் என்ன சொன்னேனாம்? எல்லாவற்றையும் சொல்லிவிடேன்.

மேக: பக்கத்தகத்தில் இருக்கும் உதவாக்கரை 'பாட்மிண்டன்' விளையாடும் இடத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு, பிறந்தகத்தில் உசத்தியான 'டென்னிஸ் கோர்ட்' இருக்கிறது என்றீர்களாம்.

ரங்க: சரி, இதெல்லாம் யார் யாரிடம் சொன்னேன், தெரியுமா?

மேக: தெரியாது.

ரங்க: தெரியாது என்றால் வாயை மூடிக்கொண்டிருக்க வேணும். அரைகுறையாய்க் கேட்டுக்கொண்டு என் மேல் குற்றம்

சொல்லப்படாது. யார் யாரிடம் இவைகளைச் சொன்னேனே அவர்களுக்கு அவை பொருந்தும்.

மேக: யார் யாரிடம் சொன்னீர்கள்? எனக்குந்தான் தெரியட்டுமே, மாமி.

ரங்க: பேஷாச் சொல்றேண்டியம்மா. மஞ்சுளா மாமி தன்னிடம் இருக்கும் ரங்கூன் கமலங்களை அசல் வைரம் என்று சொன்னாள். பார்வதி மாமி தன்னிடந்தான் டி. கே. பட்டம்மாள் பாட்டுச் சொல்லிக்கொண்டார் என்றாள். அவர்களுக்கெல்லாம் தகுந்தாற்போல்தானே நானும் பேச வேணும்? புருஷர்களுக்கு என்ன, இரண்டு வார்த்தைக்குமேல் போனால் இரைச்சல், சண்டை. எங்களைப் போல் பொறுமை உண்டா? நிதானம் உண்டா? எங்கள் நாக்கில் ஸரஸ்வதி இருக்கிறாள். ஆகையால் பேச்சில் நயமும் சிலாக்கியமும் இருக்கின்றன. இதையெல்லாம் பொய் என்று பழி கூறலாமோ? சரி. இதற்கெல்லாம் குறை கூறுபவர் இன்னும் என்னதான் சொல்ல மாட்டார்? நான் அவரிடம் வரவில்லை என்று சொல்லு, போ.

மேக: கோபிச்சுக்காதேயுங்கோ, மாமி. இவை ஒன்றும் அவருக்குத் தெரியாது.

ரங்க: அட ராமா, அவர் சொல்லி அனுப்பினார் என்றாயே?

மேக: இல்லை. இவைகளை நானாகத்தான் சொன்னேன். ஸிம்லாவிலிருந்து வரும் பொழுது டெல்லியில் தங்கி ஸ்திரீகளின் ஸ்வபாவத்தைப் பற்றிக் கொஞ்சம் ஆராய்ச்சி செய்தேன். அதைத் தான் உங்களிடம் சொன்னேன். சாரங்கன் ஒன்றையும் அறியார், பாவம்!

ரங்க: போதும், மேகமாலா! நீ மேகமாக இருந்தாலும் ஸ்திரீ ரூபத்தில் வந்தயோன்னோ, அதுதான் பொய்சொல்ல ஆரம்பித்து விட்டாய்....கிடக்கட்டும். நீ வந்தது எவ்வளவோ ஆறுதல் எனக்கு. இன்னும் பத்துப் பதினைந்து நாளில் வந்துவிடுகிறேன் என்று சொல்லு.

மேக: இன்னும் ஏதாவது சொல்ல வேணுமா?

ரங்க: 'எப்படி இருக்கிறாள்?' என்று கேட்டால் சொல்லு; பத்து நாளைக்கு முன் தலைவலி வந்திருந்தது. தவியாத் தவிச்சுப் போய்விட்டேன். பிழைச்சது புனர்ஜன்மம். நாலைந்து நாட்களுக்கு முன் காலில் முள் தைச்சுவிட்டது. எடுக்க முடியவில்லை. குத்தலும் வலியுமா யிருந்தது. புரையேறிடுமோ என்று பயந்தேன். பிழைச்சது புனர் ஜன்மம். நேத்திக்குக் குளிக்கச்சே குளத்தில் வழுக்கி விழுந்தேன். பிழைச்சது புனர் ஜன்மம்.

மேக: மாமி, உங்களுக்கு எத்தனை ஜன்மம்?

[ திரை ]

# மாயப் பிரபஞ்சம்

## பாத்திரங்கள்

ராஜாராமையர்
ருக்மிணி
விசுவநாதையர்
டைரக்டர் வாஞ்சி
ஸரஸ்வதி
கௌதம மஹரிஷி
கிருஷ்ணன்
ஆண்டியப்பன்

# முதற் காட்சி

ராஜாராமையருக்கு வயசு சுமார் ஐம்பது. கர்நாடகப் போக்குள்ளவர். தாலுக்கா ஆபீஸ் குமாஸ்தா. சாய்வு நாற்காலியில் உட்கார்ந்துகொண் டிருக்கிருர். அவர் எதிரில் ஒரு மேஜையின்மேல் அன்றைத் தினத்துப் பத்திரிகை வைத்திருக்கிறது.

இடம் : ராஜாராமையர் வீடும், வாஞ்சி 'ஸ்டுடியோ'வும்

ராஜாராமையர் : அடியே, பேபர் வந்திருக்கு. மூக்குக் கண்ணுடி கொண்டுவா.

[அவருடைய மனைவி ருக்மிணி மூக்குக் கண்ணுடியைக் கொண்டுவந்து கொடுக்கிருள்.]

ருக்மிணி: இன்னிக்கு என்ன பேபரில் விசேஷம்?

ரா: இன்னிக்குப் பையனுடைய பரீட்சை 'ரிஸல்டு' வரும் என்று சொன்னு. அதைத்தான் பார்க்கிறேன்.

ருக்: ஆனுல் சட்டென்று பாருங்கோ......

ரா : (பத்திரிகையைத் திருப்பிக்கொண்டே) இதோ இருக்கு. நம்பர் எல்லாம் போட்டிருக்கானே! பையன் நம்பர் என்ன உனக்குத் தெரியுமா?

ருக்: எனக்கு எப்படித் தெரியும்?

ரா: உனக்குத்தான் ஒண்ணும் தெரியாதே! அதோ என் 'டயரி' இருக்கு. எடுத்துண்டு வா. அதிலே குறிப்பிட்டு வெச்சிருக்கேன். (ருக்மிணி டயரியைக் கொண்டுவந்து கொடுக்கிருள்.)

இந்த வருஷம் நல்ல 'ரிஸல்டு' போலிருக்கு. என்னடீ இது! (பத்திரிகையை உற்றுப் பார்த்து) காணும்போல் இருக்கே, இவனுடைய நம்பருக்கு முன் நம்பரும், பின் நம்பருந்தான் இருக்கு! நீ பாரு. ஒரு வேளை, என் கண்ணுக்குத் தெரியவில்லேயோ என்னவோ!

ருக்: (வாங்கிப் பார்த்து) காணுமேன்னு! ஒரு வேளை, போடறத்துக்கு மறந்துட்டாளோ என்னவோ!

ரா: மறந்து என்னத்துக்குப் போகணும்? நம்ம பையன்தான் 'கோட்' அடிச்சுட்டான்.

ருக்: நறுக்கென்று அப்படிச் சொல்லாதேங்கோ! இன்னொரு தரம் பாருங்கோ,

ரா: காணுமேடீ....இவன் வாசிச்ச வாசிப்புக்குப் பின்னே என்ன கிடைக்கும்? நாள் தப்பினாலும் தப்பித்து, இவன் 'டாக்கி'க்குப் போவது தப்பினதோ? இரண்டாம் வருஷத்துக் கழுதையாச்சே, உருப்படணுமே என்கிற எண்ணம் இருந்தால்தானே?

ருக்: பாவம், குழந்தை! அவன் என்ன பண்ணுவன்? இந்தப் பேபர்க்காரக் கட்டாலே போவான், இத்தனை நம்பர் போட்டிருக்கானே; நம்ப கிட்டுவின் நம்பரை மாத்திரம் ஏன் விடணும்?

ரா: நீ பெரிய முட்டாளாயிருக்கயே! 'Fail' ஆனவனைப் பேபர்க்காரன் என்ன பண்ணுவன்? 'எலிமெண்டரி மாதமாடிக்ஸ்' (Elementary Mathematics) ஐக் கவனிச்சுக்கோடான்னு எத்தனையோ தரம் அடிச்சுண்டேன்; கேட்டாத்தானே? அதிலேதான் சுழிச்சிருப்பான்.

ருக்: 'எலிமெண்டரி மாதமாடிக்ஸ்' என்றால் என்னன்னு?

ரா: அதாண்டீ, கணக்கு—ரொம்ப ஸாதாரணமான கணக்குன்னு பேர். ஆனால், இந்த க்ஷாமத்தினால்தான் நானும் 'மெட்றிகுலேஷனி'ல் கோட்டடிச்சேன். அதிலே மட்டும் பாஸ் பண்ணியிருந்தால் நானும் பி. எல். பாஸ் பண்ணிப் பெரிய வக்கிலாகியிருப்பேன். அப்போ கணக்கில் சுழிச்சதுதான் தாலுக்கா ஆபீஸ் குமாஸ்தா உத்தியோகத்துக்குக் கொண்டுவந்து விட்டுடுத்து.

ருக்: எனக்கும் கணக்கிலேதானு தட்டு முட்டறது; பாருங்கோ நேத்திக்கு, முப்பத்தேழேகால் சேர் பாலுக்கு, ரூபாய்க்கு ஆறரைச் சேர் வீதம், எவ்வளவு ஆச்சு என்று கணக்குப் போட்டேன். கடைசியில் பால்காரன் சொன்ன கணக்குப் பிரகாரந்தான் கொடுத்தேன்.

ரா: அவன் கணக்கு மாத்திரம் 'ரைட்' என்று எப்படித் தெரியும்? ஜாஸ்தியாகக் கொடுத்துத் தொலைச்சுட்டயோ, என்னவோ?

ருக்: இல்லேன்னு. என் கணக்கைக் காட்டிலும் அவன் கணக்கில்தான் ரூபாய் குறைஞ்சிருந்தது. அதனால்தான் கொடுத்தேன்.

ரா: சரி, அதெல்லாம் கிடக்கட்டும். இப்போ கிட்டுவை என்ன பண்ணச் சொல்றது? இன்னொரு வருஷம் படிக்கச் சொல்றதா?

ருக்: வெறுமே என்னத்துக்குப் படிக்கறது? ஏதாவது ஒரு வேலை செய்து வையுங்கோ. காலா காலத்தில் கல்யாணமும் பண்ணி விடலாம்.

[கிருஷ்ணன் பத்தொன்பது வயசுப் பையன். ஷோக் ஆசாமி. பாடிக்கொண்டு வருகிறான்.]

ரா: இதோ வரான் பாரு. கொஞ்சமாவது பொறுப்புடையவனாயிருக்கானா? பரீட்சையில் 'ப்ளக்'கானவனுக்குப் பாட்டு என்ன வேண்டியிருக்கு? ஏண்டா கிட்டு, எங்கேடா இத்தனை நாழி

போயிருந்தே? பேபரைப் பார்த்தாயா?

கிருஷ்ணன்: இல்லையே!

ரா: உன் நம்பரைக் காணமேடா!

கிரு: என் நம்பர் என்னிடமே சௌகரியமாயிருக்கு.

ரா: ஹாஸ்யம் என்னடா வேண்டியிருக்கு! உனக்குச் சம்பளத்தைக் கொடுத்து யார் இன்னொரு வருஷம் படிக்க வைக்கிறது?

கிரு: நீங்கள் படிக்க வச்சாலும் நான் பள்ளிக்கூடம் போக மாட்டேன். இந்த 'எலிமெண்டரி மாதமாடிக்ஸ்' இருக்கிற மட்டும் என்னால் பாஸ் பண்ண முடியாது.

ருக்: போனால் போறது போ. அதைப்பத்தி இனிமேல் விசாரப் படாதே. உனக்கு அப்பா ஏதாவது வேலை போட்டுத் தருவர். ஒழுங்காக இரு. மெட்றிகுலேஷன் பாஸ்பண்ணி, பி. எல். மட்டும் வாசிப்பே, வேறு ஒசத்தியான வரன் கிடைக்கும் என்று என் தம்பி பொண்ணை வாண்டாம் என்று சொன்னேன். இப்போ யார் உனக்குப் பெண் கொடுப்பா? போறது, தம்பியிடம் திரும்பிப் போய்ப் பேசி ஆனி மாசத்திலாவது கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணச் சொல்றேன்.

கிரு: அம்மா, நான் சொல்வதைக் கேள். எனக்காக நீயும் அப்பாவும் சிரமப்பட வேண்டாம்.

ருக்: சிரமம், என்ன? காலாகாலத்தில் நாங்கள் வேண்டியதைச் செய்ய வேண்டாமா?

ரா: உனக்கு என்ன பண்ணப் போவதாய் உத்தேசம்?

கிரு: நான் என்ன செய்தாலும், தாலுக்கா ஆபீஸ் குமாஸ்தா வேலையும் வேண்டாம். மாமாவின் பொண்ணும் எனக்கு வேண்டாம்.

ருக்: அப்படின்னா, எங்க மன்னிக்குத் தங்கை பொண்ணு ஒண்ணு இருக்கு. பார்க்கிறதற்குக் கிளிபோல் இருக்கா.

கிரு: அப்படீன்னா, பேசுவதும் கிளிப்பிள்ளை மாதிரித்தானே?

ருக்: இல்லேடா, அஸத்து! அந்தப் பொண் உனக்குக் கிடைக்கக் கொடுத்து வெக்கணுமே!

கிரு: அம்மா, அந்தப் பொண் எனக்கு வேண்டாம்.

ருக்: பின் எந்தப் பொண் வேணும்? சொல்லு.

கிரு: ஒரு பொண்ணும் எனக்கு வேண்டாம். எனக்கு இப்போ பொண்ணாசை கிடையாது; நான் 'டாக்கி'யில் சேரப் போகிறேன்.

ரா:
ருக்: } என்ன?

கிரு: நான் 'டாக்கி'யில் சேர்ந்து நடிக்கப் போகிறேன்.

ருக்: நமக்கு எடுத்ததில்லையடா அது! சொன்னதைக் கேள். வேலையும் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம். வெறுமனேயாவது ஆத்தில் உட்கார்ந்திரு, போரும்.

ரா: 'டாக்கி'யில் போய்ச் சேர்ந்தாயானால் என் முகத்தில் முழிக்காதே. இதெல்லாம் உருப்படறத்துக்கு வழியில்லே. என் கையிலேயிருந்து இனிமேல் ஒரு பைசாக்கூடக் கொடுக்க மாட்டேன்.

கிரு: நான் சொல்வதைக் கொஞ்சம் நிதானமாக வாங்கிக் கொண்டு பதில் சொல்லுங்கோ. 'டாக்கி'யில் சேர்ந்தால் நம்முடைய அந்தஸ்து எப்படிக் குறைந்துவிடும்?

ருக்: ஆமாண்டா. கண்டவனோடு சேர்ந்து கூத்தாடுவதும் முன்பின் தெரியாத எந்தப் பெண்ணையோ 'பிராணநாயகி' என்று கொஞ்சிக் குலாவுவதும் நேர்மையாகுமா?

கிரு: முன்பின் தெரிஞ்சு, நன்னாப் பழகியிருக்கும் மனுஷாளோடு ஒரு வாழைக்காய்க்காகச் சண்டை போட்டுக்கொள்வது நேர்மையாகுமா?

ரா: அதென்னடா அது?

கிரு: அம்மாவைக் கேளுங்கோ.

ருக்: பின்னே பாரேன். டஜன் ஒன்றரை அணா மேனிக்கு வாங்கி விட்டு என்னிடம் 5-அணாவுக்கு வாங்கினேன் என்று புளுகினாளே.

கிரு: அவள் புளுகினாள் என்று உனக்கு எப்படித் தெரியும்?

ருக்: நாலு கேள்வி கேட்டதில் கறிகாய்க்காரன் உண்மையைச் சொல்லிவிட்டான்.

கிரு: இத்தனை நாட்களும் புளுகாமல் எதற்காக இன்னிக்கு உன்னிடம் புளுகினாள் என்று யோசித்தாயோ?

ருக்: ஏன்? கறிகாய்க்காரனுக்கு லாபம் பண்ணலாம் என்று தான். இல்லாவிட்டால் என்னைக் காட்டிலும் கெட்டிக்காரி என்று காட்டுவதற்காகத்தான். நாலு கேள்வியில் அவன் நிஜத்தைச் சொல்லிவிட்டான். 'அந்த அம்மாகிட்டே சொல்லாதேயுங்கோ, உங்களுக்கும் ஒன்றரை அணா மேனிக்கே தாரேன். அவுங்க கேட்டால் மட்டும் 5-அணாவுக்கு வாங்கினேன் என்று சொல்லுங்கோ' என்றான்.

கிரு: அம்மாமியிடம் அவன் என்ன சொன்னான் தெரியுமா?

ருக்: என்ன சொல்லியிருக்கப் போகிறான்? என்னிடம் சொன்ன மாதிரியேதான் அவளிடமும் சொல்லியிருப்பான்.

கிரு: அதுதான் இல்லே, அம்மா. வேறு என்னென்னமோ சொன்னான்.

ருக்: என்னடா சொன்னான்?

கிரு: 'உங்களைப் பார்த்தால் மகாலக்ஷ்மி மாதிரியிருக்கு. நீங்க கேட்ட விலை எனக்குக் கட்டி வராதபோனாலும் கொடுக்கிறேன். ஆனால், அந்த ருக்குமிணி அம்மா இருக்காங்களே, அவுங்க ரொம்பப் பேராசை பிடிச்சவங்க. என்னிக்குப் பார்த்தாலும் அடாவடிப் பேரந்தான். 10-அணா சரக்கை 1-அணாவுக்கு வாங்குவதற்கு மூக்கால்

அழகுருங்கோ: நான் எப்படிப் பொளேக்கிறது? இந்தத் தரமாவது அந்த அம்மாவுக்குப் புத்தி புகட்டலாமென்று இருக்கேன். அவுங்க கேட்டால் நீங்களும் 5-அணு என்று சொல்லுங்க. இன்னம் 4-நாளேக்கு உங்களுக்குக் காய் இனுமாகவே தருகிறேன்' என்ருன்.

ருக்: அவன் இத்தனே சொன்ஞனடா அவளிடம்?

கிரு: ஆமாம், அம்மா. இதில் ஒரு வார்த்தைகூட விடவில்லே.

ரா: ஏண்டா கிட்டு, இதெல்லாம் அவளிடம் சொன்னுன் என்று உனக்கு எப்படித் தெரியும்?

ருக்: ஆமாண்டா, அதைப்பத்தி உன்னைக் கேட்கல்லேயே?

கிரு: நான் கறிகாய்க்காரனிடமிருந்து எல்லாம் தெரிஞ்சுண்டேன்.

ருக்: அவன்தான் அப்பவே தொலேஞ்சு போய்ட்டானேடா!

கிரு: அவன் எங்கேயும் தொலேயலே: நாளேக்கு என்னேடே 'டாக்கி'க்கு வரேன் என்று சொல்லியிருக்கான்.

ருக்:
ரா: } என்ன?

கிரு: ஆமாம், என்னவென்று எண்ணிஞய்? கறிகாய்க்காரன் என்னுடைய சிநேகிதன் முருகேசன் என்று தெரியல்லேயா?

ரா: அடே, உன் காரியமா அது?

ருக்: என்னத்துக்குடா இப்படி நீ எனக்கும் ப்ரோகுஜத்திற்கும் மனஸ்தாபம் உண்டாக்கிவிட்டே?

கிரு: நீதான் யோசித்துப் பாரேன்: நீங்கள் இருவரும் பேச ஆரம்பித்தால் ஓய்ச்சல் கிடையாதே. எனக்கு மத்தியான்னம் காப்பி, சாயங்காலம் அஞ்சரை மணி மட்டும் கிடைக்கிறதில்லே. அதற்காகத்தான் கொஞ்சம் மித்திரபேதம் பண்ணலாம் என்று ஆரம்பிச்சேன். பலிச்சுது......இப்பவாவது நீயும் அப்பாவும் என்னுடைய நடிப்புத் திறமையை அறிந்து 'டாக்கி'யில் சேர எனக்கு அநுமதி கொடுப்பீர்களா?

ரா: என்னென்னவோ பேசி அந்த 'டாக்கி'ப் பேச்சுக்கே வந்துவிட்டையே.

ருக்: வேறு ஏதாவது வேலே ஒண்ணும் உனக்குத் தோணலேயா?

கிரு: திரும்பியும் அதே ரீதியில் பேசுகிருயே அம்மா! நீதான் எங்கள் பள்ளிக்கூடத்தில் நாடகம் போட்டதைப் பார்த்திருக்கயே. எனக்கு இருக்கும் திறமையை வெச்சுண்டு முன்னுக்கு வரப் பார்க்கிறது மேலா, அல்லது அப்பா மாதிரி தாலுக்கா ஆபீஸுக்குப் போய்த் தாசில்தாருக்கு பயந்து இருக்கிறது மேலா?

ரா: உனக்கு எப்போதும் கிறுக்குத்தான். எங்களுடைய வழி உனக்கு ஏற்காது. நீ போகிற வழியே போ. ஆனுல், ஒழுங்கு தவறி

மாத்திரம் நடக்காதே. எந்த வேலையிலும் சாமர்த்தியமா யிருந்தால் முன்னுக்கு வரலாம்.

ருக்: அம்மாவை ஏமாத்தின மாதிரிதான் எல்லாம் இருக்கும் என்று எண்ணுதே. குணம் தெரியாமல் மாத்திரம் நடக்காதே!

கிரு: என்னிடம் அவ்வளவு நம்பிக்கை கூடவா உங்களுக்கு இல்லே? எப்போ அந்த உத்யோகம் எனக்கு ஏற்றதில்லே என்று புலப்படுகிறதோ அப்பவே திரும்பி வந்து விடுகிறேன். (பாடிக் கொண்டே போகிருன்.)

ரா: யார் என்ன பண்ணறது? இதெல்லாம் கால ரீதி. நான் வாசிக்கிற நாளில் எவனுவது டிராமா கீமாவுக்குப் போய்ச் சேர்ந்தால் 'உருப்படா மட்டி' என்று சொல்லிவிடுவா. இப்போ எங்கே பார்த் தாலும் 'டாக்கி' தான். ஆபீஸிலெல்லாம் அதைப்பத்தித்தான் பேச்சு. கிராமத்திலிருக்கும் குட்டிப் படைகளெல்லாம் 'டாக்கி' ப் பாட்டுத்தான் எப்போ பார்த்தாலும் பாடறதுகள்.

ருக்: என்ன இருந்தாலும் ஒரே பிள்ளேயாயிருப்பவன் செவ்வையா யிருக்கலாம். இந்தக் கூத்தெல்லாம் வாண்டாம்!

ரா: ஈச்வரன் அவ்வளவுதான் கொடுத்தான். இப்போ என்ன முழுகிப்போச்சு? தாலுக்கா ஆபீஸில் நான் சம்பாதிப்பதைவிட அதிருஷ்டமிருந்தால் கிட்டு பத்து மடங்கு சம்பாதிப்பான். இந்தத் தாசில்தாரோடு அவதிப்படுவதைவிட நான்கூட ஒரு 'டாக்கி'யில் சேர்ந்துவிட்டால் தேவலே என்று சில சமயம் தோன்றுகிறது. கிட்டு வுக்கு அதில்தான் என்ன அதிருஷ்டம் இருக்கு என்று பார்ப்போமே..... நீ ப்ரோகுஜத்தோடு நாளேக்கு ராஜி பண்ணிக்கோ. இனிமேல் இப்படி ஏமாந்து போகாதே.

[திரை]

## இரண்டாம் காட்சி

ஒரு 'டாக்கி' ஸ்டுடியோ. டைரக்டர் வாஞ்சியும், அவருடைய பெண்ணும் பிரதம நடிகையுமான ஸரஸ்வதியும் நிற்கிறார்கள்.

வாஞ்சி: ஸரஸ்வதி, எல்லாம் சரியாகப் பாடம் பண்ணியிருக்கிறாயா?

ஸரஸ்வதி: ஆகா; ஆனால், அதை என்னால் நன்றாக நடிக்க முடியவில்லை.

வாஞ்சி: ஏன் முடியவில்லை? இதோ பார் ஸரஸ்வதி, தானே பேசிக் கொள்வதுதான் நடிகத் திறமையை விளக்கிக் காட்டும். நான் சிறுவனா யிருந்து நடிக்கும்போதெல்லாம் வாஞ்சியினுடைய தனிப் பேச்சு ஹாம்லெட்டின் பேச்சைக் காட்டிலும் நன்றாய் இருக்கு என்று எல்லாரும் மெச்சுவார்கள். உனக்கும் அதில் தான் புகழ் வரும். நான் சொல்வதைக் கேள்; பாடத்தை நன்றாகப் படிச்சுக்கோ. பிறகு ஒவ்வொரு வார்த்தையையும் ஆணி வெச்சு அடிக்கறாப்போல் சொல்லு. இதோ நான் நடித்துக் காட்டுகிறேன். பார்—: (நாற்காலியில் உட்கார்ந்து நிதானமாய்ச் சோகம் புலப்படச் சொல்லுகிறான்.) 'ஒரு ஸதியின் கடமை இன்ப துன்பங்களை மீறியது. அதில் குரோதத்திற்கும் இடமில்லை, பயத்திற்கும் இடமில்லை. பக்தி என்ற உணர்ச்சிதான் எல்லாவற்றையும்விடச் சிரேஷ்டமானது. பக்திக்கு லட்சியமாகச் செய்யப்பட்ட கணவன் என்ற பொருள் எக்காலத்தும் மாற்றுக் குன்றாதது. தியான ஸ்வரூபமான அந்தப் பொருளுக்கு என்னை அர்ப்பணம் செய்துகொள்கிறேன்.'

இதைச் சொல்லி முடித்தவுடன் ஒரு பாட்டுப் பாடிவிட்டு யாகசாலைக்கு வரும் ஆட்டைப்போல் முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு இருக்கணும். அப்போது தேவேந்திரன் பிரம்மசாரி வேஷத்தில் பிரவேசிப்பான்....ஸரஸ்வதி, எதோ பார்ப்போம், இதை நடித்துக் காட்டு.

ஸர: ஒரு ஸ்திரீயின் கடமை....

வாஞ்சி; ஆரம்பிக்கச்சையே ஒரு தப்பு; 'ஒரு ஸதியின் கடமை.'

ஸர: ஒரு ஸதியின் கடமை இன்ப துன்பங்களை மீறினது. (தயங்கித் தயங்கி) அதற்கு.... அதற்கு இதிலும் இடமில்லை, அதிலும் இடமில்லை. மற்றொன்றுதான் முக்கியமானது: அதுதான்

எல்லாத்தையும் விடச் சிரேஷ்டமானது. ஆனால், சகோதர சகோதரிகளே, அந்த மற்றொன்று இன்னதென்று எனக்குப் புலப்படவில்லை. அதற்குப் பிறகு நான் கேதார கௌளத்தில் ஒரு பாட்டுப்பாடவேண்டும். இதுவே என் விதி. விதி எல்லாவற்றையும் விடக் கொடியது. இல்லை, பெரிது.

வாஞ்சி: போரும், போரும். நான் தேர்ந்தெடுத்துக்கொடுத்த அருமையான இலக்கியத்தை இப்படியா குட்டிச்சுவர் பண்ணுகிறது?

ஸர: எனக்கு இந்தத் தனிப்பேச்சுப் பிடிக்கல்லே. இது இயற்கைக்கு விரோதமாகத் தோன்றுகிறது.

வாஞ்சி: பின் எப்படிக் காட்சியை ஆரம்பிக்கறது?

ஸர: அதைப்பற்றி நானும் கிருஷ்ணனும் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம்.

வாஞ்சி: இதற்குள் கிருஷ்ணனோடு சதியாலோசனை செய்ய ஆரம்பித்து விட்டாயா? நான் டைரக்டரா? கிருஷ்ணன் டைரக்டரா?

ஸர: எங்கள் ஏற்பாட்டை ஒத்திகையில் பாருங்கள். பிறகு உங்களுடைய தீர்மானத்தைக் கூறுங்கள். அதன்படி நடக்கிறோம்.

வாஞ்சி: சரி, பார்க்கிறேன். ஆனால் ஸரஸ்வதி, ஒண்ணு மாத்திரம் ஞாபகம் வைத்துக்கொள். உன்னுடைய முன்னேற்றத்துக்கு நான் பொறுப்பாளி. உன்னைப் பெண் நட்சத்திரங்களில் உயர்ந்த ஸ்தானத்திற்குக் கொண்டுவர வேணுமென்பது என்னுடைய லட்சியம். ஆகையால் நீ உன்னுடன் சேர்ந்து நடிக்கும் சிறுவர்களோடு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

ஸர: என்மேல் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா?

வாஞ்சி: இந்தப் படத்தில்தான் பிரதான நடிகையின் 'பார்ட்டு' உனக்குக் கொடுத்திருக்கேன். அதைச் சரியாக நடித்தாயானால் சீக்கிரம் முன்னுக்கு வரலாம். பாடத்தைக் கவனமாக வாசித்துக்கொள்.

[ஸரஸ்வதி போகிறாள். கிருஷ்ணன் பிரவேசிக்கிறான்.]

வாஞ்சி: கிருஷ்ணா, பாடத்தை நன்றாக வாசித்துவிட்டாயா?

கிரு: ஆஹா!

வாஞ்சி: இதோ பார்க்கிறேன். இந்தக் காட்சியில் சரியாக நடித்தாயானால் வைத்துக் கொள்வேன். இல்லாவிட்டால் உனக்கு இந்தத் தொழில் ஏற்றதல்ல; தெரியுமா?

கிரு: சரி.

வாஞ்சி: சிறுபிள்ளைத்தனமாய் ஒண்ணும் செய்யாதே. 'கைச் சரக்கு ஒண்ணும் சேர்த்துக்காதே. நான் சொல்லிக் கொடுக்கபடியே நடிக்க வேணும்.

கிரு: முடிந்த மட்டும் உங்களுக்குத் திருப்தி ஏற்படும்படி நடிக்கிறேன்.

வாஞ்சி: மற்ருென்று சொல்கிறேன்: அழகுள்ள ஸ்திரீகள் அநேகருடன் நீ நடிக்கவேண்டி வரும். அதற்குத் தகுந்தவனுய் இருக்க வேணுமென்ருல் கல் நெஞ்சனுய் இருக்க வேண்டும். ஆரம் பிக்கற போதே இந்தப் பெண்களின் அழகைக் கண்டு மனம் இளகி மையல் கொண்டாயோ, உனக்குப் பாடமும் வராது; என் படமும் கெட்டுவிடும். இதெல்லாம் வெளி வேஷமே தவிர வேருென்றும் இல்லை என்று எண்ணித் திட மனத்தோடு இருக்க வேண்டும். இந்தக் காட்சியைச் சரியாக ஒத்திகை பண்ணுங்கோ, பார்க்கலாம். நான் ஒரு வார்த்தைகூட நினைப்பூட்ட மாட்டேன்.

(போகிருர்கள்.)

[ஆச்ரமத்தின் வாசலில் அஹல்யை ஒரு மான் தோல் மேல் உட்கார்ந்துகொண்டு பெருமூச்சு விடுகிருள்.]

அஹல்யை: ஸந்தியா வந்தனம் பண்ணிவிட்டு வர இந்தப் பிராமணனுக்கு எத்தனை நாழி? தனியா யிருக்கேனே என்று சுருக்க வரப்படாது? கண்வரையும் பரத்வாஜரையும் கண்டுவிட்டால் ஓயாத பேச்சுத்தான்....அவர்மேல் குறைகூறி என்ன பயன்? வயஸான வருக்கு வாழ்க்கைப்பட்டால் இப்படித்தான்....

[விளக்கேற்றுகிருள்.]

'பொண்ணுக்குத் தகுந்த மாப்பிள்ளை நீங்கள் இல்லை' என்று அப்பா, அப்பவே அவரிடம் சொல்லியிருக்கப்படாதோ? இவர்தான் ஈடு சரியாயில்லை என்று வேறு எங்கேயாவது பொண் தேடப் போயிருக்கப்படாதோ?

[உட்காருவதற்கு ஒரு பலகையைக் கொண்டுவந்து வைக்கிருள்.]

ஜன்மாந்தரத்தில் 'உன் பெண் அஹல்யைதான் எனக்குப் பத்தினியா யிருந்தாள்' என்று ஞானதிருஷ்டியால் அறிந்து கொண்டாராம்! ஆமாம், நல்ல திருஷ்டி மழுங்கினபிறகு ஞான திருஷ்டிதானே மிஞ்சும்! பூர்வ ஜன்மத்தில் இவருக்கு வாழ்க்கைப் பட்டேன் என்ருல், இந்த ஜன்மத்திலுமா இவரைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்? யாரைக் குற்றம் சொல்வது? இது என் விதி! இல்லாவிட்டால் இவருக்குத்தான் வயசு கொஞ்சம் குறைந்திருக்கக் கூடாதா? அல்லது வேறு யௌவன புருஷன் முன்னலேயே வந்து என்னைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு போயிருக்கக் கூடாதா?

இந்திரன்: (கதவுக்கு வெளியிலேயிருந்து) பாட்டீ, பாட்டீ!

அஹ: (கோபமாக) இங்கே பாட்டி ஒருவரும் இல்லை; பக்கத்து ஆச்ரமத்துக்குப் போ.

இந்தி: (பாதுகைகளைக் கழற்றிவிட்டு உள்ளே வந்து) மன்னிக்க வேணும். நான் உங்களைப் பார்க்கவில்லை.

அஹ: நீ யார்? இங்கே எதற்கு வந்தாய்?

இந்தி: பிருகதாரண்யக உபநிஷத்தில் எனக்குச் சில சந்தேகங்கள் இருக்கு. அதைத் தாத்தாவிடம் வந்து தெரிஞ்சுக்கலாம் என்று வந்தேன்.

அஹ: இந்த ஆச்ரமம் இல்லை. இங்கே தாத்தா ஒருவரும் கிடையாது.

இந்தி: ஏன் மாமி, நதிக்கு வடவண்டை நாலாவது ஆச்ரமம் இதுதானே?

அஹ: ஆமாம்!

இந்தி: அப்போ இந்த ஆச்ரமத்துக்குத்தான் தாத்தா வரச் சொன்னார்.

அஹ: எந்தத் தாத்தா? சரியாக விசாரிக்காமல் நீ என்ன தத்துப் பித்தென்று உளருகிறே?

இந்தி: இருட்டில் ஏமாந்து விட்டேனோ என்னவோ? கௌதம மஹரிஷி ஆச்ரமம் இதுதானே, அம்மாமி?

அஹ: ஆமாம். ஆனால், நீ என்னை அம்மாமி என்று அழைக்க வேண்டாம்.

இந்தி: மன்னிக்க வேணும். நீங்கள் மஹரிஷியின் பெண்ணோ?

அஹ: (அழாக் குறையாய்) நான் அவருடைய பத்தினி.

இந்தி: நமஸ்காரம். நான் செய்த அபசாரத்தை மன்னிக்க வேணும்.......தாத்தா வருவதற்கு நாழிகையாகுமோ?

அஹ: உனக்கு ஏன் எவ்வளவு சொன்னாலும் புரியவில்லை? அவரைத் தாத்தா என்று சொல்லாதே!

இந்தி: அவரைப் பார்த்தால்......

அஹ: (கோபமாக) இருக்கும், இருக்கும். உன்னைப்போல் பத்துத் தடிப் பிரம்மசாரிகளுக்கு உபநிஷத்துச் சொல்லித் தந்து தான் அவர் மூளையெல்லாம் கொதிச்சுத் தலை நரைச்சுப் போச்சு; அவருக்கு இன்னம் முப்பத்தஞ்சு வயசுகூட ஆகல்லையே!

இந்தி: அபசாரம்; நான் பேசுவது எல்லாம் அஸந்தர்ப்பமாக முடிகிறது. என் பிழையைப் பொறுத்துக் கொள்ள வேணும், அம்மாமி.

அஹ: உனக்கு வாய்த் துடுக்குடாப்பா. எனக்கு இன்னும் பதினெட்டு வயசுகூட ஆகவில்லை! அதற்குள் நான் அம்மாமியாய்ப் போய்விட்டேனா?

இந்தி: வேளை இது சரியாய் இல்லை. நான் இன்னும் சற்று நேரம் கழித்து வருகிறேன்;

அஹ: (இந்திரனுடைய முகத்தைப் பார்த்த வண்ணம்) இரு. இரு. அக்னி ஹோத்ரம் பண்ண நாழிகையாச்சு. இதோ வந்துவிடுவார். இப்படிக் குத்துவிளக்கண்டை உட்கார்ந்துகொண்டு சந்தை சொல்லிண்டிரு.

[இந்திரன் ஓலைச்சுவடியைப் பிரித்துச் சந்தை சொல்லுகிறான்.]

அஹ: வெளிச்சம் போருமா? இன்னும் கொஞ்சம் கிட்டே வேணுமானால் வந்து உட்கார்.

இந்தி: ஆகா. (திரும்பியும் சந்தை சொல்கிறான்.)

அஹ: (இந்திரன் முகத்தை மறுபடியும் பார்க்கிறாள்.) ஏண்டாப்பா, பிருகதாரண்யக உபநிஷத்தில் எங்களைப்பத்தி ஏதாவது சொல்லியிருக்கா?

இந்தி: திவ்யமாய்!

அஹ: என்ன சொல்லியிருக்கு?

இந்தி: (சுவடியைப் புரட்டிக்கொண்டே) அதைத்தான் தேடிப் பார்க்கிறேன்; காணவில்லை.

அஹ: பரவாயில்லை. அதன் மொத்த அர்த்தத்தைச் சொல்லு, போரும்.

இந்தி: அதற்கென்ன? ஆதாரத்துடன் பேசினால் தேவலை என்று சுவடியைப் புரட்டினேன்.

அஹ: சுவடி கிடக்கட்டும்; அர்த்தத்தைச் சொல்லு.

இந்தி: (பாடுகிறான்.) 'மாற்றறியாத செழும்பசும் பொன்னே.'

அஹ: அர்த்தத்தைக் கேட்டால் ஸங்கீதத்தில் கிளம்பி விட்டாயே!

இந்தி: ஆமாம்; பிருகதாரண்யக உபநிஷத் மாத்திரமா? எல்லா உபநிஷத்துக்களும் உங்களைப்பற்றியே பாடுகின்றன. ஸௌந்தரியம் என்பது காலத்தை மீறியது. ஒரு நாரீமணியின் ரூப ஸௌந்தரியம் பாரமார்த்திகமான பேரொளி. அதற்கு ஆதியும் இல்லை, அந்தமும் இல்லை என்று சொல்லியிருக்கிறது.

அஹ: அது சரிதான். ஆனால், உன்னுடைய அநுபவத்தில் எப்போதாவது இந்த உண்மையை அறிந்திருக்கிறாயா?

இந்தி: நான் பிரம்மசாரி, அம்மணீ.

அஹ: இருந்தால் என்ன? நீ ஸ்திரீகளைப் பார்த்ததே இல்லையா? எப்போதாவது உனக்கு ஸௌந்தரியத்தின் மேன்மை தெரிந்ததுண்டா?

இந்தி: உண்மையைச் சொல்ல வேண்டுமானால் அப்பேர்ப் பட்ட பாக்கியம் எனக்கு ஏற்பட்டதுண்டு.

அஹ: (ஆவலுடன்) எப்போது?

இந்தி: இப்போதுதான்.

அஹ: என்ன?

இந்தி: ஆமாம்; உங்களைக் கண்டதும், உடனே எனக்கு ஸௌந்தரியத்தின் ஒரு மகிமை தெரிந்தது.

அஹ: என்ன மகிமை!

இந்தி: வயசு எண்பது, புருஷ ஜாதியில் மார்க்கண்டேயனுக்கும், பொதுவாக எல்லா ஸ்திரீகளுக்கும், முக்கியமாக உங்களுக்கும் ஸ்தாவரமான ஒரு பொருள் என்பது.

அஹ: கொஞ்சம் புரியும்படி சொல்லேன்.

இந்தி: உங்களுக்குப் பத்து வருஷத்திற்குமுன் என்ன வயசோ அதேதானே இப்போதும்?

அஹ: நீ மிதமிஞ்சிப் பேசுகிருய். எனக்குப் பத்து வருஷத்திற்குமுன் எட்டு வயசு. இப்போ பதினெட்டு.

இந்தி: இல்லை; பத்து வருஷத்திற்குமுன் உங்களுக்குப் பதினெட்டு. இப்போதும் அதுவே!

அஹ: நீ என்னவோ ரொம்பத் தெரிஞ்சவன் மாதிரிப் பேசுகிருயே! உனக்கு எப்படித் தெரியும்? ஞானதிருஷ்டியோ?

இந்தி: இல்லை; உன்னைப் பற்றியவரையில் அடியேனுக்குச் சிருங்காரதிருஷ்டி ஏற்பட்டிருக்கிறது.

அஹ: (அதட்டி) யாரடா நீ? அடாத வார்த்தைகள் கூறுகிருய்?

இந்தி: அஹல்யா, நான் இந்திரன். தேவலோகத்துக்கு அரசன்; உன் அடிமை.

அஹ: ஐயையோ! ஓடிப் போயிடு. அவர் வருகிற சமயமாச்சே! என்னைத் தனியாய் உன்னோடு பார்த்தால் கிழவர் ஏதாவது சந்தேகப்படுவார்.

இந்தி: அஹல்யா, உன்னை நான் கண்டிக்கிறேன். தேவேந்திரன் முன்னிலையிலா நீ, மஹரிஷியான உன் கணவரைக் கிழவர் என்கிருய்?

அஹ: தேவலோகத்துக்கு அதிபன் என்ருல் உன் அதிகாரம் அங்கேதான் செல்லும். என்னிடம் செல்லாது.

இந்தி: கோபிச்சுக்காதே.... என்பால் உனக்கு மனம் இரங்காதா?

அஹ: மனம் இரங்கிப் பயன் என்ன? கண் போனபிறகா ஸூரிய நமஸ்காரம் செய்வது?

இந்தி: ஏன் இப்படி வியாகுலத்துடன் பேசுகிருய்? உன்னை நான் காதலிக்கிறேன் என்று உனக்குத் தெரியாதா?

அஹ: உன் காதலுக்குக் கணக்கு வழக்கு உண்டோ? என்னைத் தொந்தரவு செய்யாதே. நான் பதிவ்ரதா தர்மத்தை

அநுசரித்துக்கொண் டிருக்கிறேன். உனக்குத்தான் தேவ கன்னிகைகள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். வித்யாதர மங்கைகள் எத்தனையோ பேர். போராது என்றால் அப்ஸர ஸ்திரீகளை நர்த்தனம் செய்யச்சொல்லிப் பாரேன்.

இந்தி: அஹல்யா, எனக்குத் தேவ லோகம் தெவிட்டிப் போச்சு. பூலோகந்தான் என் மனசைக் கவருகிறது.

அஹ: மெள்ளப் பேசு. வரப் போகிறார்!

இந்தி: கொஞ்சம் தயை வைக்கமாட்டாயா?

அஹ: என்னை ஏன் இம்சிக்கிறாய்? கல்யாணமான பிறகு உன் மொழிக்கு இணங்குவது முறையாகுமா? பூலோகத்துப் பெண் வேண்டுமானால் யாராவது கன்னிகையாகப் பார்த்துக் கல்யாணம் செய்துகொள்ளேன்!

இந்தி: அஹல்யா, நான் காமப்பித்தம் அடைந்து உன்னிடம் வரவில்லை. புவனசுந்தரியாகிய உன்னைத் தரிசித்துப் போகவே வந்தேன். அதுவே எனக்குப் போதும். நான் போய் வருகிறேன்.

[போக முயல்கிறான்.]

அஹ: இரு, தேவேந்திரா; நான் உன் காதலை ஏற்றுக் கொள்வது தர்மத்துக்கு விரோதமாகாதே?

இந்தி: அது ஒருநாளும் தவறாகாது. கேவலம் மானிடர்களுக்குள்தான் முறை, குடும்ப தர்மம், பாதிவ்ரத்யம் எல்லாம் பாதிக்கும். தேவர்களுக்கும் மானிடர்களுக்கும் ஏற்படும் சம்பந்தம் தெய்விகமானது. அதற்கு மனுஸ்மிருதியின் கொள்கைகள்....தவறிச் சொல்லிவிட்டேன். மனு என்பவர் பிறப்பதற்கே இன்னும் 2000 வருஷம் இருக்கு. பயப்படாதே.

அஹ: தேவேந்திரா, வாழ்க்கையில் சாரமற்றிருக்கும் எனக்கு நீ புத்துயிர் தந்தாய். விண்ணுலகரசே, நான் உன்மேல் மையல் கொண்டேன். என்னை ஏற்றுக்கொள்.... (அப்போது கௌதம மஹரிஷி உபநிஷத் வாக்கியங்களை உரக்க அத்தியயனம் செய்துகொண்டு வருகிறார்.) ஐயையோ! அவர் வந்துவிட்டாரே! ஓடிப் போய்விடு.

இந்தி: எப்படி நான் வெளியேறுவேன்? நான் ஒளிந்து கொள்வதற்கு ஏதாகிலும் இடம் சொல்லு. (இந்திரனை ஒளித்து வைத்து விட்டுக் கௌதமரிடம் போகிறாள். இந்திரனுடைய சுவடி விளக்கண்டை இருக்கிறது.)

அஹ: எத்தனை நாழியாகக் காத்துக்கொண் டிருக்கிறது? என்னைப்பற்றி உங்களுக்குச் சிந்தனையே கிடையாதா?

கௌ: நான் சுருக்கத்தான் வந்தேன். வழியில் பரத்வாஜர் வந்தார். புருஷ ஸூக்தத்தில் ஒரு பிரச்னையைப்பற்றி ஆராய்ச்சி செய்தோம். நாழிகையாய்விட்டது.

அஹ : ஆமாம், நாள் தவறாமல் இப்படி நாழிகையாக்கினீர்களானால், நான் இனிமேல் கதவைத் திறக்க மாட்டேன்.

கௌ : நீ என்ன புதுசாகக் கல்யாணமான பெண் மாதிரி நடக்கிறாயே ! (கீழே இருக்கும் சுவடியைப் பார்த்து) ஏது இந்தச் சுவடி?

அஹ : (கொஞ்சம் திடுக்கிட்டு, பிறகு சமாளித்துக்கொண்டு) அதுவா ? பிருகதாரண்யக உபநிஷத்தை வாசிக்கலாம் என்று எடுத்தேன்.

கௌ : உனக்குச் சுவடி வாசிக்கத் தெரியும் என்று எனக்கு இத்தனை நாள் தெரியாதே !

அஹ : அவ்வளவு சவரணையாக அகமுடையானை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள் ! என்னைப்பற்றிச் சிந்தனை இருந்தால்தானே எனக்கு என்ன தெரியும், என்ன தெரியாது என்பது எல்லாம் உங்களுக்குப் புரியும்.

கௌ : வெறுமனே குறைப்பட்டுக்கொண் டிருக்காதே. ஸ்திரீகளுக்கே எப்போதும் குறை கூறிக்கொண் டிருப்பதுதான் வேலை. நீ ரிஷிபத்தினி என்கிற அந்தஸ்தோடே பேசமாட்டேன் என்கிறாயே. கேவலம் லௌகிகப் பெண்களைப்போல் அல்லவோ பேசுகிறாய் ?

அஹ : அகமுடையான் பெண்டாட்டிக்குள் அந்தஸ்து என்ன வேண்டியிருக்கு ?

கௌ : சரி, நீ என்ன வாசித்துக்கொண் டிருந்தாய், பார்க்கிறேன். (சுவடியை எடுத்துப் பார்த்து) இது நம்ப ஆச்ரமத்துச் சுவடியல்ல போலிருக்கே ?

அஹ : இல்லை. பக்கத்து ஆச்ரமத்திலிருந்து வாங்கிக்கொண்டு வந்தேன்.

கௌ : (சந்தேகத்துடன்) ஓகோ ! (வாசற்பக்கம் இருக்கும் தேவேந்திரனுடைய பாதுகைகளைப் பார்த்து) இந்தப் பாதுகைகளையுமா பக்கத்து ஆச்ரமத்திலிருந்து வாங்கிக்கொண்டு வந்தாய் ?

அஹ : எதற்காகக் கொனஷ்டையாகக் கேள்வி கேட்கிறீர்கள் ? உங்களுக்குத்தான் வேதாத்யயனத்திலும் புருஷஸூக்தத்திலும் ஈடுபட்டுவிட்டால் வேறு ஒரு கவலையும் கிடையாதே ! பாதுகை வாங்கி நாலைந்து வருஷமாச்சே என்ற யோசனையே கிடையாது ; உங்களுக்காகத்தான் அதை வாங்கி வைத்திருக்கிறேன் !

கௌ : ஓகோ ! (அவநம்பிக்கையுடன்) அஹல்யா, இங்கே யார் வந்திருந்தார் ?

அஹ : ஒருவரும் இல்லையே !

கௌ : பொய் சொல்லாதே, யார் வந்திருந்தார் ? சொல்லாமற் போனால் ஞானதிருஷ்டியால் கண்டுபிடித்துவிடுவேன்.

அஹ ; உங்களுக்கெல்லாம் ஞானதிருஷ்டி என்று யார்

கொடுத்தாளோ? அதைச் சரியாய்ப் பிரயோகிக்கத் தெரியாமல் எதைக் கண்டாலும் ஞானதிருஷ்டியால் கண்டுபிடித்து விடுவேன் என்று பூச்சாண்டி காட்டத்தான் தெரியும். இந்த ஞானதிருஷ்டி இல்லாத போனால் நான் வேறு யாருக்காவது வாழ்க்கைப்பட் டிருப்பேனே!

கௌ: உனக்கு எப்போதும் அதிருப்திதான். (ஞான திருஷ்டியால் அறிந்து) இங்கே தேவேந்திரன் வந்திருந்தான் என்று ஏன் என்னிடம் சொல்லவில்லை?

அஹ: (சற்றுத் திகைத்து) ஆமாம், உங்களிடம் சொல்லி என்ன லாபம்? நீங்கள் நான் சொல்வதைக் காதில் போட்டுக் கொண்டால்தானே!

கௌ: (அதட்டி) அஹல்யா, தேவேந்திரன் இங்கே எதற்கு நான் இல்லாத தருணம் பார்த்து வந்தான்?

அஹ: எதற்காக வருவான்? என்னை அவமானப்படுத்த வேண்டுமென்றுதான்.

கௌ; உன்னை அவமானப்படுத்தினனு? என்ன செய்தான்?

அஹ: என்னைப் "பாட்டீ, பாட்டீ" என்று அழைத்து, "தாத்தா வந்துட்டாரா?" என்று கேட்டான். கிட்டே வந்ததும், "கண் சரியாகத் தெரியல்லே, மன்னிக்கணும். கௌதம மஹ ரிஷியின் பத்தினி பாட்டியாக இருக்கவேண்டும் என்று ஊகித்தேன்" என்றான்.

கௌ: அடே, பாவி! - நித்ய ஸுந்தரியாய் விளங்கும் உன் மாசற்ற ரூப ஸௌந்தரியத்தைக் கண்டுமா உன்னைப் பாட்டி என்று அவன் அழைத்தான்? பூர்ணிமா சந்திரன் போலிருக்கும் உன் திவ்ய வதனத்தையும், அண்டாண்ட சராசரங்கள் அனைத்தையும் வசிகரம் செய்யும் உன்னுடைய பங்கஜ லோசனங்களையும் அவன் பார்க்கவில்லையா?

அஹ: இருட்டில் அவனுக்குக் கண் தெரியவில்லையாம்.

கௌ: அஹல்யா, நீ இருக்கும் இடத்தில் இருட்டு ஏது? உன் அழகை அறிந்து கொள்ளாதவன் பிறந்து என்ன பயன்? மின்னல் ஒளியோ, முல்லைக் கொடியோ, இன்பத் தேனே, இன்னிசை யின் மூர்ச்சனையோ, யோக ஸித்தியோ, வரப்பிரசாதமோ என்று மூவுலகும் அதிசயித்துக்கொண் டிருக்கும் உன் பேரழகையா அவன் காணவில்லை? அவன் தேவேந்திரனாய் இருந்து என்ன பிரயோஜனம்? தேவேந்திரா, உனக்கு இரண்டு கண்களிருந்து பயன் இல்லை. இனி மேல் உன் சரீரத்தில் எங்கே பார்த்தாலும் கண்களாகவே இருக்கும். உனக்கு இனிமேல் 'ஸகஸ்ராக்ஷன்' என்ற பெயர் உண்டாகக் கடவது! அப்போதாவது உனக்கு என்னுடைய, அருமை மிகுந்த அஹல்யாவின் பேரழகு புலப்படுகிறதா என்று பார்க்கிறேன்.

[தேவேந்திரன் தான் மறைந்திருந்த இடத்திலிருந்து வெளிவருகிறான்.]

இந்தி: ரிஷிபுங்கவ, என்னை நீங்கள் மன்னிக்க வேணும்.

கௌ: குருட்டுப் பயலே, நீ அஹல்யையைப் பாட்டி என்று அழைத்தாய்?

இந்தி: மஹர்ஷே, நான் என்ன செய்வேன்? இந்த அமாவாசை இருட்டில்......

கௌ: பூர்ணிமா சந்திரன் அஹல்யாவின் முகத்தில் ஆனந்தமாய்ப் பிரகாசிக்கும்போது அமாவாசை இருட்டு ஏதடா? என் சாபத்தை ஏற்றுக்கொண்டு போ.

இந்தி: மஹர்ஷே, நான் உங்களிடம் ஒரு விஷயத்தைத் தெரிவிக்க வேண்டும்.

கௌ: சுருக்கச் சொல்.'

இந்தி: ரிஷி பத்னி தங்களிடம் உண்மையைக் கூறவில்லை.

கௌ: நிதானித்துப் பேசு. ஒரு ஸ்திரீயைத் தூஷிப்பது அரசனுக்கு அழகாகாது.

இந்தி: நான் சொல்வது உண்மை. தங்கள் பத்னி உண்மை சொல்கிறாளா என்று பரீக்ஷிக்கத்தான் நான் தங்களுடைய ஆச்ரமத்திற்கு வந்தேன்.

கௌ: எவ்விதத்தில் அவள் சத்தியத்தை இழந்தாள்?

இந்தி: அவளுடைய வயசைக் கூறுவதில் தனக்கு இப்போது பதினெட்டு வயசு என்றாள்.

கௌ: அஹல்யா, தேவேந்திரன் கூறுவது உண்மையா? அல்லது ஞான திருஷ்டியால்......

அஹ: ஞான திருஷ்டி வேண்டாம்; அவர் கூறினது உண்மையே!

கௌ: பெண் பேதாய், ஏன் வயசைக் குறைத்துச் சொன்னாய்? 'ஸத்யம் வத' என்ற வேத வாக்கை நீ அறியாயோ?

அஹ: எங்கம்மாதான் 'வயசை மாத்திரம் ஒருவரிடமும் சொல்லாதே' என்று எனக்குப் போதித்தாள்.

கௌ: ஆரிய மொழிக்கு விரோதமாக உன்னுடைய அசட்டு அம்மா ஏன் அப்படிப் போதித்தாள்? வயசைக் கூறுவதனால் உன்னுடைய ரூப ஸௌந்தரியம் குறைந்து விடுமென்ற பயத்தினால் அல்லவா! ஆகையால் உனக்கு அந்தப் பயம் ஏற்படாமல் இருக்கும்படி செய்கிறேன். நீ இனிமேல் நித்திய ஸௌந்தரிய ரூபிணியாய் ஒரு சிலை ரூபமாக இருக்கக் கடவாய்! ஸ்ரீ ராம சந்திரமூர்த்தி உன்னை இந்தச் சாபத்தினின்றும் மீட்பார்.

[திரை]

# மூன்றும் காட்சி

ராஜாராமையர் வீடு: ராஜாராமையர் ஒரு கடிதத்தை வாசித்துக்கொண் டிருக்கிறார்.

ராஜாராமையர்: ருக்மிணி, இங்கே வா. உன் பிள்ளையிட மிருந்து கடிதம் வந்திருக்கு.

ருக்மிணி: என்ன எழுதியிருக்கான்?

ரா: அம்மாவுக்கு முதல் முதல் வைர 'மூக்குப்பொட்டும் எட்டுக்கல் பேஸ்திரியும் வாங்கிக்' கொடுத்துவிட்டு மறுகாரியம் பாருங்கோ என்று எழுதியிருக்கான்.

ருக்: என்ன! பரிகாசம் பண்ணுகிறீர்களா?

ரா: நிஜம்மாத்தான். நீ வேண்டுமானல் வாசித்துப் பார். மத்தியான்னம் பணம் வரும். அப்போ நம்புவே.

ருக்: (ஆவலுடன்) இன்னும் என்ன எழுதியிருக்கான்?

ரா: உன்னைப்பத்தினமட்டில் அவ்வளவுதான்.

ருக்: சொல்லுங்கோன்ன.

ரா: பாக்கி எல்லாம் எனக்கு எழுதியிருக்கான். நாளைக்கு ஆபீஸுக்குப் போனதும் தாசில்தாரைக் கூப்பிட்டு முதுகைத் தட்டி, 'ஜமாபந்தி சரிவர நடந்ததா?' என்று கேட்கச் சொல்லியிருக்கான். அப்புறம் பென்ஷன் வாங்கிக்கொண்டு ஊருக்குப் போய் வீட்டைச் சரியாய்க் கட்டிக்கொண்டு ஸௌக்கியமாய் இருங்கோ என்று எழுதியிருக்கான்.

ருக்: அவனுக்கு என்ன சித்த ஸ்வாதீனம் இல்லையா? நிதானம் பேச்சாத் தோணல்லையே!

ரா: நிதானத்தைக் கொண்டுபோய்க் குப்பையிலே போடு. நான் இருபத்தைந்து வருஷங்கள் நிதானமாக இருந்து என்ன லாபம்? சிரஸ்தேதார் வேலை வரும்போது கங்காதர சர்மா என்னைப் புறக்கணித்துவிட்டார். எனக்குச் சிரஸ்தேதார் வேலை இனிமேல் வேண்டாம்.. நம்ப கிட்டுவுக்கு, தேவேந்திரன் வேலை கிடைத்திருக்கு.

ருக்: எனக்குப் புரியும்படி சொல்லுங்களேன், உங்க கும்பலுக்கே கொஞ்சம் பித்தம் உண்டு.

ரா: சொல்றேன் கேள். டைரக்டர் வாஞ்சி, கிட்டுவைப் போல் ராஜபார்ட்டு எங்கும் கிடையாது என்கிறானும். இப்போ 'அஹல்யா' என்ற 'டாக்கி' போட்டார்களாம். அதில் கிட்டு தேவேந்திரனாக நடித்திருக்கானும். இனிமேல் வாஞ்சி டாக்கீஸில் கிட்டுவுக்கு ஐந்து வருஷங்கள் 'காண்ட்ராக்டு.'

['ராஜாராமையர்!' என்று வெளியிலிருந்து விசுவநாதையர் கூப்பிடுகிறார்.]

ருக்: (மெதுவாக) ப்ரோகுஜத்தின் ஆத்துக்காரர் போலிருக்கு.

ரா: வாங்கோ, எப்போ வந்தேள்? பையனைச் சேர்த்தேளா?

விசுவநாதையர்: சேர்க்கிறதென்ன சுலபமாயிருக்கா? இந்த வெளியூர்ப் பள்ளிக்கூடங்களைக் கவனித்தால் நம்ம பையன் நன்றாகத்தான் தேறினான் என்று எண்ணினேன். பட்டணத்துக்குப் போய்ப் பார்த்தால் ஒவ்வொரு பையனும் கிண்டுகிண்டாய் மார்க்கு வாங்கியிருக்கான்.

ரா: பட்டணத்தில் வேறு என்ன விசேஷம்?

விசு: உமக்குத் தெரியாதா? பட்டணம் முழுவதும் உம்ம பிள்ளைதான் விசேஷம்.

ரா: என்ன?

விசு: கிட்டுவினுடைய நடிப்பைப் பத்தித்தான் எல்லாரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். தேவேந்திரனாக நடிக்கும் கட்டம் ரொம்ப நன்றாயிருக்கு, போங்கோ. நானும் என் ஆம்படையாளும் பேசறமாதிரியே இருக்கு.

ரா: (குறும்பாக) உம்முடைய ஆம்படையாள் எப்போதாவது அஹல்யாவாக நடித்திருக்காளா?

விசு: முன்னே பின்னே 'டாக்கி'க்குப் போயிருந்தால்தானே உமக்குத் தெரியப் போகிறது? தேவேந்திரன் அஹல்யாவோடு பேசும் பேச்சுத் தெளிவாகவும் பளிச்சென்றும் இயற்கை ரீதியையொட்டியும் இருக்கு.

ரா: அஹல்யா யாரு?

விசு: அதுதான் இந்தப் படத்தில் ஒரு விசேஷம். அவள் படிச்ச பெண்ணும். கிட்டுவும் அவளும் நடிகர் மாதிரியே தோணவில்லை. அசல் காதலர் மாதிரியே இருந்தார்கள். அடுத்த படத்தில் ஊர்வசி புரூரவஸாக நடிக்கப் போகிறார்களாம். அதுக்கப்புறம் மேனகை விசுவாமித்திரராக வருவார்களாம்.

ரா: அதனாலே நம்ம கிட்டுவுக்குக் கெடுதல் ஒண்ணும் ஏற்படாதே?

விசு: கெடுதல் என்ன ஸார், கெடுதல்? கையில் சொளை சொளையாய் ரூபாய் கிடைக்கும்.

ரா: ரூபாய்க்கு என்ன? இன்னிக்கில்லாமல் போனல் நாளைக்குக் கிடைக்கிறது. பையன் உருப்படியாய் வந்து சேரணுமே என்று தான் எனக்குக் கவலே; பட்டணத்துப் பெண்களுக்குத் தளுக்கு ஜாஸ்தியாச்சே!

விசு: 'டாக்கி'யிலே சேரும்படி அனுப்பின பிறகு இதை எல்லாம் யோசிப்பார்களோ? அவா இரண்டு பேருக்கும் ஏதோ உண்டு என்றுகூடப் பேச்சு இருக்கு!

ரா: ஊர் வம்புக்கென்ன, ஸார். ஏதாவது வாயை மென்னுண்டிருக்கணுமோன்னே! நம்ப கிட்டு அப்படிப்பட்ட பையனில்லே.

விசு: எனக்கு ஒண்ணும் தெரியாது! ஏதோ காதில் பட்டதைச் சொல்ல வந்தேன். நான் வரட்டுமா?

[போகிறர்.]

ரா: ருக்மிணி, இங்கே வா. விசுவநாதையர் இன்னிக்குக் காலேயில்தான் பட்டணத்திலிருந்து வந்தாராம்.

ருக்: அப்படீன்னு, தேங்கா துருவி வாங்கிக்கொண்டு வந்தாரோ?

ரா: எந்தத் தேங்கா துருவி?

ருக்: 'உங்காத்துக்காரர் பட்டணத்துக்குப் போனல் தேங்கா துருவி ஒண்ணு வாங்கிண்டு வரச் சொல்லு' என்று ப்ரோகுஜத்தினிடம் சொல்லி யனுப்பினேன்.

ரா: நீ 'கமிஷன்' குடுக்காமே எப்போதான் இருப்பயோ?

ருக்: வாங்கிக்கொண்டு வந்தாரோ என்று கேட்டீர்களோ?

ரா: அதை நான் கேட்கவில்லே. அதைக் காட்டிலும் முக்கியமான சமாசாரம் ஒண்ணு கொண்டு வந்திருக்கார்.

ருக்: என்ன?

ரா: நாம் உடனே கிட்டுவுக்குக் கல்யாணம் பண்ணவேணும். இல்லாவிட்டால் உனக்கு அஹல்யை மாட்டுப் பொண்ணய் வந்து விடுவாள்.

ருக்: அஹல்யை யாரு?

ரா: கிட்டுவோடே 'டாக்கி'யில் நடிப்பவள்.

ருக்: அப்படீன்னு, என் தம்பிக்கு எழுதுங்கோ. கல்யாணத்துக்கு உடனே ஏற்பாடு பண்ணுவோம்.

ரா: முதலில் கிட்டுவைக் கேட்போம்.

ருக்: கேட்பானேன்? நாமே நேரில் போய்க் கிட்டுவைக் கூப்பிட்டுக்கொண்டு வருவோம்.

ரா: ஆனல் சரி; புறப்படுவதற்குத் தயார் செய்!

[திரை]

## நான்காம் காட்சி

வாஞ்சி ஒரு நாற்காலியில் உட்கார்ந்த வண்ணம் மேஜை மீது இருக்கும் ஸரஸ்வதியின் படத்தையும், ஸரஸ்வதியைப் போலுள்ள மற்ருெரு ஸ்திரீயின் படத்தையும் மாறி மாறிப் பார்த்துக்கொண் டிருக்கிருர். அப்போது ஆண்டியப்பன் என்னும் அவருடைய வேலையாள் பூங்கொத்து ஒன்றைக் கொண்டு வந்து மேஜைமேல் இருக்கும் பூக்கிண்ணத்தில் வைக்கிருன். பிறகு வாஞ்சியைப் பார்த்துத் தலையை அசைத்துக் கொண்டு ஒரு மூலையில் போய் நிற்கிருன்.

**ஆண்டியப்பன்:** *இதெல்லாம் எனக்குப் பிடிக்கல்லேங்க!*

**வாஞ்சி:** *என்ன சொல்றே, ஆண்டியப்பா?*

**ஆண்டி:** *ரோசனே பண்ணினேனுங்க; நான் இம்மாத்தூண்டு பயலாயிருக்கச்சே தொட்டு யசமான் கிட்டே வேலே செஞ்சு வரேனுங்க; அதுதான் மனசு கேக்கமாட்டேங்குது; இல்லாட்டி நமக்கென்னுன்னு கண்ணே மூடிக்கிட்டு இருப்பேன்.*

**வா:** *எதைப் பத்திச் சொல்ல வந்தே? தயங்காமல் என்னிடம் சொல்லு.*

**ஆண்டி:** *நம்ம சரசதியைப் பத்தித்தானுங்க... அவுங்க இப்படி இருக்கிறது எனக்குப் பிடிக்கல்லிங்க. நான் என்னவோ பழையநாள் ஆசாமிதான். ஆனுல், நீக்குப் போக்குத் தெரிஞ்சவனுங்க. சரசதி அம்மாளே இம்மாத்தூண்டு பிராயம் முதல் அறிவேனுங்க. அதுதான் எனக்கு என்னவோ தோணுது!*

**வா:** *எனக்கும் அவளேப் பத்தித்தான்டா இப்போ கவலேயாயிருக்கு.*

**ஆண்டி:** *யசமான் மனசு தெரியாமப்போனு நான் இத்தினி வருசம் வேலே செஞ்சு என்னு பிரயோசனம்?......நான் சொல்லறது என்னுன்னுக்கா, இந்தப் படமெல்லாம் பிடிக்கிறீங்களே, அதானுங்க அவுங்க மனஸ்சக் கொளப்பறது.*

**வா:** *படம் என்னடா பண்ணித்து?*

**ஆண்டி:** *அப்படிச் சொல்லாதேங்க, யசமான். படம் பிடிக்கச்சே கைகோத்துக்கினு ஸல்லாபம் பண்ணுக்கா, படம் பிடிச்ச பிற்பாடுகூட அதே ரோசனேதானுங்க, அவுங்க மனசுலே தோணும். அதெத்தானுங்க இன்னிக்குச் சாயரக்ஷை கண்டேன்.*

வா: என்னத்தைக் கண்டே?

ஆண்டி: பூக்கொண்டுவரத் தோட்டத்துக்குப் போனேனுங்க. அப்போ சரசதி அம்மாளும் கிருச்ணனும் தனியே பேசிண்டிருந்தாங்க.

வா: என்ன பேசினார்கள்?

ஆண்டி: கல்யாணம் ஆனவங்க மாதிரி பேசினுங்க.... என் பெஞ்சாதி எனக்கு அத்தை மவதான். இருந்தாலும் கண்ணாலத்துக்கு முன்னே நான் அவளோடு இப்படிப் பேசியிருந்தேன்னு என்னைச் சோட்டாலடியுங்க....

வா: ஆண்டியப்பா! இப்போ உன் யோசனை என்ன?

ஆண்டி: ரெண்டு பேருக்கும் கண்ணாலம் பண்ணிப்பிடுங் களேன். எல்லாம் சரியாப் பூடும்!

வா: கல்யாணம் எப்படியடா பண்றது? அதற்கு முன்னால் ஸரஸ்வதியின் விஷயத்தைக் கிருஷ்ணனிடம் சொல்ல வேண்டாமா? இன்னும் ஸரஸ்வதிக்கே அது ஒண்ணும் தெரியாதே!

ஆண்டி: சரசதி உங்க பெண்ணில்லேன்னு தெரிஞ்சாக்கெ, கிருச்னன் அவுங்களை கண்ணாலம் பண்ணிப்பாரா?

வா: கிருஷ்ணன் மாத்திரம் இல்லேடா! நிஜம் தெரிஞ்சு துன்னு வேறு யார்தான் ஸரஸ்வதியைக் கல்யாணம் பண்ணிக்க முன் வருவார்கள்? அல்லது ஸரஸ்வதி விஷயத்தைத்தான் இன்னும் ரொம்ப நாள் மறைத்துவைக்க முடியுமா? இதையெல்லாம் யோசித்துத்தான் அவளுக்குக் கல்யாணம் வேண்டாமென்று 'டாக்கி' யில் சேர்த்தேன். நான் நினைத்தபடியே எல்லாம் நடக்கிறதா?

ஆண்டி: எனக்கு ஒரு ரோசனை தோணுதுங்க.

வா: சொல்லு.

ஆண்டி: எல்லாத்துக்கும் இந்தப் படங்கதானுங்க காரணம். அவுங்க வர படங்களிலெல்லாம் தமாசும், கைகோத்துக்கறதும் வெள்ளாடறதுமா யிருக்கே யொழிய, வேறே சரக்கு ஒண்ணு மில்லேயே!

வா: படத்துக்கும் அவர்களுக்கும் என்னடா சம்பந்தம்? என் இஷ்டப் பிரகாரந்தானே படம் பிடிக்கிறேன்?

ஆண்டி: அப்படிச் சும்மா சொல்லிடாதேங்க. நான் சொல்லறது என்னன்னு, இதெல்லாம் சகவாச தோசந்தானுங்க. என்னைத்தான் பாருங்க, உங்களோடு நாள் பூரா இருக்கேனு; அப்பவெல்லாம் யசமான்தான் எல்லாம்னு தோணுது. சாயரக்ஷை கள்ளுக்கடை போனுக்கா மொந்தைதான் எல்லாம்னு தோணுது. ராத்திரி ஊட்டுக்குப் போனு, பெண்டாட்டியாத்தா பெரியாத் தான்னு தோணுது. ஆண்டியப்பனுக்கே இப்படி மூணு சமயத்திலே லோகம் மூணு விதமாய் இருக்கும்போது இந்தச் சின்னஞ் சிறு

கத்துக் குட்டிகளுக்கு எப்படித் தோணும்? படத்தில் காதல்னு, பிற்பாடும் காதல்தானே? படத்தே மாத்துங்கோ, காதல் கீதல் இல்லாமே அவுங்களுக்கு வேசம் போடுங்கோ.

வா: இதுவும் ஒரு யோசனைதான். ஆனால் படத்தை மாத்தினால் இவர்களின் மனோபாவம் மாறுமா?

ஆண்டி: மாறுதபோனு, சரசதி அம்மா விசயத்தை நேராவே ரெண்டு பேருக்கும் சொல்லிடுங்க. கண்ணாலம் பண்ணிக்கிறேன்னு கிருச்னன் சொன்னால் நல்லதாச்சு; இல்லாமப் போனால் இம்மாதிரியெல்லாம் விளையாட மாட்டாங்க.

வா: சரி, அதையுந்தான் பார்க்கலாமே. (ஸரஸ்வதி பாடிக் கொண்டு கிருஷ்ணனுடன் பிரவேசிக்கிறாள். ஆண்டியப்பன் வெளியே போகிறான்.) ஸரஸ்வதி, எங்கே இத்தனை நாழிகை?

ஸரஸ்வதி: தோட்டத்தில் இருந்தோம். 'ஊர்வசி'யை ஒத்திகை நடத்திப் பார்த்தோம்.

கிரு: அந்த 'ஸீனி'ல் பாட்டு அதிகமா யிருக்கென்று எனக்குத் தோன்றியதால்....

வா: நான் உன் அபிப்பிராயத்தைக் கேட்கவில்லையே!

ஸர: இல்லை, கிருஷ்ணனுக்கும் எனக்கும் - அதாவது புரூரவஸுக்கும் ஊர்வசிக்கும் இன்னும் ஸரஸமான ஸல்லாபம் இருந்தால் நன்றாயிருக்கும் என்று எங்களுக்குத் தோன்றிற்று.

வா: ஓஹோ!

ஸர: உங்களுக்குச் சிரமம் வேண்டாம் என்று நாங்களே பேச்சுக்களையெல்லாம் போட்டுக் கொண்டு விட்டோம். இப்போது நடித்துக் காட்டுகிறோம்; பார்க்கிறீர்களா? (கிருஷ்ணனைப் பார்த்து) புரூரவஸ், ஆரம்பி பார்க்கலாம். (ஸரஸ்வதி ஊர்வசியைப்போல் முகத்தை மினுக்கிக்கொண்டு நிற்கிறாள்.)

கிரு: (புரூரவஸ் சக்கரவர்த்தி வேட்டையாடும்போது கானகத்தில் ஊர்வசியைப் பார்ப்பதுபோல் பாவித்து) நற்காரிகையே, நான் காணுவது மெய்யா, பொய்யா? இது இரவா, பகலா? பூம்பாவாய், நீ யார்? மாயையா, மங்கையர்க்கரசியா?

ஊர்வசி: அரசே, வார்த்தைகளை வீணாகக் கொட்ட வேண்டாம். நான் ஓர் எளிய ஸ்திரீ; நாட்டியமாடுபவள். தேவசபையில் எனக்கு உத்தியோகம். என்னை ஊர்வசி என்று அழைப்பார்கள். ஆனால், இப்போ என் உள்ளம் (புரூரவஸைக் குறிப்பிட்டு) அவ்விடத்தில் ஊடுருவிப் பாய்ந்திருக்கிறது.

புரூ: அப்ஸர திலகமே, நீ அப்படிச் சொல்லலாகாது. என் உள்ளந்தான் அவ்விடத்தில் ஊசலாடுகிறது.

ஊர்: இல்லை, பிரபோ, என் உள்ளம் -

புரூர: இல்லை மடந்தாய், என் உள்ளம் -

வா: (அதட்டி) போரும். இந்த லீலைகளை நிறுத்துங்கள்.

ஸர: இது உங்களுக்குப் பிடிக்கவில்லையா ?

வா: (கம்பீரமாக) நான் 'ஊர்வசி' படம் எடுக்கப் போகிற தில்லை.

கிரு: ஐயையோ, எல்லாம் தயாராயிருக்கே !

வா: இந்தப் படம் வேண்டாம் என்று தீர்மானித்து விட்டேன். இது மாதிரிப் படம் இனிமேல் நான் எடுக்கப் போகிற தில்லை. வேடிக்கையும் விளையாட்டும் இல்லாத படமாய் எடுக்கப் போகிறேன்.

கிரு: அது ஜனங்களுக்குப் பிடிக்காதே.

வா: ஏன் பிடிக்காது? நான் பிடிக்கும்படி செய்கிறேன். சோகரஸம் ததும்பும் படம் ஒன்று பிடிக்கிறேன். சோகரஸந்தான் வாழ்க்கையின் விசேஷ குணம். சோகந்தான் அந்தக்கரண சுத்தி செய்து ஆத்மாவைப் புனிதப்படுத்தும். ஹாஸ்யமும் ச்ருங்காரமும் வண்ணாத்திப் பூச்சிபோல் நிலையற்றவை, வாழ்க்கையின் மோகம், ஆத்மாவின் வீழ்ச்சி !

கர்ணன் என்னும் ஸௌர்ய புத்திரனின் படம் பிடிக்கப் போகிறேன். கிருஷ்ணா, நீ அதில் கர்ணனாக நடிக்க வேண்டும். ஸரஸ்வதி, குந்திதேவியாக நடிப்பாள். அதற்குத் தயார் செய்து கொள்ளுங்கள்.

[திரை]

# ஐந்தாம் காட்சி

வாஞ்சியின் ஸ்டுடியோ. ஸரஸ்வதி தன்னுடைய அறையில் உட்கார்ந்துகொண்டு உல்லாஸமாக 'காதலின் - பாக்கியம் கதிதரும் யோக்கியம்' என்ற பாட்டைப் பாடிக்கொண் டிருக்கிருள். கிருஷ்ணன் பிரவேசிக்கிருன்.

கிரு: ஒரு விஞ்ஞாபனம்.

ஸர: என்ன ?

கிரு: நீ பாடியதன் ஸாராம்சத்தை நான் உன்னிடம் சமர்ப் பிக்கிறேன்.

ஸர: நான் அங்கீகரிக்கவில்லை.

கிரு: ஏன் ?

ஸர: 'ஆரம்பிக்கச்சயே ஒரு பெண்ணின் ரூபத்தைக் கண்டு மனம் இளகி மையல் கொண்டாயோ உனக்குப் பாடமும் வராது. என் படமும் குட்டிச் சுவராய்ப் போய்விடும்.'

கிரு: வாஞ்சியின் ஹிதோபதேசமா ? அது கிடக்கட்டும். அவருக்கு என்ன தெரியும் காதலைப்பற்றி ?

ஸர: கிருஷ்ணு. நீ என்னை எதற்காகக் காதலிக்கிருய் ?

கிரு: எதற்காக என்ருல் ? சூரியன் எதற்காகப் பிரகாசிக் கிருன் ?

ஸர: எப்படிக் காதலிக்கிருய் ?

கிரு: எப்படியென்ருல் ? எனக்கு ஆப்தமாயிருக்கும் வஸ்துக் களுக்கெல்லாம் அதிகமாக உன்னைப் போற்றுகிறேன்.

ஸர: உனக்கு ரொம்ப ஆப்தமானது எது ?

கிரு: சேனைக் கிழங்கு வறுவல் !

ஸர: உன்னுடைய காதல் இவ்வளவுதானு ?

கிரு: இல்லை. இருள் சூழ்ந்த இரவை உதய சூரியன் எப்படிப் பிரகாசமாக்குகின்ருளே அப்படியே காதல் என் வாழ்க்கை யின் இருளைப் போக்குகின்றது.

ஸர: உன்னுடைய வாழ்க்கையில் இருள் எங்கே இருக்கிறது ?

கிரு: நீ இல்லாவிட்டால் என் வாழ்க்கையில் இருள் சூழும்.

ஸர: என்னுடைய கை பார்த்துக் குறி சொன்னவள், எனக்கு ஐந்து பெண் பிறக்கும் என்று சொல்லியிருக்கிறாள். அப்போது உன் காதல் நீடித்திருக்குமா ?

கிரு: ஐம்பது பெண்கள் பிறந்தாலும் எனக்கு உன்மேல் இருக்கும் பிரேமை குறையாது.

ஸர: சரி. ஆனால் எனக்கெதிரில் வேறு எந்தப் பெண்ணையும் அழகாயிருக்கிறாள் என்று புகழக்கூடாது.

கிரு: அப்படியானால் என்னெதிரில் நீ வேறொரு புருஷனைக் கெட்டிக்காரன் என்று புகழக்கூடாது.

ஸர: சரி. எனக்குப் பேச்சில் இடம் அதிகம். ஆகையால், 'என்ன சளசளவென்று கெடியாரத்துக்குச் சாவி கொடுத்த மாதிரிப் பேசுகிறாய்' என்று கண்டிக்கக் கூடாது.

கிரு: எனக்கு 'Contract Bridge' என்றால் உசிர். ஆகையால் 'சீட்டாடாதே' என்று கண்டிக்கக் கூடாது.

[டைரக்டர் வாஞ்சி பிரவேசிக்கிறான். கிருஷ்ணன் வெளியே போகிறான்.]

வா: ஸரஸ்வதி, நான் வருவது உனக்குப் பிடிக்கவில்லையா ?

ஸர: நான் அதைப்பற்றி யோசிக்கவில்லையே!

வா: ஸரஸ்வதி, நீ உன் வாழ்க்கையை வீணாக்குகிறாய்.

ஸர: 'டாக்கி' விஷயத்தைப்பற்றி ஏதாவது இருந்தால் நான் கேட்கத் தயாரா யிருக்கிறேன். வேறு விஷயமாயிருந்தால் தயவு செய்து நீங்கள் தலையிட வேண்டாம்.

வா: ஏன் ? தலை யிட்டதால் என்ன கெடுதல் ? உனக்கு மேன்மையும், கீர்த்தியும்....

ஸர: நான் வேண்டுவது அதுவல்ல.

வா: நீ வேண்டுவது காதல், கல்யாணம், கலாஹீனம், சாதாரணத்வம், முப்பத்தைந்து கோடி ஜனங்களில் ஒன்றாகி மறைய வேணுமென்கிறாய். இந்த மாயைக்குள் ஏன் புகவேணுமென்கிறாய் ?

ஸர: காதல் என்பது மாயை அல்ல.

வா: பின் என்ன? நீ விரும்பும் புருஷனே இவ்வுலகம் என்றும், அவனே உன் உடல், பொருள், ஆவி என்றும் கருதுவது உண்மையாகுமா ? இது கேவலம் நரஸ்துதியே தவிர வேறல்ல.

ஸர: காதல் என்பது இயற்கை நீதி. ஆகையால் காதலிப்பது குற்றமாகுமா ?

வா: இயற்கை நீதி அப்படியே இருக்கட்டும். சம்சாரம் நடத்த மனிதர்களா இல்லை ? நீ ஒருத்தி காதலில் ஈடுபடா விட்டால் உலகம் முடிவுக்கு வந்துவிடாது. ஸரஸ்வதி, நீ இயற்கை

ரீதியாய் இருக்க வேண்டுமென்ற எண்ணம் எனக்கு இல்லை. நீ இயற்கை ஜோதியாக விளங்க வேண்டும்......

ஸ்ர: என்னை இப்போது என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்?

வா; நீ கலையின் மகள். கலையே உனக்குப் பிரதானமானது. கலையே உன் வாழ்க்கையின் ஸம்பூர்ணத்வம்.

ஸ்ர: கிருஷ்ணனைக் கல்யாணம் பண்ணிக்கொண்டால்....?

வா: உன் புகழும் சிறப்பும் முடிந்துவிடும்.

ஸ்ர: பரவாயில்லை. எனக்குப் புகழும் வேண்டாம். பேரும் வேண்டாம். சாதாரணப் பெண்போல் மனசிற்கிசைந்த புருஷனுடன் வாழ்க்கை நடத்துகிறேன். நான் சுகமாயிருக்க வேண்டுமென்பதைத் தானே நீங்கள் விரும்புகிறீர்கள்?

வா: அதைத் தவிர எனக்கு வேறு சிந்தனை உண்டா?

ஸ்ர: நான் எவ்வளவு நாள் பிறர் வாழ்க்கையை நடிப்பது? என் உள்ளம் கவர்ந்த புருஷனுக்கு ஆத்ம ஸமர்ப்பணம் செய்யவேண்டாமா?

வா; கிருஷ்ணன் உன்னை உண்மையாகக் காதலிக்கிருனு?

ஸ்ர: ஆம்.

வா: அது எப்படித் தெரியும்? இளமைப் பருவத்தில் மோகாந்தகாரத்தில் வீழ்ந்து மையல் கொள்வது ஒன்று. ஆயுள் முழுவதும் உனக்கு உண்மையாக இருந்து உன்னுடைய சுகத்தை நாடுவது வேறொன்று.

ஸ்ர: கிருஷ்ணன் விஷயத்தில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை.

வா; இப்போது நீயும் அவனும் வெற்றி யடைந்த நிலையில் இருக்கிறீர்கள். எப்போதாவது - அப்படி ஆக வேண்டுமென்று நான் விரும்பவில்லை - விபரீதமாக நேர்ந்தால் உங்கள் உள்ளன்பு குன்றுமா?

ஸ்ர: ஒரு நாளும் குன்றாது.

வா: அதற்கு அத்தாட்சி?

ஸ்ர: ஏன், இப்படி என்னைக் குறுக்கு விசாரணை செய்கிறீர்கள்? என் வார்த்தையில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா?

வா: உன்னுடைய வாழ்க்கை என்னுடைய பொறுப்பு. கிருஷ்ணன் உனக்குத் தகுந்த கணவன் என்பதை நான் சந்தேகமற அறிய வேண்டும்.

ஸ்ர: அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?

வா: அவனுக்கு உன்னுடைய சரிதம் தெரியுமா?

ஸ்ர: தெரியாதென்று எண்ணுகிறேன்.

வா: அப்படியானால், ஒன்றையும் ஒளிக்காமல் அவனிடம் சொல். அதற்குப் பிறகும் அவன் உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன் என்றால் எனக்கு ஒருவிதத் தடையும் இல்லை.

ஸர: அம்மாவின் வாழ்க்கையைப்பற்றிப் பேச எனக்குக் கஷ்டமா யிருக்கிறது. ஆனால், ஒன்று மட்டும் தெரிய வேண்டும்.

வா: என்ன?

ஸர: அம்மா ஏன் உங்களைக் கல்யாணம் செய்து கொள்ள மறுத்தாள்?

வா: உனக்காக.

ஸர: எனக்காகவா? எப்படி?

வா: உன்னை நான் அங்கீகரிக்க மாட்டேன் என்று எண்ணினாள். நான் எவ்வளவு ஆறுதல் சொன்னபோதிலும் கேட்கவில்லை. உன்னுடைய பெயர் களங்கமற்றதாய் இருக்க வேண்டுமென்று அப்படிச் செய்தாள். அவள் விரும்பின கல்யாணத்திற்குச் சில இடையூறுகள் நேரிட்டன. அதற்குள் நீ பிறந்துவிட்டாய். உங்கள் இருவரையும் பூதேவி தாங்கவில்லை.

ஸர: என்னுடைய தகப்பனார் யார்?

வா: அவர் ஒரு பெரிய தனவந்தர்; அவருடைய சிருங்கார லீலைகளில் உன் தாய், சந்திரனின் ஒரு பிறைபோல் உதயமாகி மறைந்தாள். பிறகு நான் உன்னை எடுத்து வளர்த்தேன்.

ஸர: இவையெல்லாவற்றையும் நான் கிருஷ்ணனிடம் சொல்ல வேண்டுமா?

வா: உசிதம்போல் செய்....அவன் உனக்கு உண்மையாக இருப்பான் என்று தெரிந்தால் போதும்....நீ இங்கேயே இரு. அவனை வரச் சொல்லுகிறேன்.

[வாஞ்சி போகிறான். கிருஷ்ணன் ஒரு தந்தியை எடுத்துக் கொண்டு வருகிறான்.]

ஸர: என்ன விசேஷம்?

கிருஷ்ணன்: அப்பாவிடமிருந்து தந்தி. அம்மாவுடன் இங்கே வந்து கல்யாண விஷயத்தைப்பற்றிப் பேசப் போகிறாராம்.

ஸர: என்ன செய்யப் போகிறாய்?

கிரு: உண்மையைச் சொல்லப் போகிறேன்.

ஸர: என்னை உன் பெற்றோர்கள் அங்கீகரிப்பார்களா?

கிரு: ஏன் மாட்டார்கள்? நான் 'டாக்கி'யில் சேருவதை முதலில் அங்கீகரிக்கவில்லை.

ஸர: என்னைப்பற்றி முக்கியமான சில விஷயங்கள் உனக்குத் தெரியாது.

கிரு: என்னைப்பற்றி மாத்திரம் உனக்கு எல்லாம் தெரியுமா?

ஸர: கிருஷ்ணா, என் ஜன்ம நக்ஷத்திரம் ஆயில்யம்.

கிரு: ஸரஸ்வதி, என் ஜன்ம நக்ஷத்திரம் 'Elementary Mathe-

ஸர: என்னுடைய வளர்ப்பும் வாழ்க்கையும் மிகவும் லௌகிகமானது.

கிரு: லோகத்தில் சிறந்தது லௌகிகம்.

ஸர: நீ என்னுடைய பூர்வ சரிதத்தை ஏன் விசாரிக்கவில்லை?

கிரு: பழங்கதையை விசாரிப்பதில் என்ன பயன்?

ஸர: நான் உனக்குத் தகுந்தவளா, இல்லையா என்பது அப்போதுதான் தெரியும்.

கிரு: எனக்குத் தெரிய வேண்டியது, நீ என்னைக் காதலிக்கிறுயா என்பது ஒன்றுதான்.

ஸர: அது ஒன்று போதுமா?

கிரு: அது ஒன்றிருந்தால் எல்லாம் புனிதமாகும், நிர்த்தோஷமாகும், பவித்திரமாகும்.

ஸர: பிறவியிலேயே தோஷம் இருந்தால்?

கிரு: ஸரஸ்வதி, நீ ஏன் இப்படிப் பேசுகிறுய்? உன் மனசில் என்ன இருக்கிறது?

ஸர: கிருஷ்ணு, நான் உனக்குத் தகுந்தவள் அல்ல.

கிரு: ஏன்?

ஸர: நான் பிறக்கும்போது என் தாய்க்குக் கல்யாணமாகவில்லை. நான் பிறந்த சில நாட்களில் அவள் இறந்துவிட்டாள்.

கிரு: ஸரஸ்வதி, இது நிஜமா? அல்லது என்னைப் பரிசோதிப்பதற்கு இப்படிச் சொல்லுகிறுயா?

ஸர: இல்லை; உண்மையாகச் சொல்லுகிறேன்.

கிரு: இதை யார் உனக்குச் சொன்ஞர்கள்?

ஸர: வாஞ்சி.

கிரு: அப்படியாஞல் நான் நம்பவில்லை.

ஸர: இது உண்மை. அவர் என்னிடம் பொய் கூறமாட்டார்.

கிரு: உன்னுடைய தகப்பஞர் இப்போது எங்கே?

ஸர: அவரும் என் தாயார் இறந்த மறுவருஷமே இறந்துவிட்டார். ஆஞல், வாஞ்சிதான் என்னைப் பிறந்ததுமுதல் வளர்த்து வருகிறுர். அவருடைய ஆஸ்தி அனைத்தும் என்னைச் சேர்ந்தது.

கிரு: உன்னுடைய சரிதம் வேறு யாருக்கும் தெரியாதே?

ஸர: தெரியாது. எல்லாரும் நான் வாஞ்சியின் பெண் என்றே எண்ணியிருக்கிறுர்கள்.

கிரு: இதை ஏன் நீ இப்போது எனக்குத் தெரியப்படுத்திஞய்?

ஸர: உன்னையும் உன் பெற்றேரையும் நான் ஏமாற்ற விரும்பவில்லை.

கிரு: நீ என்னை ஒரு தர்ம சங்கடத்தில் கொண்டுவந்து விட்டாய்.

ஸர: ஏன்? உன் மனநிலை மாறிவிட்டதா?

கிரு: இல்லை. என் பெற்றோர்களை எப்படிச் சம்மதிக்கச் செய்வது என்றுதான் யோசிக்கிறேன். அவர்களுக்குச் சுச்ருஷை செய்தால் ஒரு வேளை அங்கீகரிப்பார்கள்....சரி, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது; என் அம்மாவை மாத்திரம் சற்றுக் கவனித்துக்கொள். அவள் ஒப்புக்கொண்டால் எல்லாம் சுலபமாய் முடியும்.

[கிட்டு, கிட்டு என்று யாரோ கூப்பிடுகிறார்.]

அவா வந்துட்டா.

ஸர: இப்போது என்ன செய்கிறது? நான் போகட்டுமா?

கிரு: போகாதே. இங்கேயே இரு. நான் சொல்வது போல் நட. ஒண்ணையும் மறுக்காதே.

[ராஜாராமையரும் ருக்மிணியும் உள்ளே வருகிறார்கள்.]

வாங்கோ; இப்படி உட்காருங்கோ.

ஸர: (ருக்மிணியைப் பார்த்து) உட்காருங்கோ; ரெயில் இப்பத்தான் வந்ததா?

ருக்: எந்த ரெயில்?

ஸர: நீங்கள் வரேன்னு எழுதியிருந்தேளே அந்த ரெயில்.

ருக்: வரேன் என்று எங்கே எழுதியிருந்தோம்?

ஸர: தந்தியிலே.

ருக்: எந்தத் தந்தியிலே?

கிரு: என்ன அம்மா? ஒண்ணும் தெரியாததுபோல் பேசுகிறாய். நீங்க எனக்குத் தந்தியடிக்கல்லையா?

ருக்: உனக்குத்தான் அடித்தோம்.

ராஜா: ருக்மிணி, கொஞ்சம் நிதானமாய்ப் பேசு.

ருக்: (ஸரஸ்வதியைப் பார்த்து) சரி, எங்க கிட்டுவோடு பேச நாங்கள் வந்திருக்கிறோம்.

ஸர: ஓகோ! அப்படியென்றால் நான் போகிறேன்.

கிரு: போகாதே, ஸரஸ்வதி. (ருக்மிணியைப் பார்த்து) அம்மா, நாம் பேசும் விஷயத்திற்கு ஸரஸ்வதி இங்கேயே இருந்தால் தேவலை. (ஸரஸ்வதி இரண்டு 'டம்ளரில்' 'ஸோடா' கொண்டு வந்து வைக்கிறாள். ராஜாராமையர் எடுத்துக் குடிக்கிறார்.)

ருக்: எனக்கு வேண்டாம். நான் 'ஸோடா' சாப்பிடுவதில்லை.

ஸர: இது வெறும் 'ஸோடா' இல்லை. ஆசாரமாக்குவதற்குக் கொஞ்சம் மோர் விட்டிருக்கேன்.

ரா: அப்படியானால் பாதகமில்லை, சாப்பிடு. வரும்போது ரொம்பத் தாகமாயிருக்கு என்றாயே!

[ருக்மிணி 'ஸோடா' சாப்பிடுகிறாள். ஒரு விநாடி எல்லாரும் மௌனமாயிருக்கிறார்கள்.]

ரா: கிட்டு, உன்னுடைய கல்யாணத்தைப்பற்றி.....

ருக்: நாங்கள் ஏற்பாடு செய்திருக்கிறோம்.

கிரு: அது சம்பந்தமாக உங்களுக்குத் தெரிவிக்க வேண்டிய விஷயம் ஒன்றிருக்கு.

ருக்: என்ன?

ஸர: என்னுடைய பூர்வ சரித்திரத்தை உங்களுக்குத் தெரிவிக்க வேண்டும்.

ருக்; உன்னைப்பற்றித் தெரியவேண்டிய அவசியம் எனக்கு இல்லை.

கிரு: அப்படி நறுக்கென்று சொல்லாதேயம்மா. இவளை நீயும் அப்பாவும் சற்றுக் கவனியுங்கள். இவளிடம் ஏதாவது தோஷம் தெரிகிறதா?

ஸர; ஆனால் பிறவியில்........

கிரு: (ஸரஸ்வதியிடம்) நாம் இரண்டு பேரும் பேசினால், அம்மாவுக்குப் புரியாது. நான் சொல்லுகிறேன். நீ பேசாமல் இரு.

ஸர: என்னுடைய பூர்வ சரிதம்?

கிரு: அதை நான் சொல்லுகிறேன். சகுந்தலை கண்வ மகரிஷிக்குக் கிடைத்த மாதிரி இவள் டைரக்டர் வாஞ்சிக்குக் கிடைத்தாள். இவளுடைய தகப்பனார் லக்ஷ ரூபாய் வைத்துவிட்டு இறந்துவிட்டார்.

ருக்: அக்கா தங்கை உண்டா?

கிரு: இல்லை. இவள் ஏக புத்திரி. ஆனால் அந்த லக்ஷ ரூபாய் இவளிடம் சேருவதற்கு ஒரு நிபந்தனை இருக்கு.

ரா: என்ன நிபந்தனை? கல்யாணத்தின்போதுதான் அந்தப் பணம் கிடைக்குமோ?

கிரு; அப்படியிருந்தால் வேறு யாரையாவது கல்யாணம் பண்ணிக்கொண்டிருப்பாளே!

ருக்; பின் என்ன நிபந்தனை அது?

கிரு; சொன்னால் நம்பமாட்டீர்கள்.

ரா: இவள் அகமுடையானும் டாக்கியிலேயே இருக்க வேண்டும் என்ற நிபந்தனையோ?

கிரு: அப்படியிருந்தால் வேறு யாராவது ஒரு நடிகனைக் கல்யாணம் செய்துகொண்டிருப்பாளே!

ருக்: என்ன நிபந்தனை என்று சொல்லேன்.

கிரு: நிபந்தனை உன்னைப்பற்றியதுதான்.

ருக்:<br>ரா: } என்ன?

ஸர: என்னுடைய தகப்பனார் என்னுடைய தாயை......

கிரு: (கையால் ஸரஸ்வதியை உட்காரும்படி காட்டி) வெகு அன்போடு வைத்திருந்தார். இவளும் ஸுகமாக இருக்க வேண்டுமென்றுதான் இந்த நிபந்தனை.

ருக்; நிபந்தனை என்னவென்று சொல்லேன்.

கிரு: எல்லா விதத்திலும் உத்தமமான மாமியார் கிடைத்தால்தான் இவள் கல்யாணம் பண்ணிக்கொள்ளலாம்.

ருக்: உண்மையாகவா? இது என்ன நிபந்தனை?

கிரு: ஆமாம், அம்மா. ஸரஸ்வதியைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள எவ்வளவோ பிள்ளைகள் முன் வந்தார்கள். ஆனால் தீர விசாரித்ததில் அவர்கள் தாய்மார்கள் ராக்ஷஸ குணத்தை ஏதோ ஓர் அம்சத்திலாவது கொண்டிருந்தார்கள். அதனால்தான் லோகத்திலேயே நல்ல மாமியார் இல்லை என்று எண்ணி 'டாக்கி'க்கு வந்து சேர்ந்தாள்.

ரா: ஏண்டா கிட்டு, உன் அம்மா நல்ல மாமியாராய் இருப்பாள் என்று எப்படித் தெரியும்?

கிரு: அம்மா குணத்தைப்பற்றி நான் ஸரஸ்வதியிடம் கூறினேன். அவளுக்கு ரொம்ப ஸந்தோஷம் ஏற்பட்டது. உடனே உனக்கு எட்டுக் கல் பேஸ்திரியும் வைர மூக்குப்பொட்டும் வாங்கப் பணம் கொடுத்தாள்.

ருக்; நீயாம்மா அது? கிட்டுவுக்கு அகமுடையாள் வழியாய்த் தனம் உண்டு என்று ஜோஸியன் சொல்லியிருக்கான். சரி, இனிமேல் ஜாதகம் பார்க்க வேண்டியதுதான் பாக்கி. (ஸரஸ்வதியைப் பார்த்து) இது என்ன நிபந்தனை அம்மா! நான் கேள்விப்பட்டதே இல்லையே? இருந்தாலும் என் மாமியாரும் நாத்தனாரும் என்னைப் படுத்தின பாட்டுக்கு இப்போதான் எனக்கு நல்ல காலம் பொறந்திருக்கு. பொறுத்தவர் பூமியாள்வார் என்ற வசனம் பொய்யாகுமா? அதுதான் லக்ஷ்மிபோல் இந்தப் பொண் கிட்டுவுக்குக் கிடைத்திருக்கு. இனிமேல் என்ன தவக்கம்? (ராஜாராமையரைப் பார்த்து) வாங்கோ, பார்த்தஸாரதி கோவிலுக்குப் போய், பூ வெச்சுச் சகுனம் பாப்போம்.

ரா: நிதானமென்பதே கிடையாதா உனக்கு?

ருக்: நிதானத்தைக் கொண்டு குப்பையில் போடுங்கோ.

[ராஜாராமையரும் ருக்மிணியும் வெளியே போகிறார்கள்.]

[கிருஷ்ணன் ஸரஸ்வதியைப் பார்த்துச் சிரிக்கிறான். திரும்பியும் அவளைப் பார்த்து உரக்கச் சிரிக்கிறான். அவனுக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வருகிறது. ஸரஸ்வதி யோசனையில் இருக்கிறாள். கிருஷ்ணனுடைய சிரிப்பு அவளுக்குப் பிடிக்கவில்லை.]

ஸர: எதற்காகச் சிரிக்கிறாய்?

கிரு: வந்து...அம்மா (விழுந்து விழுந்து சிரிக்கிறான்.)

ஸர: சிரிக்காதே!

கிரு; ஏன்? (திரும்பியும் சிரிக்கிறான்.)

ஸர: எதற்காகச் சிரிக்கிருய்?

கிரு: ஏன் சிரிக்கக் கூடாது? உன்னைப்போல் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக்கொண் டிருக்கவேணுமோ?

ஸர: பொறுப்புள்ள விஷயத்தைப் பேசும்போது சிரிப்பென்ன வேண்டியிருக்கு?

கிரு: அப்படித்தான் சிரிப்பேன். நீ என்ன அடக்குவது?

ஸர: கிருஷ்ணு! உன்மேல் எனக்கு நம்பிக்கை இல்லை.

கிரு: உன்மேலும் எனக்கு நம்பிக்கை இல்லை. நான் அம்மாவோடு பேசும்போது நீ ஏன் குறுக்கே பேசிஞய்?

ஸர: அப்படித்தான் பேசுவேன். அவர்களிடம் என்னுடைய பூர்வ சரிதம் கூறலாம் என்ருல் நீ இப்படி அண்டப்புளுகணுய்....

கிரு: 'ஒரு கல்யாணத்திற்காக ஆயிரம் பொய் சொல்லலாம்' என்ற ஆரிய மொழியை நீ அறியாயோ?

ஸர: அது செய்து வெக்கிறவாளுக்குத் தகும். கல்யாணம் செய்துகொள்கிறவனே பொய் சொல்லலாமா?

கிரு: சொன்ஞல் என்ன?

ஸர: உனக்கு வாழ்க்கையின் அடிப்படையாயுள்ள சோக ரஸம் என்னவென்பது தெரியாது. எல்லாம் உனக்குப் பொய்யும் விளையாட்டுந்தான்.

கிரு: மாயப் பிரபஞ்சத்தில் பொய்யேது, மெய்யேது? எல்லாம் அநித்தியம், அஸத்யம்.

ஸர: இப்போதுதான் உன்னுடைய நிஜகுணம் எனக்குப் புரிந்தது. உனக்கு அந்தஸ்து, ஒழுக்கம், சீலம் இவற்றின் மேன்மை தெரியாது.

கிரு: இப்போதுதான் எனக்கு உன்னுடைய குணம் தெரிந்தது. உனக்கு ஒரு நிமிஷங்கூட வாயை அடக்கிக்கொள்ளத் தெரியாது.

ஸர: நீ அஸத்யவாதி!

கிரு: நீ அதிகப்பிரஸங்கி!

ஸர: நீ அல்ப ஸந்துஷ்டி!

கிரு: நீ அழுமூஞ்சி!

ஸர: இந்த லோகத்தில் புருஷப்பூண்டு நசித்துப் போய் நீயே கடைசிப் புருஷனுயிருந்தாலும் நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்.

கிரு: நீ மகாலக்ஷ்மியின் ஸாக்ஷாத் அவதாரமென்று 'Certificate' வாங்கிக்கொண்டு வந்தாலும் நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்.

(போகிருர்கள்.)

[திரை]

# ஆரும் காட்சி

ராஜாராமையர் வீடு. கிருஷ்ணன் 'கூலிங் கிளாஸ்' (Cooling glass) அணிந்துகொண்டு நாற்காலியில் சாய்ந்து யோசித்தவண்ணம் இருக்கிருன். ருக்மிணி உள்ளே வருகிருள்.

ருக்மிணி : *ஏம்பா கிட்டு, இன்னிக்கு எப்படி யிருக்கு கண்? டாக்டர் வந்திருந்தாரே, என்ன சொன்ஞர்? திருஷ்டியோ என்ன மோடா! நான் திருப்பதி ஸ்ரீநிவாஸனுக்குக் கண்மலர் பண்ணிக் கொண்டு உன்னை அழைத்து வரேன் என்று வேண்டிண் டிருக்கேன்.*

கிருஷ்ணன் : *பயப்படாதே அம்மா. முக்கால்வாசி, குணமாய் விட்டது. (கண்ணுடியைக் கழற்றுகிருன்.) கொஞ்சம் கூசுகிறது. வெளியில் போகத்தான் கஷ்டமாயிருக்கு. ரொம்பப் 'பவர்' உள்ள* 'flash light' *ஒன்ஞே! கவனிக்காமே இருக்கச்சே நேரே கண்ணில் திருப்பிவிட்டான். அப்படியே எல்லாம் எனக்கு இருட்டாப் போய் விட்டது; அப்போ இருந்ததுக்கு இப்போ ரொம்பத் தேவலேயே.*

ருக் : *டாக்டர் என்ன சொன்ஞர் ?*

கிரு : *இன்னும் இரண்டு மாசத்தில் சரியாய்விடும் என்ருர். அம்மா, எனக்கு இன்னும் இரண்டு மாசம் டாக்கி கிடையாது.*

ருக் : *வேண்டாம்; எங்களுடன் இங்கேயே இரு, போரும்.*

[வாசல் கதவை யாரோ தட்டுகிருர்.]

கிரு : *அம்மா, வாஞ்சியும் ஸரஸ்வதியும் என்னைப் பார்க்க வரப்போவதாகத் தெரிவித்திருந்தா. அவாதான் போல் இருக்கு... இதோ பார், அம்மா, அவர்களுக்கு முன், நான் பார்வை இழந்த வனுக நடிக்கப் போகிறேன். ஏன் என்று கேட்காதே, அதற்கு ஒரு பிரத்தியேகமான காரணம் இருக்கு. அப்புறம் விவரமாக உனக்குச் சொல்கிறேன். தெரிஞ்சுதா? அதுமட்டும் நான் சொல்வதொன்றையும் மறுக்காதே......போய்க் கதவைத் திற.*

[ருக்மிணி போகிருள். கிருஷ்ணன் கண்ணுடியை எடுத்துப் போட்டுக்கொள்கிருன். சிறிது நேரத்துக்கெல்லாம் வாஞ்சியும் ஸரஸ்வதியும் பிரவேசிக்கின்றனர்.]

கிரு : *(வாஞ்சியைப் பார்த்து) ஸரஸ்வதி, இப்படி உட்கார். (ஸரஸ்வதியைப் பார்த்து) வாஞ்சி, படம் சரியாய் முடிந்ததா?*

ஸர : *நான் எங்கிருக்கேன் என்று கூடவா உனக்குத் தெரியவில்லே?*

வாஞ்சி : *இப்படி யாகுமென்று நான் எண்ணவில்லேயே! டாக்டர் என்ன சொன்ஞர் ?*

கிரு: பார்வை முற்றிலும் சரியாக வெகு நாளாகும் என்றார். இரண்டு வருஷங்களானாலும் ஆகுமாம்.

ஸர: கிருஷ்ணா, நான் ஒரு சமயம் உன்னோடு வாதம் செய்து கோபமாகச் சொன்ன வார்த்தைகளை மறந்துவிடு.

கிரு: நீ சொன்னதில் கொஞ்சமும் தப்பில்லை. 'அஸத்யவாதி, பொறுப்பற்றவன், அல்ப சந்துஷ்டி' - இவை எனக்கு முற்றும் பொருந்தும்.

ஸர: கிருஷ்ணா, என்னை மன்னிக்க மாட்டாயா?

கிரு: மன்னிப்பதற்கு உன்னிடம் ஒரு தோஷமும் இல்லையே! நான்தான் பிடிப்பற்றவனாய், ஒருவித உன்னத லக்ஷ்யமும் இல்லாமல் காலத்தை வீண் போக்கினேன். இப்போது எனக்குக் கண் போன பிறகுதான் எல்லாம் நன்றாகத் தெரிகிறது. பிறர் வாழ்க்கையை நடித்து, பார்க்க வரும் ஜனங்களைச் சொற்ப நாழிகை களிப்புறச் செய்வதில் என்ன பிரயோசனம்? அது அஞ்ஞான இருள். இப்போது எனக்கு அவ்விதச் சபலம் இல்லை.

வா: கிருஷ்ணா, நான் உன்னைத் தவறாக எண்ணியிருந்தேன். உன்னுடைய குணத்தை முன்பு நன்கு அறியவில்லை. நீ எப்போது வந்தாலும் உன்னைச் சேர்த்துக்கொள்கிறேன்.

கிரு: உங்களுடைய பெருந்தன்மைக்கு நான் ரொம்பவும் கடமைப்பட்டவன். உங்களால்தான் எனக்குச் சிறப்பும் வெற்றியும் ஏற்பட்டன.

வா: இல்லை. என்னுடைய அஜாக்கிரதையினால் அல்லவோ உனக்கு இந்தக் கதி ஏற்பட்டது?

கிரு: அதுவும் என் அதிருஷ்டமே. கண் போவதுதான் என்னுடைய வெற்றியின் சிகரம் என்று கருதுகிறேன். ஊனக் கண் போன பிறகுதான் ஞானக்கண் திறந்தது; ஆகையால் நான் உங்களுக்கு ரொம்பவும் கடமைப்பட்டவன்......முன்னொரு சமயத்தில் நீங்கள் கூறிய தத்துவ மொழிகளை அடிக்கடி சிந்தனை செய்கிறேன். ''சோகமே பரம் பொருளின் பேரறம். அந்தக்கரண சுத்தி செய்து ஆத்மாவைப் புனிதப்படுத்துகிறது. ஹாஸ்யமும் சிருங்காரமும் வண்ணாத்திப் பூச்சிபோல் நிலையற்றவை, வாழ்க்கையின் மோகம், ஆத்மாவின் வீழ்ச்சி.''

ருக்: (பிரவேசித்து) இந்தாங்கோ, கொஞ்சம் 'காப்பி' கொண்டு வந்திருக்கேன். சாப்பிடுங்கோ. (எல்லாருக்கும் கொடுக்கிறாள். கிருஷ்ணனிடம் வந்ததும் அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டு 'கப்'பை அவனிடம் கொடுக்கிறாள்.)

ஸர: (அதை உற்றுப் பார்த்துக்கொண்டு) இதுபோல் ஆகுமென்று நான் கனவிலும் எண்ணவில்லையே!

கிரு: ஸரஸ்வதி, வருந்தாதே. நம்முடைய ஆதியும் அந்தமும் பரமனைச் சேர்ந்தவை. அதற்குள் அடங்கிய சொற்ப காலத்தை வீணாக்காமல் கழிக்க வேண்டியது நம்முடைய கடமையல்லவா?

ஸர: அப்படியானால் நானும் உன்னுடனேயே இருக்கேன். உன்னை விட்டு இனிமேல் பிரிய மாட்டேன்.

கிரு: ஸரஸ்வதி, கூடுதலும் பிரிதலும் தோற்றமே தவிர வேறு இல்லை. கிழக்கே இருக்கும் மேகம் மேற்கே செல்கிறது. மேற்கே இருக்கும் மேகம் கிழக்கே செல்கிறது. சம்சாரமும் இவ்வித மேக சலனந்தான்.

ஸர: கிருஷ்ணா, நீ என்னைக் கைவிடலாகாது.

கிரு: என்னால் இனிமேல் உனக்கு என்ன பிரயோசனம்? நான் உனக்குப் பெரும் பாரமாயிருப்பேன்.

ஸர: ஒரு நாளும் இல்லை. நீதான் என் ஜீவிய லக்ஷ்யம். உன்னைத் தவிர்த்து எனக்கு வாழ்க்கையில் இச்சை இல்லை. நீ பார்வை இழந்ததால் எனக்கு உன் மேலிருக்கும் அன்பு எள்ளளவும் குறையவில்லை.

கிரு: என்னுடைய கதியைக் கண்டு மனமிரங்கி நீ என்னுடனே இருக்க வேண்டுமென்று விரும்புவது அழகல்ல. ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கையில் ஒவ்வொரு விதமான அநுபவம் கிடைக்கிறது. எனக்கு நேர்ந்ததைக் கொண்டு உன் வாழ்க்கையையும் என் வாழ்க்கையில் மறைப்பது புத்தியீனம். உன்னுடைய ஆத்ம விபூதி வேறு வழியில் இருக்கலாம்.

ஸர: கிருஷ்ணா, நீதான் என் கதி! நான் உன்னை விட்டுப் போக மாட்டேன்.

கிரு: ஸரஸ்வதி, பிடிவாதம் செய்யாதே. வாஞ்சியுடன் போய் உன்னுடைய ஸௌந்தர்ய ஒளியால் உலகத்தைப் பிரகாசிக்கச் செய். என்னை மறந்துவிடு. நான் குருடன். எனக்கு முன்னே இருப்பதெல்லாம் பேரிருள்! இதிலிருந்து இப்போது என்னை விடுவித்துப் பஞ்சேந்திரியங்களுக்குள் பிரதானமாயிருக்கும் திருஷ்டி என்னும் இந்திரியத்தை மீட்டுக்கொடுக்க ஒருவராலும் முடியாது. என் மனமும் இனிமேல் மாய உலகில் புகுந்திட விரும்பவில்லை.

இது காறும் நீ என்மேல் பாராட்டிய விசுவாசத்தை நான் என்றும் மறவேன்.

ஆனால், நாம் தனிமையாகத்தான் ஜனிக்கிறோம்; தனிமையாகவே மரிக்கிறோம். ஆகையால் தனிமைத் தன்மைதான் முக்தி மார்க்கம்.

ருக்: (பொறுமை யிழந்தவளாய்) போருமடாப்பா! குழந்தை அழாக் குறையாய் நிற்கிறாள். இதுவா பரீக்ஷை பண்ணுவதற்குச் சமயம்? (ஸரஸ்வதியைப் பார்த்து) இல்லேடியம்மா. அவன் கிடக்கிறான்; குருடுமில்லே, ஒண்ணுமில்லே. இன்னும் இரண்டு மாசத்தில் எல்லாம் சரியாய்விடும் என்று டாக்டர் சொல்லியிருக்கார்.

ஸர: கிருஷ்ணா!

கிரு: (கண்ணாடியைக் கழற்றி) ஸரஸ்வதி!

[திரை]

# வாய்

**பாத்திரங்கள்**

ராமு

பத்மா

ராமுவின அம்மா

சாயந்தர வேளை. ராமு என்பவன் பட்டணத்தில் ஓர் உத்தியோகஸ்தன். சிக்கனத்திற்காகவும் தேக ஆரோக்கியத்திற்காகவும் தினந்தோறும் சாயந்தர வேளையில் ஆபீஸிலிருந்து வீட்டிற்கு நடந்துதான் வருவான். வந்தவுடன் அவன் எதிர் பார்ப்பவை, அவனுடைய பாலகன் கிட்டுவின் முகமும், அதன் பிறகு 'ஸ்ட்ராங்'கான ஒரு 'கப்' காபியுமே. இன்றைக்கும் வழக்கம்போல் ஆபீஸிலிருந்து வீட்டிற்கு வருகிறான்.

ராமு: கிட்டு, கிட்டே....(பதில் வராததைக் கண்டு) அம்மா, கிட்டு எங்கே?.....அம்மா!...அம்மா! (இதற்கும் பதில் இல்லை.) பத்மா!...பத்மா!... (உரக்க) பத்மா! (பதில் இல்லை.) இந்தாத்தில் ஏன் என்று கேட்க ஒருவரும் இல்லையா? (சமையலறைப் பக்கம் சென்று அங்கே தன் மனைவி பத்மாவைப் பார்த்து) ஊமைக் கோட்டான்போல் உட்கார்ந்திருக்கயே! கூப்பிட்டது கேட்கவில்லை? வாயைத் திறந்து ஏனென்று கேட்டுவிட்டால் என்ன முழுகிப் போய்விடும்?

பத்மா: என்னிடம் வந்து ஏன் கத்தறயள்?

ரா: கத்தாமல் என்ன செய்கிறது? சாயங்காலம் நடந்து வந்திருக்கேனே, களைப்பா யிருக்கும், காப்பி கொண்டு வந்து வெக்கணும் என்று உனக்குத் தெரியாதா?

ப: ரூமில் போய்ப் பாருங்கோ! எல்லாம் வெச்சிருக்கேன்.

ரா: வெச்சிருக்கயா? நான் இன்னும் ரூமுக்குப் போகவில்லை. (போய்க் காபியை ஆற்றிக் குடிக்கிறான்.) பத்மா, இங்கே வா.

ப: உங்கள் காரியந்தான் ஆய்விட்டதே! என்னை எதற்குக் கூப்பிட்டீர்கள்?

ரா: கோவிச்சுக்காதே! ஏன் என்று அப்போதே கேட்கிறது தானே?

ப: கேட்கிறதற்குத்தான் உங்கம்மா இருக்காரே! கண்டபடி பேசுவதற்கும், பழி கூறுவதற்கும், எனக்கென்று மாமியாராய் வாய்த்திருக்காரே; நான் எதற்கு? (அழுகைக் குறையாய்) நாய் போல உழைக்கத்தானே?......

ரா: அழ ஆரம்பிக்காதே! இன்னிக்கி உங்களுக்குள் ஏதாவது நடந்ததா? சண்டை போட்டீர்களா?

ப: நான் எதற்காகச் சண்டை போடுகிறேன்?

ரா: இல்லாத போனால் இப்படி இருக்க மாட்டீர்களே! அம்மாவைக் கூப்பிட்டேன், பதிலைக் காணோம். உன்னிடமிருந்தும் பதில் இல்லை. கிட்டுப் பயலோ ஆத்தில் இல்லை. நான் என்ன செய்வது? சரி, அம்மா எங்கே?

ப: பூஜை உள்ளில் போத்திக் கொண்டு தூங்குகிறார். இன்னிக்கு அவர் சாப்பிட மறுத்து விட்டார். சொல்றதைச் சொல்லிவிட்டுக் கோபம் என்ன வேண்டியிருக்கு?

ரா: என்ன சொன்னாள்?

ப: அதைச் சொன்னால் நீங்கள் என்ன செய்துவிடுவீர்கள்? நீங்கள் அம்மா கட்சியில்தானே பேசுவீர்கள்?

ரா: என்ன சொன்னாள் என்பதைச் சொல்லேண்டி!

ப: இந்தாங்கோ, இந்த 'ஏண்டி', 'தோண்டி' யெல்லாம் வேண்டாம். என்னோடு இனிமேல் நீங்கள் பேசவும் வேண்டாம். நான் பாட்டுக்கு வீட்டுக் காரியத்தை முடியற மட்டும் செய்துவிட்டு என் கடனைத் தொலைச்சுவிட்டுப் போறேன்.

ரா: இதோ பார், பத்மா. இதெல்லாம் வீட்டுக்கு அழகாய் இருக்கா? நாலு பேர் பார்த்தால் என்ன சொல்லுவா? ஏன் மனம் நொந்து போகிறாய்? நடந்ததைச் சொல்லேன். அம்மா உன்னை என்ன சொன்னாள்?

ப: மல்லிப்பூக்காரி வந்திருந்தாள். 'அம்மா, பூ வாங்கட்டுமா?' என்று விநயமாகத்தான் கேட்டேன்; அதற்கு என்ன பதில் சொன்னார் தெரியுமா?

ரா: எனக்கு எப்படித் தெரியும்?

ப: தெரியாமலென்ன? நீங்கள் அம்மாவுக்குப் பிள்ளைதானே?

ரா: அதிகப் பிரசங்கம் செய்யாதே! என்ன சொன்னாள்?

ப: 'பொணத்துக்குச் சாத்தறாப்போல் நித்தியம் என்ன பூ வேண்டியிருக்கு?' என்றார்.

ரா: அப்படியா சொன்னாள்? இரு...நான் போய் அம்மாவைக் கேட்கிறேன். (போய்ப் பூஜையுள்ளின் கதவைத் தட்டுகிறான்.) அம்மா, கதவைத் திற......அம்மா!

அம்மா: அம்மா என்னடா வேண்டியிருக்கு, இப்போ? அம்மாவை அடுப்பிலே வை!

ரா: ஏன், அம்மா, இப்படிப் பட்டினியா யிருக்கே? என்ன கோபம் உனக்கு? எல்லாத்தையும் என்னிடம் சொல்லேன். இரண்டு நாளைக்கு ஒரு தரம் ஏதாவது ஒன்றை நினைச்சுண்டு வயித்தைக் காயப் போட்டுடறயே. நீ ஆத்துக்குப் பெரியவள் அல்லவா? எல்லாருக்கும் சமத்துச் சொல்லிக் கொடுக்க வாண்டாமோ?

அ: போருண்டாப்பா, உன் வியாக்கியானம். நான் போக்கணம் கெட்டவள். இங்கே உன்னிடம் அவதிப் படுகிறேன். என்னைக் காசிக்கு அனுப்பிவிடு. கிருஷ்ணா ராமாவென்று நான்

பாட்டுக்கு இருக்கேன். உன் அகமுடையாளிடம் பேச்சுக் கேட்க வேண்டும் என்று என் தலைவிதியா ?

ரா: உன்னை என்ன சொன்னுள் ?

அ: அவளையே கேளு, போ. இத்தனை நாழி என்னமோ உனக்கு ஓதிண்டிருந்தாளே. நீயும் அவள் சொல்வதைத்தான் கேட்பாய். அம்மா எப்படிப் போனுல் உனக்கென்ன ? அகமுடையாளைக் கண்டிக்க உனக்குத் தைரியம் ஏது ? நான் பட்டினி இருந்தால் என்ன மோசம் ? என்னுடைய கஷ்டம் எப்பவுந் தான் இருக்கு. விறகு வெட்டறவனுக்குப் பிளவை வந்தால் விறகுக் கட்டையால்தான் இரண்டடி....ஆனுலும் இந்த வாண்டுகளுக்கு இத்தனை வாய் இருக்க வேண்டாம்.

ரா: என்ன சொன்னுள் என்பதைச் சொல்லேன் ?

அ: நான் ஏகாதசி விரதம் இருப்பதெல்லாம் சுத்த வேஷம் என்றும், பூஜை உள்ளுக்குள் போய்ப் பூட்டிக்கொண்டு பாதம் பருப்பு, கல்கண்டு, திராக்ஷைப் பழம் எல்லாவற்றையும் காலி செய்கிறேன் என்றும் என்னுடைய காதுக்குக் கேட்கும்படி பார்வதியிடம் சொன்னுள்.

ரா: நன்ருய்ச் சொன்னுள் !....ஆனுல், அம்மா, அவளைக் கேட்டால், 'பூ வாங்கட்டுமா ?' என்று கேட்டதற்கு நீ அச்சான்யமாய்ப் பேசினே என்று அழுருள். இதோ பார், அம்மா, இப்படி இருக்கக்கூடாது. என்னத்திற்காக இப்படி நீங்கள் இருவரும் அடிக்கடி சண்டை போடுகிறீர்கள் ? மனுஷாளுக்குள்ளே மட்டு மரியாதை கிடையாதா ?

அ: மரியாதை என்னடா ? மாட்டுப் பொண்ணைச் சொல்வதற்குக்கூட எனக்கு அதிகாரம் இல்லையா ?

ரா: அம்மா, நான் சொல்வதைச் சற்றுக் கேள். அதிகாரம் என்ற பேச்சை விட்டுவிடு. பத்மா பக்கத்தாத்து மாட்டுப் பெண் என்று எண்ணிக்கோ. அப்போது பத்மாவைப்பற்றி என்ன குறை சொல்லுவாய் ?

அ: அவள் பக்கத்தாத்து மாட்டுப்பெண்ணுனுல் எனக்கு என்ன விசாரம் ? எக்கேடாவது கெட்டுப் போகட்டுமே என்றிருப்பேன்.

ரா: அது வேண்டாம். பத்மா இப்போது கல்யாணமாகாத பெண் என்று நினைச்சுக்கோ. எனக்குக் கொடுக்கணும் என்று உன்னிடம் அவளுடைய மனுஷாள் வந்து கேட்கிருர்கள் என்று வெச்சுக்கோ. எனக்கு எப்படிப் பத்மாவைச் சிபார்சு செய்வாய் ?

அ: போரும்டா, சமத்து. இரண்டு குழந்தைகளைப் பெற்றவளை எப்படிக் கல்யாணப் பெண் என்று நினைச்சுக்கறது ?

ரா: அதுவும் போகட்டும். பத்மாவின் குணத்தை அறிவதற்கு இன்னும் ஓர் உபாயம் சொல்லுகிறேன், கேள். அவளைப் பற்றிக் கல்யாணத்திற்கு முன் என்னென்ன சொன்னுய் என்று யோசித்துப் பார்.

அ: பத்மா, பத்மாவென்று பத்து வார்த்தை பேசுவதற்குள் நூறு தரம் சொல்லிவிட்டாயே! நான் சொல்வதைக் கேட்பாயா இனிமேல்?

ரா: அர்த்தமில்லாமல் பேசாதே. நான் இப்போது உங்களுடைய குணங்களை ஆராய்ச்சி செய்யப் போகிறேன். பிறகு உங்களுக்குள் ஏன் கசப்பு ஏற்படுகிறது என்று கண்டுபிடிக்கப் போகிறேன். நான் கேட்கப் போகும் கேள்விகளுக்கு ஒன்றையும் ஒளிக்காமல் உண்மையாகப் பதில் சொல்லுங்கோ. முதலில் பத்மாவை எடுத்துக்கொள்வோம். என்ன?

அ: என்னை ஏண்டா கேட்கிறாய்? எடுத்துத் தலைமேல் வெச்சுண்டு கூத்தாடேன்.

ரா: இப்படியெல்லாம் பேசாதே, அம்மா. உண்மையைச் சொல்லு. பத்மா, கல்யாணத்திற்குமுன் எப்படி இருந்தாள்? சொல்லு பார்ப்போம்.

அ: அதெல்லாம் யாருக்கு ஞாபகம் இருக்கும்?

ரா: 'பெண் கிளிபோல் இருக்குடா, ராமு' என்று நீ என்னிடம் சொல்லவில்லையா?

அ: சொல்லி யிருக்கலாம். அதனால் என்ன?

ரா: அந்தப் பத்மா—இப்போது எப்படி இருக்காள்?

அ: நீயே சொல்லேன்.

ரா: நான் சொல்லிப் பிரயோஜனம் இல்லை. உன்னுடைய அபிப்பிராயத்தைச் சொல்லு.

அ: (பத்மாவை ஒரு கணம் பார்த்துவிட்டு) இப்போதும் பத்மா லட்சணமாயிருக்காள் என்று எல்லாரும் சொல்லறாள்.

ரா: எல்லாரும் சொல்வதை விடு! நீ என்ன சொல்கிறாய்?

அ: உன் அகமுடையாள் அழகாயிருக்காள் என்று நான் வேறு சொல்லணுமோ?

ரா: வஸிஷ்டர் வாயால் பிரம்மரிஷி என்று வரவேண்டாமா? அப்புறம், 'பத்மா குரலுக்குக் குயில் கெட்டுது' என்றாயே, ஞாபகமிருக்கா?

அ: எங்கெங்கேயோ யிருந்து இதெல்லாத்தையும் கொண்டு வருகிறாயே!

ரா: அது கிடக்கட்டும்; நீ சொன்னது வாஸ்தவமா, இல்லையா?

அ: வாஸ்தவந்தான். இதை யெல்லாம் கேட்டு உனக்கென்ன பிரயோஜனம்?

ரா: அப்படியெல்லாம் வர்ணித்த பெண், இப்போது ஏன் உனக்குக் கசப்பாய்ப் போய்விட்டாள் என்று கேட்கிறேன்.

அ: எல்லாம் நீ இடம் கொடுத்ததனால்தான் வாய்க்கட்டு இல்லாமல் போயிடுத்து. மாமியார் என்றால் அவளுக்குக் கிள்ளுக் கீரை. உனக்கோ அகமுடையாளை அடக்கச் சாமர்த்தியம் போராது.

ரா: ஓகோ. நான்தான் அதற்குக் காரணமா? போதும். உன்னை விசாரித்தாய் விட்டது. பத்மாவைக் கொஞ்சம் கேட்கிறேன். பத்மா, இங்கே வா, என்னைக் கல்யாணம் பண்ணிக்குமுன் எனக்கு ஓர் அம்மா இருக்கான்னு கேழ்விப்பட்டயோன்னோ?

ப: இது என்ன கேள்வி?

ரா: பதில் சொல்லு.

ப: ஆமாம், கேள்விப்பட்டேன்.

ரா: அம்மா எப்படிப்பட்டவள் என்று கேள்விப்பட்டே?

ப: தங்கமானவர் என்று கேள்விப்பட்டேன். மாட்டுப் பெண்ணை ராஜாத்திபோல் வெச்சுப்பர் என்று எல்லாரும் சொன்னர்கள். அதை நம்புவதற்குக் கொஞ்சம் ஆதாரமும் இருந்தது.

ரா: என்ன ஆதாரம்?

ப: அவருக்கு ஒரே பிள்ளை என்றும், ஆகையால் பெண் என்றல் ரொம்பப் பிரியமா யிருப்பார் என்றும் சொன்னர்கள். சிறு குட்டிகளை அடிக்கடி ஆத்துக்கு அழைத்து வந்து பூ வெச்சுப் பின்னி, பக்ஷணம் கொடுத்து அனுப்புவார் என்றும் கேள்விப் பட்டேன். காரியம் என்றல் பம்பரமாய்ச் சுற்றுவார் என்றும் அவருடைய மாமியாருக்கு அந்திமகாலத்தில் எட்டு மாசம் சளைக் காமலும் முகம் கோணமலும் சுச்ரூஷை செய்து நல்ல பேர் வாங்கினர் என்றும் கேள்விப்பட்டேன்.

ரா: இவ்வளவெல்லாம் கேள்விப்பட்டவள் இப்போது ஏன் அம்மாவோடு சண்டை போடுகிருய்? அம்மா இருப்பதால் உனக்கு வீட்டுக் காரியங்கள் செய்ய அநுகூலமாயிருக்கா, இல்லையா?

ப: அநுகூலந்தான். அம்மா இல்லாவிட்டால் குழந்தைகளை வைத்துக்கொண்டு என்னமாகக் காரியம் செய்வேன்? நீங்களோ செவ்வையில்லை. சாயங்காலமானல் சீட்டுக் கச்சேரி, காலையில் 'ந்யூஸ் பேபர்', போதாக்குறைக்கு 'ரேடியோ' ஓர் இளையாளாச்சு. ஒரு துரும்பை அந்தண்டை எடுத்து வைப்பீர்களோ?

ரா: அம்மாவைப் பத்திக் கேட்டால் என்மேல் பாய்ந்து விட்டாயே. சரி, இவ்வளவு அநுகூலமா யிருக்கச்சே எதனல் அவளை உனக்குப் பிடிக்கவில்லை?

ப: எல்லாம் உங்களால்தான். ஸ்வய புத்தியினல் நீங்கள் ஒரு காரியமும் செய்வதில்லை. எல்லாவற்றிற்கும் அம்மாவைக் கேட்க வேண்டும். அதனல்தான் அவருக்கு மாட்டுப்பெண் என்றல் அபிமானம் இல்லை. எதற்கும் குற்றம் கண்டுபிடிக்கிருர்.

ரா: இதென்ன விசித்திரமா யிருக்கே! அம்மாவைக் கேட்டால் நீ சிறந்த பெண், அழகி, குயிலிசையாள், ஆனல் வாய் ஜாஸ்தி என்கிருள். உன்னைக் கேட்டால் மாமியார் இருப்பது ரொம்ப அநுகூலமா யிருக்கு; ஆனல் வாய் தௌஷ்டியம் என்கிருய். அதோடு இருவரும் நான்தான் உங்களுடைய தௌஷ்டியத்திற்குக் காரணம் என்கிறீர்கள்.

அ:
ப: } ஆமாம்.

ரா: சரிதான். இருவரும் என்மேல் பாய்கிறீர்களே! நான் வாயில்லாதவன். உங்களுடைய சண்டைக்குள் தலையிடக்கூடாதென்று பக்ஷபாதமின்றிப் பட்டதும் படாததுமாய் நான் பாட்டுக்கு இருக்கேன்.

அ: அதைத்தாண்டா நானும் சொல்கிறேன். அம்மாவாச்சே என்ற அபிமானமிருக்கோ? பெற்றெடுத்து வளர்த்ததற்குப் பயன் என்ன? ஒண்ணையும் கவனிக்காமல் பற்றில்லாதவனாய் இருக்கே! வீட்டில் என்ன நடக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டாமா?

ப: நானும் அதைத்தான் சொல்லுகிறேன். எல்லாருடைய ஆத்துக்காரர்போல் இருக்கிறீர்களா நீங்கள்?

ரா: ஏன்?

ப: போதுமே; ரகஸ்யமா உங்களிடம் ஒரு விஷயம் சொன்னால் உடனே அதை அம்மாவிடம் ஒப்பித்துவிடுகிறீர்கள்.

அ: இங்கேயும் அதேதாண்டீ. நான் ஒரு விஷயம் சொன்னால் அன்று ராத்திரியே அதை உன்னிடம் பாடம் ஒப்பித்துவிடுகிறான். இவனை நம்பி ஒரு ரகஸ்யமும் சொல்ல முடியறதில்லை.

ரா: ரகஸ்யம் என்ன வேண்டியிருக்கு? இந்தா, உங்கள் எதிரிலேயே உங்களைப்பற்றி நான் எண்ணியிருப்பதையெல்லாம் சொல்லிவிடுகிறேன். ஒரு ரகஸ்யமும் வேண்டாம். சொல்லட்டுமா?

அ: என்ன சொல்லப் போகிறாய் என்பது எனக்குத் தெரியும். அகமுடையாள் உரையேத்தி வெச்சிருப்பதுதானே?

ப: என்னைப்பத்தி என்ன ஸ்வயமாகச் சொல்லப் போகிறீர்கள்? எல்லாம் அம்மா குறைகூறி யிருப்பதுதானே?

ரா: அதெல்லாம் இல்லை. உங்களைப்பற்றி நானாகக் கண்டறிந்த உண்மைக் குணங்கள். கேளுங்கோ: முதலில் யாரை எடுத்துக்கொள்வோம்?

அ: முன்போல் பத்மாவையே எடுத்துக்கோயேன்.

ரா: இல்லை; இந்தத் தரம் உன்னைப்பத்தித்தான் முதலில் பேசப் போகிறேன். அம்மா எப்படிப்பட்டவள் தெரியுமா? பிறந்தகத்தில் அருமையாய் வளர்ந்தவள்; புக்ககத்தில் நல்ல பெயர்பெத்தவள். மாமியாருக்குக் கரும்பு, ஆத்துக்காரருக்குத் தேன், பிள்ளைக்குக் கற்கண்டு.

ப: போதுமே!

ரா: குறுக்கே பேசாதே! நீ என்ன கண்டே, எங்கம்மாவைப் பத்தி? நீ நேத்திக்கு வந்த பெண்.

அ: ஆமாண்டீ! இப்படியேதான் எப்பவும் இருந்தேன் என்று எண்ணினாயோ? தெரிஞ்சவா யாரை வேணுமானாலும் கேட்டுப் பார். என்னுடைய பிறந்தகத்தில் விசாரி. குட்டியைப்போல் பெண் உண்டோ என்பார்கள். புக்ககத்தில் குட்டியைப்போல் மாட்டுப் பெண் உண்டோ என்று எல்லாரும் சொல்லுவார்கள்.

ப: ஆனால், உங்களைப்போல் மாமியார் உண்டோ என்று இன்னும் ஒருவரும் சொன்னதாகத் தெரியல்லையே.

அ: நீ சொல்லாவிட்டால் ஒருவரும் சொல்ல மாட்டார்களா? பேஷாச் சொல்லுவா. யாரைச் சொல்லச் சொல்லணும்?

ப: ஏதோ, உங்களுடைய பிள்ளையைத்தான் சொல்லச் சொல்லுங்கோ, பார்ப்போம்.

அ: நீ பார்க்கிறதென்ன? ஏண்டா ராமு, என்ன சொல்லறே?

ரா: நான் அதே விஷயத்திற்கு வருமுன் நீங்கள் தர்க்கம் பேச ஆரம்பித்துவிட்டீர்களே.

ப: உங்கள் அம்மா நல்ல மாமியார் என்று மனசாரச் சொல்லுங்கோ பார்க்கலாம்.

அ: பேஷாச் சொல்லுவன். சொல்லேண்டா.

ரா: சொல்ல வேண்டியதை யெல்லாம் சொல்லியாச்சு அம்மா. நீ பெண் ஸ்தானத்தில் திலகமாய் விளங்கினாய். மாட்டுப் பெண் ஸ்தானத்தில் வைடூரியமா யிருந்தாய். ஆனால், மாமியார் என்ற ரீதியில் மரக்கலங்கூட இல்லை, அம்மா.

அ: என்னடா, அப்படி நான் பொல்லாத மாமியாராய் விட்டேன்! உன் அகமுடையாள் கையைத் தோசைக் கல்லில் வெச்சுத் தேச்சேனா? அல்லது அவளுடைய காப்பியில் தண்ணியைக் கலந்தேனா? அல்லது காரியத்தைத்தான் முதுகு ஒடியும்படி செய்யச் சொன்னேனா? என்ன செய்தேன் சொல்லு.

ரா: இந்தக் குற்றங்கள் ஒண்ணும் நீ செய்யவில்லை. உன்னிடம் இருப்பது ஒரே குற்றந்தான். எப்பவும் பத்மாவின் மேல் குறை கூறிக்கொண் டிருக்காயே அதுதான். பத்மாவின் பிறந்தகத்தைப்பற்றி இழிவாகப் பேசுவது, ஆறுமாசத்திற்கு இது செய்யவில்லை, சாந்திக் கல்யாணத்துக்கு அது செய்யவில்லை என்று ஏதாவது குறை கூறிக்கொண்டே இருக்கயோன்னோ அதுதான்.

அ: இதெல்லாம் நான் சொல்லாமல் யார் சொல்லுவா? நான் மாமியாரா, மண்ணாங்கட்டியா?

ரா: இரண்டும் இல்லை, அம்மா. நீ எனக்கு அம்மா, பத்மாவுக்கும் அம்மா.

அ: என்ன?

ரா: அதுதான் நீ அறிந்து கொள்ளாத ரகஸ்யம். பத்மா உன்னுடைய பெண்ணாயிருந்தால் அவள் மேல் குற்றம் சொல்லிக் கொண்டிருப்பாயா? மாட்டாய்; அவளிடம் இருக்கும் தோஷங்களைப் பொருட்படுத்த மாட்டாய். அவளைப் பிரியமாகவும் விச்வாஸமாகவும் வைத்துக்கொண் டிருப்பாய். மறு நிமிஷமே வீடு மலர்ச்சியுடன் பிரகாசமாயிருக்கும்.

அ: அப்பா, போதும் எனக்குச் சமத்து சொல்லிக் கொடுப்பது? இவ்வளவு வருஷங்களாக நான் நல்ல பேர் வாங்கியாச்சு. இனிமேல் நீயாகட்டும், உன் அகமுடையாளாகட்டும் என்ன சொன்னாலும் அக்கறையில்லை. என்னைப்போல் அவள் குடித்தனம் பண்ணிப் பேர் வாங்கினால் போதும்.

ரா: அதைத்தான் அம்மா நான் சொல்லுகிறேன்; நல்ல பேர் வரணும் நல்ல பேர் வரணும் என்று நீ இவ்வளவு நாள் உன்னுடைய இயற்கைக்கு விலக்காகப் பயந்து, தணிந்து நடந்து பெயர் பெற்றுக் கொண்டாய். இப்போது பத்மாவும் உன்னைப் போலவே இருக்கணும் என்கிறாய். அது முடியுமோ? உங்கள் இருவருக்கும் ஒரு தலைமுறை வித்தியாசம். ஆகையால் நடை உடை பாவனைகளில் உனக்கும் அவளுக்கும் மாறுதல்கள் இருக்கத்தானே செய்யும்? அதற்கெல்லாம் கோபித்துக்கொண்டு கைகேயி மாதிரி படுத்துக் கொண்டு பட்டினி யிருப்பாளோ?

அ: உன்னுடைய ஆராய்ச்சி போதும் என்கிறேனே. 'கிளப்' புக்குப் போய்ச் சீட்டாடிவிட்டு வழக்கப்படி ஒன்பது மணிக்கு மேல் வா. இங்கே இருந்துகொண்டு என்னோடு வாயாடாதே.

ரா: இரு, இன்னும் ஒரு பாகம் பாக்கியிருக்கே. பத்மாவைப்பற்றி இன்னும் என்னுடைய ஆராய்ச்சி அநுபவத்தை விஸ்தரிக்கவில்லையே.

அ: அதற்கு இப்போது என்ன அவசரம்? ராத்திரி பூராவும் அவளுடைய பெருமையைச் சொல்லிக்கொண் டிரேன்.

ரா: அவளுடைய பெருமையைப்பற்றி முன்னமேயே கூறி விட்டேன்.

ப: அதாவது?

ரா மூக்கும், முழியும், சாரீரமுந்தான் உனது பெருமை.

ப: என்ன அவ்வளவு சுருக்கமாகச் சொல்லி விட்டீர்கள். அம்மாவை மட்டும் கரும்பு, தேன், கற்கண்டு என்றெல்லாம் விஸ்தரிச்சீர்களே! அப்படி என்னைப்பத்தியும் சொல்லுங்கோ.

ரா: சரி; பத்மா, பிறந்தகத்தில் நீயும் அருமையாகத்தான் வளர்ந்தாய். ஆனால் எல்லா மாட்டுப் பெண்களும் பிறந்தகத்தில் அருமையாக வளர்ந்ததாகச் சொல்லிக்கிறார்கள். நீ கொஞ்சம் படித்தவள். ஆனால், இந்தக் காலத்தில் யார்தான் படிக்கவில்லை? நீ கணக்கில் ரொம்பக் கெட்டிக்காரி என்று உங்கப்பா சிலாகித்தார். ஆனால், வீட்டில் வண்ணான் கணக்கையும், பால் கணக்கையும் நான் தான் போடவேண்டி யிருக்கிறது. ஸங்கீதம் என்றால் உனக்கு ரொம்ப இஷ்டம் என்று சொன்னார்கள். இப்பவெல்லாம் என் காதில் படும் ஸங்கீதம் எது தெரியுமா? கிட்டுவை நீ அருமையாய் அழைக்கும் பதங்கள், "கட்டேல போறவனே, நாசமாய்ப் போறவனே" என்பவைகள். ரொம்பக் கலகலப்பாய்ப் பேசுபவள் என்று சொன்னார்கள். அதன் பலன் என்ன தெரியுமா? ஊரில் பாதிப் பேருடன் உனக்குப் பேச்சு வார்த்தையே இல்லை.

ஆனாலும் என்மட்டில் நல்லவள்தான் நீ. முதல்தரமான மனைவி என்று சொல்லுவேன். ஆனால், மாட்டுப்பெண் என்ற தோரணையில் உனக்கு மார்க்குப் பூஜ்யம்.

ப: நான் என்ன அப்படித் துஷ்ட மாட்டுப்பெண்ணா யிருக்கேன்? மாமியாரை வெரட்டிவிட்டேனா? அல்லது வைரமாய்

இழைச்சுக்கணும் என்கிறேனா? அல்லது அடிக்கடி பொறந்தாத்துக்குப் போகணும் என்று உங்களை வற்புறுத்துகிறேனா?

ரா: இல்லை. இவைகளொன்றும் உன் குற்றமில்லை. ஆயினும் உனக்கு நல்ல மாட்டுப்பெண் என்ற பெயர் வராதது ஏன்? உனக்குச் சுதந்தரத்தில் அபரிமித வாஞ்சை. பெயர் வாங்கணும் என்ற கர்நாடக ஆற்றல் உனக்கு இல்லை. உள்ளதை ஒளிக்க மாட்டாய். உடைத்துத்தான் பேசுவாய். அதோடு இன்னுமொரு குணம் உன்னிடம் உண்டு. பிறருடைய குணங்களில் நீ தோஷத்தையே சட்டென்று காண்கிறாய். விசேஷத்தைப் பாராட்டுவதில்லை. உதாரணமாக ஜலஜா மாமி மாய்மாலக்காரி என்பதுதான் உனக்குப் புலப்படுகிறது. அவள் வீணை வாசிப்பதில் கைதேர்ந்தவள் என்பது உனக்குத் தோன்றுவதில்லை. கமலினி கலகக்காரி என்பதுதான் உனக்குப் புலப்படுகிறது. குடும்ப நிர்வாகத்தில் திறமையுடையவள் என்பது தோன்றுகிறதா? அம்மாவிடமும் நீ அப்படியேதான் இருக்கிறாய். அவளுடைய குற்றங்களை நீ பெரிது பண்ணுகிறாய். நற்குணங்களை நீ பாராட்டுவதில்லை. பத்மா, இவைதாம் உன்னுடைய குற்றங்கள். பூர்ண சந்திரனைப் பார் என்றால் உடனே நீ, "என்ன, சந்திரன் பாதிக்கு மேல் களங்கமாயிருக்கே!" என்பாய். வாழ்க்கையில் சுகம் வேண்டுமாயின் பிறருடைய குற்றங்களை அதிகமாகப் பொருட்படுத்தக் கூடாது. நற்குணங்களை அறிந்து பாராட்ட வேண்டும்.

ப: போதும், எனக்குப் புத்தி சொன்னதெல்லாம். இதுதானா நீங்கள் என்னை இவ்வளவு நாட்களாய்த் தெரிஞ்சுகொண்டது? நான் என்றால் அப்படித்தான் இருக்கும் உங்களுக்கு. நானும் ஒரு பித்துக்குள்ளி, உங்களுடைய பேச்சையெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கேன். வேறொருத்தி வரப்போறா பாருங்கோ! உங்களைப் பேச்சு மூச்சு விடாமல் அடக்கி வைத்துக் கொண்டிருக்கப் போறாள்; நான் சொன்னேன்னு பாருங்களேன்.

ரா: வேறொருத்தி, யாரு?

ப: வேறொரு அகமுடையாள்.

ரா: எதற்காக வேறொரு அகமுடையாள்? நீ ஒருத்தி போராதா?

ப: நான் எதற்கு? நான்தான் செத்துப் போய்விடுவேனே!

ரா: நீ எதற்காகச் செத்துப் போகணும்?

ப: வேறு நான் என்ன செய்கிறது?

அ: போருண்டா, ராமு. சிறுசை எதற்காக ஹிம்ஸிக்கிறாய்? சாயந்தர வேளையில் உனக்கு வீட்டில் என்ன வேலை? 'கிளப்'புக்குப் போயேன்.

ரா: சரி, அம்மா போறேன். ஆனால் நான் சொன்னதையெல்லாம் இருவரும் யோசித்துப் பாருங்கோ.

(போகிறான்.)

[ திரை ]

1

# டெல்லி புறப்பாடு

**பாத்திரங்கள்**

மணி
பாப்பா
சீனு
வந்தவர்
கிட்டு

மணி, டெல்லியில் ஓர் உத்தியோகஸ்தன். வேலை சம்பந்தமாகச் சென்னைக்குப் புறப்படத் தயார் செய்து கொண்டிருக்கிறன். பாப்பா அவனுடைய மனைவி.

[‘மேரா ஸலாம் லேஜா’ என்னும் உம்ராஸீய பேகத்தின் ‘ரிகார்டு.’]

மணி: *எல்லாவற்றையும் எடுத்து வெச்சிருக்கயா, பாப்பா நீ?*
பாப்பா: *வெச்சிருக்கேன்.*
ம: *என்ன என்ன வெச்சிருக்கே?*
பா: *உங்களுக்கு வேண்டியதெல்லாம்.*
ம: *எட்டு ஷர்டு?*
பா: *ஆமாம்.*
ம: *எட்டுப் பனியன்?*
பா: *ஆமாம்.*
ம: *ஆறு வேஷ்டிகள்?*
பா: *எல்லாம் வெச்சிருக்கேன் என்கிறேனே!*
ம: *ஆறு டவல்கள்?*
பா: *வெறும்மே கேட்டால் பதில் சொல்லமாட்டேன்.*
ம: *பாப்பாக் கண்ணுவின் ‘போட்டோ’?*
பா: *வெக்கவில்லை.*
ம: *ஏன் வைக்கவில்லை? எடுத்துவை.*
பா: *அதிகாரத்தைப் பார்! வெக்கமாட்டேன்.*

ம: ஏன் மாட்டாய்?

பா: என்னுடைய 'போட்டோ' எதற்கு?

ம: இரண்டு மாசம் உன்னை விட்டுப் பிரிந்து இருக்கப் போகிறேனே; ஆறுதலுக்கு என்ன இருக்கு? 'போட்டோ'தானே?

பா: அது ஒண்ணும் இல்லை.

ம: பின்னே எது?

பா: நீங்களே யோசித்துப் பாருங்கோ.

ம: யோசிக்கிறதற்கு இப்போது அவகாசம் ஏது அம்மா?.... லீவுலே போகிறதாக இருந்தால் உன்னையும் அழைத்துக்கொண்டு போவேன். இது கவர்ண்மெண்டு விஷயமோன்னோ?

பா: நான் உங்களுடன் கூட வரல்லையே என்று எனக்குக் கோபம் இல்லை.

ம: பின் எதற்காகக் கோபம்? அதைத்தான் சொல்லேன்.

பா: நான் ஏன் சொல்லணும்? உங்களுக்காத் தெரியாதோ? பட்டணம் போவது தெரிஞ்சதும் தெரியாததுமா யிருக்கச்சே நீங்கள்தானே அவாத்துக்குப் போய், 'அழைச்சுண்டு போகிறேன்' என்றீர்கள்?

ம: சீனு அகமுடையாளையா? ஆமாம், அவளுடைய தங்கை சீமந்தத்திற்கு அவள் ஊருக்குப் போவதாயிருந்தாளோன்னோ?

பா: அடுத்த வாரம் போவதாகன்னா சொன்னாள்?

ம: அதற்குள் நான் பட்டணம் போவது தெரிந்தது.

பா: தெரிந்ததோ? நீங்கள்தான் சொல்லிக் கொண்டீர்கள்.

ம: சொன்னால் என்ன? நல்லதுதானே? துணை கிடைத்தது.

பா: துணை யாருக்கு? உங்களுக்கா?

ம: அவளுக்குத் துணையாச்சு, எனக்கும் அது ஒரு பெருமை என்று வைத்துக்கொள்ளேன்.

பா: பெருமை என்ன? பிறத்தியார் அகமுடையாளை அழைத்துக்கொண்டு போவதில் உங்களுக்கு என்ன பெருமை?

ம: பெருமை என்றால் பெருமை என்று அர்த்தமா?

பா: பின் என்ன அர்த்தம்? அதையுந்தான் சொல்லுங்களேன்.

ம: நீயே சொல்லு. யமன்களாட்டம் நாலைந்து குழந்தைகளோடு வந்து ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் 'வெந்நீர்த் தண்ணியைக் கொண்டுவாங்கோ, காய்ச்சின பாலைக் கொண்டு வாங்கோ' என்று உபத்திரவம் பண்ணும் அவிசல்களைக் காட்டிலும் பத்மாவை அழைத்துக்கொண்டு போவது தேவலையில்லையா? 'பத்மா அடக்கமுடையவள், தங்கமானவள்' என்று நீயே எத்தனையோ தரம் சொல்லி யிருக்கயே....சரி; 'போட்டோ'வுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?

பா: என்னுடைய 'போட்டோ' எதற்கு? பத்மாவைப் பார்த்துக்கொண்டே பட்டணம் போய்ச் சேருங்கள்.

ம: அசடே, நீ என்மேல் சந்தேகப்படலாமோ? இது தெரிஞ்சால் சீனு என்ன நினைத்துக்கொள்வான்? அப்புறம் பத்மாவை அனுப்பமாட்டான்.

பா: அனுப்பவேண்டாமே, நல்லதாச்சு.

ம: அதனுல் உனக்கென்ன லாபம்?

பா: எனக்கொன்றும் லாபம் இல்லை. உங்களுக்குத்தான் புத்தி வரும். உங்களுக்கு ஒரே நிலையான மனசு இல்லை என்று எனக்குத் தெரியுமே. அழகான பொம்மனுட்டியைப் பார்த்து விட்டால் 'கூ, கூ' என்று குதிப்பீர்களே.

['மணி' என்று கூப்பிட்டுக்கொண்டு சீனு வருகிறுன்.]

ம: சீனு, வா.

சீனு: என்ன, சாமான் எல்லாம் கட்டியாய்விட்டதா?

ம: ஆயிண்டு இருக்கப்பா. நீ என்ன முடித்து விட்டயா? ஆத்துக்காரியை என்ன செய்யப் போகிறுய்? இங்கே கொண்டு வந்து விட்டாலும் விடு; அல்லது நீயே ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு வந்தாலும் வா.

சீ: அதைப்பற்றித்தான், மணி, சொல்ல வந்தேன்.

ம: என்ன?

சீ: அவளை இன்னிக்கு அனுப்ப ஸௌகரியப் படவில்லை. கோபாலன் போகிறுனுமே அடுத்த வாரம், அவனுடன் அனுப்ப லாம் என்றிருக்கேன்; இதைத்தான் சொல்ல வந்தேன். சரி, உனக்குக் கொஞ்சம் உபத்திரவம் குறைஞ்சுது.

ம: உபத்திரவம் என்ன சீனு? அழைத்துக்கொண்டு போவதில் எனக்கென்ன கஷ்டம்? சின்னக் குழந்தையா என்னைக் கஷ்டப் படுத்துவதற்கு?

சீ: சின்னக் குழந்தை என்றவுடன் ஞாபகம் வருகிறது, மணி. கைலாசமையர் அகமுடையாளையும் குழந்தைகளையும் இன்று ஊருக்கு அனுப்புகிறுராம். ''உன்னுடைய அகமுடையாளுடன் இவாளையும் சற்றுக் கவனிக்கச் சொல்லு'' என்று கூறி உன்னிடம் சொல்லச் சொன்னுர். ஸ்டேஷனுக்கு வருவார், உன்னிடமும் சொல்லுவார்.

ம: இன்னிக்கே அனுப்புகிறுரா, அவர்?

சீ: ஆமாம், ஏதோ கல்யாணத்திற்காகப் போகிறுர்களாம்... முக்கியமானது என்னன்னு குழந்தைகள் கொஞ்சம் துஷ்டைகளாம். கவனிச்சுக்கணுமாம்....சரி, நான் வரேன். உன்னுடைய காரியத் தைப் பார் நீ.

[போகிறுன்.]

ம: பாப்பா.......பாப்பா !

பா: ஏன் ?

ம: கேட்டாயா சமாசாரத்தை ?

பா: என்ன ?

ம: குதிரை என்ன பண்ணித்தாம் ?

பா: எந்தக் குதிரை ?

ம: ஏறி இருந்தவனைக் கிழே தள்ளித்தே, அந்தக் குதிரை !

பா: குழியையும் பறிச்சுதாம்.

ம: அதேதாண்டியம்மா !

பா: இப்போது என்ன அதற்கு ? சீனு வந்திருந்தாரே, என்ன சொன்னார் ?

ம: பத்மாவுக்கு இன்னிக்குப் புறப்பட அஸௌகரியமாம்.

பா: ஓ......சரிதான். இது நாள்தான்.

ம: அது போகட்டும். பத்மா வராதது அவ்வளவு மோசம் இல்லை. கைலாசமையர் மனைவி, குழந்தைகள் ஸமேதமாய், எழுந்தருளுகிறாளாம். அவர்களை நான் கொஞ்சம் கவனிச்சுக்கணுமாம்.

பா: ஐயையோ, பார்வதி மாமியா ?

ம: ஐயையோ என்ன ?

பா: அந்த மாமி காளீன்னு ! படை சண்டை போடுவரே. குழந்தைகள் யமன்கள். உங்களுக்கு இரண்டு நாள் பிரயாணமும் வேலை சரியாயிருக்கும்.

ம: கெட்ட எண்ணக்காரி !

பா: யாரைச் சொல்லுகிறீர்கள் ?

ம: உன்னைத்தான்.

பா: நான் என்ன செய்தேன் ?

ம: பத்மாவை அழைச்சுண்டு போவது பொறுக்கல்லையோன்னோ உனக்கு ? இரு, திரும்பி வரச்சே வேணுமானால் நாலு நாள் லீவு எடுத்துக் கொண்டாவது, பட்டணத்தில் தங்கிப் பத்மாவை அழைச்சுண்டு வரேன்.

பா: அதெல்லாம் நடக்காது.

ம: ஏன் ?

பா: இப்போது பட்டணம் போனால் பத்மா ஸிம்லாவுக்குத்தான் திரும்பி வருவாள்.

['ராமஸ்வாமி ஐயங்கார்' என்று வாசலில் ஒருவர் கூப்பிடுகிறார்.]

ம: யாரு ?

வந்தவர்: நீங்கள் தான் ராமஸ்வாமி ஐயங்காரோ ?

ம: ஆமாம்.

வ: இன்னிக்குப் பட்டணம் போகிறீர்களாமே ?

ம: ஆமாம். விஷயம் என்ன ?

வ: ராமசந்திரையர் இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னார். தயவு பண்ணிப் பட்டணத்தில் நைனியப்பன் தெருவில் அவருடைய தங்கையிடம் சேர்க்கச் சொன்னார்.

ம: என்ன அது ?

வ: பெரிய ஸாமான் ஒன்றும் இல்லை. ஒரு டின் கடுகெண்ணெய். கில் வாயுவுக்கு நல்லது என்று அனுப்பிச்சிருக்கார். பட்டணத்தில் கிடைகிறதில்லையோன்னோ ? என்ன ஸார், எடுத்துக் கொண்டு போவதற்குக் கஷ்டமா யிருக்குமா ? அப்படின்னு சொல்லி விடுங்கோ.

ம: கஷ்டம் என்ன பிரமாதம் ? கொண்டு போய்ச் சேர்க்கணும் என்றால் சேர்க்கிறேன்.

வ: சந்தோஷம், இதைக் கொஞ்சம் கவனிச்சுக்கோங்கோ. சரியாக ஸீல் பண்ண அவகாசமில்லை என்று சொல்லச் சொன்னார். ......நான் வரேன் ஸார்.

[போகிறார்.]

ம: பாப்பாப் பொண்ணே, இங்கே வா.

பா: ஏன் ? ஒரு நிமிஷங்கூடத் தனியாக விடமாட்டேன் என்கிறேளே !

ம: என்ன செய்துகொண் டிருக்கே ?

பா: வறுவலுக்கு உப்பும் மிளகாய்ப்பொடியும் கலந்துகொண் டிருந்தேன்.

ம: நல்லது; அதோடு கொஞ்சம் கடுகெண்ணெயையும் சேர்த்துக் கல.

பா: வறுவலுக்கா ? கடுகெண்ணெயையா ? நன்றாயிருக்கு நீங்கள் சொல்லறது !

ம: பின்னே என்ன செய்கிறது ? 'அடுத்துவந்த என்னைத் தள்ளலாகாது' என்று கடுகெண்ணெய் வந்திருக்கே, இதோ பார்.

பா: எங்கேயிருந்து வந்தது ?

ம: ராமசந்திரையரிட மிருந்து, அவர் ஸகோதரிக்கு ம-ா-ா-ஸ்ரீ. ராமஸ்வாமி ஐயங்கார் மூலம் சேர்ப்பிக்க வேண்டும்.

பா: ஏன் ஒப்புக்கொண்டீர்கள் ? 'சாமான் நிறைய இருக்கு, கொண்டுபோகச் சௌகரியப்படாது' என்கிறதுதானே ?

ம: காளிக்கே முகம் கோணாதவன் கடுகெண்ணெய்க்குக் கசகலாமா ?

['மணி' என்று கூப்பிட்டுக்கொண்டு கிட்டு வருகிறான்.]

கிட்டு: ஏண்டா மணி.

ம: என்ன கிட்டு, என்ன சமாசாரம் ?

கி: இன்னிக்குப் பட்டணம் போறயாமே?

ம: ஆமாம். ஊருக்குப் போகிறேன். (விரல் விட்டு எண்ணி) காளியாச்சு,— அதாவது கைலாசமையர் சம்சாரம் — மேற்படியாரின் குழந்தைகளாச்சு, ஒரு 'டின்' கடுகெண்ணெயாச்சு. நீ என்ன கொண்டு வந்திருக்கிறாய்? சொல்லு.

கி: மணி, எனக்குப் பிறத்தியாரை உபத்திரவம் செய்கிறது கொஞ்சங்கூடப் பிடிக்கிறதில்லே. அதுவும் ஆபீஸ் வேலையாய்ப் போகிறாயே, 'கமிஷன்' ஒன்றும் கொடுக்கப்படாது என்றுதான் இருந்தேன்.

ம: சரிதான், விஷயத்தைச் சொல்லு.

கி: வீட்டில் இருக்கவிடேன் என்கிறாள் போ. 'உங்களைப் போலவா? அவர் தங்கமானவராச்சே. எட்டு ஊருக்கு ஒத்தாசை செய்வரே. போய் ஒரு வார்த்தை கேட்டுட்டு வாங்கோ' என்கிறாள் என் ஆத்துக்காரி. நான் வராவிட்டால் அவளே வந்துவிடுவாளாம்!

ம: விஷயம் என்ன?

கி: ஒண்ணுமில்லே. இதை மயிலாப்பூரில் அரிசிக்காரத் தெருவில் இருக்கும் எங்க மன்னியிடம் சேர்த்துவிடணும்.

ம: மூட்டை ஏது பெரிசா யிருக்கே?

கி: இல்லேடா, பரிமாணம் (volume) தான் அதிகமேயொழிய அதனுடைய நிறை (weight) குறைச்சல்தான்.

ம: மூட்டையில் என்ன இருக்கு?

கி: பழம் புடவைகள்.

ம: இதோ பார், கிட்டு, என்னிடம் பொய் கிய [illegible] மூட்டைக்குள் வேறு ஏதாவது இருக்கு என்று தெரிஞ்சுதோ, பழம் புடைவைகளை ஹோஷங்காபாத்தில் நர்மதையில் சேர்த்து விட்டு உள்ளே இருப்பதை அடியேன் ஸ்வீகரித்துக்கொள்வேன். ஜாக்கிரதை.

கி: இல்லேடா, இல்லே. பழம் புடைவைகள்தாம்.

ம: அண்ணா இஞ்சினியர் என்கிறாய்; மன்னிக்கு எதற்கு உன் அகமுடையாளின் பழம் புடைவைகள்?

கி: இல்லேடா. பழம் புடைவைகளைக் கொடுத்துப் புதுப பாத்திரம் வாங்கலாமாம். இங்கே கொடுப்பதைவிடப் பட்டணத்தில் அதிகமாகப் பாத்திரங்கள் தராளும். மன்னிக்கு இதில் ரொம்பப் பரிசயம் உண்டாம். கொண்டுபோக முடியுமா, மணி? 'நீங்களானால் பழம் புடைவைகளைக் கொண்டு போனால் அந்தஸ்து குறைச்சல் என்பீர்கள். பாப்பா ஆத்துக்காரர் ஸாத்வீகம். கட்டாயம் கொண்டுபோய்க் கொடுப்பர்' என்கிறாள் என் ஆத்துக்காரி. இல்லாட்டா நான் வந்திருக்கவே மாட்டேன். என்ன சொல்லறே?

ம: சரி, வை; கொண்டுபோய்க் கொடுக்கிறேன். ஆனால், இதை வேறொருவருக்கும் சொல்லாதே. அகமுடையாளையும் சொல்லச் சொல்லாதே. யாருக்காவது தெரிஞ்சுதோ நான் ரெயில் ஏறுவதற்கு முன், என்னிடம் பழம் புடைவைகளாக வந்து குமிஞ்சுவிடும்.

கி: ரொம்ப 'தாங்ஸ்' (thanks). 'பார்த்தயளா? நான் சொன்னேனே' என்பாள் என் ஆத்துக்காரி. ஞாபகமிருக்கட்டும், மணி. திரும்பி வரச்சே பாத்திரங்களையும் கொண்டுவந்துவிடு.

[போகிறான்.]

ம: பாப்பா!

பா: என்ன?

ம: உன்னுடைய பழம்புடைவைகளை நீ என்ன செய்யறே?

பா: கொடுத்துப் பாத்திரம் வாங்குகிறேன்.

ம: ஒரு புடைவைக்கு எத்தனை பாத்திரங்கள்?

பா: அதெப்படிச் சொல்ல முடியும்? புடைவையைப் பார்த்துத்தான் தருவன். பாத்திரத்தின் விலைக்குத் தகுந்தாப் போலத் தான். ஏன் கேட்கிறேள்?

ம: இதோ பார். இது ஒரு பழம் புடைவை மூட்டை. இதுக்கு எத்தனை பாத்திரங்கள் கொடுப்பாய்?

பா: நான் ஏன் கொடுக்கிறேன்? கடைக்காரனா? எவ்வளவு சிரமப்பட்டு பேரம் பண்ணிப் பாத்திரங்களை வாங்கி யிருக்கேன், நன்னாக் கொடுப்பேனே!

ம: கொடுத்தால் ஒரு மூட்டை குறையுமே என்று பார்த்தேன்.

பா: மூட்டை யாருது?

ம: கிட்டு அகமுடையாளுடையது. அவளுடைய மன்னியிடம் பட்டணத்தில் கொடுக்க வேணுமாம். திரும்பி வரச்சே அங்கிருந்து பாத்திரங்களைக் கொண்டு வரணுமாம்.

பா: ஒப்புக்கொண்டு விட்டீர்களோன்னோ?

ம: பின் என்ன செய்கிறது?

பா: 'மாட்டேன்' என்று கண்டிப்பாய்ச் சொல்லி விடுகிறது தானே?

ம: எப்படிச் சொல்லறது? மேலும், 'பாப்பா ஆத்துக்காரர் ஸாத்வீகம். தங்கமானவர்' என்று சொல்லிக் கிட்டுவை அனுப்பினாள்.

பா: நன்னா அனுப்பினாள்!

ம: அவளை ஏன் சொல்லுகிறாய்? கடுகெண்ணெயைக் கொண்டு போகலாமானால் பழம்புடைவைகளை ஏன் கொண்டு போகக் கூடாது? சரி, பாப்பா, நீயும் ஏதாவது கொடேன், 'பரோப காரார்த்தம் இதம் சரீரம்.'

பா: சரி. நானும் ஏதாவது கொடுத்தனுப்பினால் தேவலே என்றுதான் தோணறது.

ம: அனுப்பேன்.

பா: எதை அனுப்பலாம் என்று யோசிக்கிறேன்.

ம: யோசிப்பானேன்? டெல்லி எருமை ரொம்பச் சிறந்ததாம். நிறையப் பால் கறக்கிறதாம். ஒண்ணு கொண்டுபோய் உன்னுடைய அக்காவின் வீட்டில் சேர்க்கட்டுமா?

பா: ஐயோ, பாவம்! நான் கொடுக்கப் போவது அவ்வளவு மோசமில்லே. இந்தாங்கோ; பெட்டியைத் திறவுங்கோ. என்னுடைய 'போட்டோ' வை வைக்கிறேன். இவ்வளவு துன்பத்திற்கு நடுவில் கொஞ்சம் ஆறுதலாயிருக்கட்டும். ('போட்டோ'வை எடுத்து வைக்கிறாள்.)

ம: அதை முதலிலேயே வெச்சிருந்தாயானால் ஒருவேளை இவ்வளவுக்கு வந்திருக்காதோ என்னவோ....! சரி, எல்லாம் தயாராயிருக்கோன்னோ? வண்டியைக் கூப்பிட்டுண்டு வரேன். ஊரில் யாராருக்கு என்ன என்ன சொல்லணுமோ எல்லாத்தையும் யோசித்து வெச்சுக்கோ. வண்டி தெரு திரும்பற மட்டும் சேதி சொல்லிண்டே இருக்காதே.

[போகிறான்.]

*

# 2

# சென்னை

**பாத்திரங்கள்**

சென்னைத் தேவதை
மணி
வருது
அம்மாஞ்சி
கடலூர்ச் சிற்றப்பா
நாணு

மணி சென்னைக்கு வந்து, தன் தம்பியின் வீட்டுக்குச் சென்று இரவில் அயர்ந்து தூங்குகிறான். கனவில் சென்னைத் தேவதையைக் காண்கிறான்.

[வீணையில் சங்கராபரண ராகத்தில் 'ஸகஜகுணராமா' என்ற கீர்த்தனை.]

சென்னைத் தேவதை: *மணி, தூக்கம் ரொம்பப் பலமா யிருக்கே !*

மணி: *(எழுந்திருந்து) நீயா? வா.*

செ: *மறந்துபோய் விட்டாயோ என்னவோ என்று பார்த்தேன்.*

ம: *உன்னை மறக்க முடியுமா? நாயுடுப்பேட்டை வரும்போதே நம்மூர் வந்துவிட்டோம் என்று உள்ளம் மகிழ்ந்தேனே! ஆனால் 'கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்'* (Grand Trunk Express) *. இன்றைக்கு இரண்டு மணி 'லேட்'. அதோடு இரண்டு நாள் சேர்ந்தாப்போல் பிரயாணமா ! அயர்ந்து தூங்கிப்போய் விட்டேன்...... என்ன, சௌக்கியமா?*

செ: *இருக்கேன். இந்தத் தரம் என்னிடம் கொஞ்ச நாள் இருப்பயா? அல்லது முன்போல் தெற்கே போகச்சேயும் வரச் சேயும் தங்கும் நேரந்தானே?*

ம: இல்லை. இந்தத் தரம் உன்னிடம் கொஞ்சம் நிதானிப்பேன். ஆறு நாட்களாவது இருப்பேன்.

செ: ஆறு வருஷம் தொடர்பு இருந்தவனுடன் இப்போது ஆறு நாள்தானு தங்குவாய்?

ம: அதாவது கிடைத்ததே என்று நான் திருப்தியடையும் போது நீ ஏன் பழைய நினைவுகளை மூட்டுகிறாய்? சரி, இந்த ஆறு நாட்களும் மழை பெய்யாமல் இருக்கச் சொல்லு. நான் துணி மணிகள் அதிகம் கொண்டுவரவில்லை. வண்ணானுக்குப் போடவும் அவகாசம் இல்லை.

செ: நன்றாயிருக்கே! கார்த்திகை மாசம் வந்துவிட்டு மழை பெய்யக்கூடாதாம்! கொட்டு கொட்டுன்னு அடை மழையாய்ப் பெய்யச் சொல்லுகிறேன்.

ம: எதற்காக? ஞாபகச் சின்னமாயிருக்க வேண்டுமென்றா?

செ: அப்படின்னா ம்ழையைத் தவிர உனக்கு என்னை ஞாபக மூட்ட ஒன்றுமில்லையா?

ம: மழையை ஏன் சேர்த்துக் கொள்கிறாய்? உன்னிடம் பெய்வதைக் காட்டிலும் அதிக மழை பெய்யும் இடங்கள் எனக்குப் பரிசயம் உண்டு. இப்போது உன்னை விட்டதும் காமரூபத்திற்குப் போய், சிர்ரபுஞ்சி கேள்விப்பட்டிருக்கிறாயா? அதற்குச் சமீபத்தில் இருக்கும் ஷில்லாங் என்னும் இடத்திற்குச் செல்லப் போகிறேன். ஆகையால் உன்னுடைய மழைக்கு நான் பயந்தவன் அல்ல.

செ: ஆனால் என்னை உனக்கு ஞாபகமூட்ட என்ன இருக்கு?

ம: எத்தனையோ இருக்கு; ஆறு வருஷத்துத் தொடர்பு அல்லவா? அதுவும் பால்யப் பருவத்திலே!

செ: என்ன, என்ன? சற்றுச் சொல்லேன் பார்ப்போம்.

ம: எதற்காக? உன்னை ஸ்தோத்திரம் செய்ய, சுமார் ஆறு லக்ஷம் ஜனங்கள் உன்னிடம் இருக்கிறார்களே! அவர்கள் போதாதா? நாடோடியாக வந்த என்னை ஏன் சொல்லச் சொல்கிறாய்?

செ: அவர்கள் கிடக்கிறார்கள். பழைய நாள் சிநேகிதமுள்ள நீ என்ன சொல்கிறாய் என்பதுதான் தெரிய வேண்டும். சொல்லு: என்னை உனக்கு நினைப்பூட்டுவது எது?

ம: கூவம்.

செ: அப்புறம்?

ம: உன்னுடைய வெப்பம். நாளுக்கு மூன்று 'ஷர்ட்டு'கள் மாத்திண்டாலும் போதாமல், தண்ணியாக் கொட்டிக்கொண்டு கண்டவர்மேல் எரிஞ்சு விழச் சொல்லுகிறதே, அந்த வெப்பம்!

செ: அப்புறம்?

ம: உன்னுடைய அலாதி பாஷை. ரிக்ஷாவை, 'இஸ்து கிட்டு'ப் போகிறவன், கண்ட இடத்தில் 'குந்தி'க்கிறவன், வீட்டைக் 'கொடக்கூலி'க்கு விடுபவன், வெறும்மெ இருப்பவனை 'ஸதாய்'க் கிறவன், 'அடாஸ்' பேரம் பண்ணி 'அமிஞ்சி'யில் அடித்துக் கொண்டு போகிறவன்.

செ: இவ்வளவுதானா? வேறு நல்ல விஷயம் ஒண்ணும் இல்லையா என்னிடம்?

ம: அவைகள் எல்லாருக்கும் தெரியுமே!

செ: நீதான் சற்றுச் சொல்லேன்.

ம: எதற்காக? உன்னுடைய ஸ்டான்லி பாலம் (Stanley viaduct), புது 'ஸெனேட் ஹால்', புது 'ஹிண்டு' ஆபீஸ் கட்டிடம், ரேடியோ நிலயம், 'எலெக்ட்ரிக் ரெயில்' இவைகளைப்பற்றி நானும் புகழ் பாட வேண்டுமோ?

செ: நான் இவைகளைப்பற்றிக் கேட்கவில்லை; இவை எல்லா ருக்கும் தெரிந்தவைகளே.

ம: பின் என்ன கேட்கிறாய்?

செ: எதற்காக நீ என்னைப் போற்றுகிறாய்? அதைச் சொல்லு.

ம: இவ்வளவு சொன்னேனே, உன்னைப் போற்றுகிறேன் என்று எண்ணினாய்?

செ: இல்லையா? நாயுடுப்பேட்டைக்கு வரும்போதே உள்ளம் மகிழ்ந்தேன் என்றாயே.

ம: அதுவா? அது உன்னுடைய குணங்களால் அல்ல.

செ: பின் எதனால்?

ம: உன்னுடன் சம்பந்தப்பட்ட என்னுடைய நினைவுகளால்.

செ: தற்புகழ்ச்சிக்காரனே, உன்னுடைய நினைவுகளைத்தான் சொல்லு.

ம: சரி, கேள்; இருபது வருஷங்களுக்குமுன் முதல்தரம் உன்னிடம் வந்தேன். வந்த தினம் சாயந்தரமே சமுத்திரக் கரைக்குச் சென்றேன். ஜலத்தின் அருகே போய் நின்றேன். என் கால்களுடன் வந்து வந்து சிற்றலைகள் சைத்யோபசாரம் செய்தன. சமீபத்தில் நிற்கும் கலாசாலை, பெருமை வாய்ந்த முகத்துடன், 'என்னிடம் வா. உன் அறிவை அதிகமாக்கி, உன் நோக்கத்தை விசாலமாக்கி, வாழ்க் கைக்கு ஒரு லக்ஷ்யம் கொடுக்கிறேன்' என்று அழைத்தது; அந்த நினைவு இன்னும் என்னுள்ளத்தில் பளிச்சென்று இருக்கிறது.

செ: இன்னும் என்ன நினைவுகள்?

ம: எவ்வளவோ இருக்கின்றன. அவைகளை இப்போது உன் னிடம் சொல்லிக்கொண்டிருந்தால் நான் எப்போது தூங்குகிறது?

செ: எல்லாவற்றையும் சொல்ல வேண்டாம்; ஒண்ணைமட்டும் சொல்லு, முக்கியமானது ஒண்ணு இருக்கே!

ம: அது என்ன? தெரிந்தவள்போலப் பேசுகிறுயே?

செ: தெரியும்.

ம: அப்படியாஞல் சொல்லு, பார்ப்போம்.

செ: தமயந்தி!

ம: உனக்குத் தெரியுமா? அது எங்களுக்குள் ஒரு ரகஸ்யமான விஷயமாச்சே. ஆமாம்; நாங்கள் சுமார் 120-பையன்கள் கலாசாலையில் படித்துக்கொண் டிருந்தோம். தமயந்தியுடன் ஐந்து பெண்கள் படித்துக்கொண் டிருந்தார்கள். ஆகையால் ஒரு பெண்ணுக்குச் சுமார் 20-பையன்களாக நாங்கள் இயற்கையாகவே பிரிந்துகொண் டோம். அந்தக் காலத்தில் கலாசாலையில் படிக்கும் பெண்கள் ஒரு புதுமையுடையவர்கள். நாங்கள் அந்தர் பூாவத்தில் பிரியம் கொண் டோம். ஆறு பெண்களையும் ஆறு கலைத் தெய்வங்களாக எண்ணிேனும். படிப்பில் உற்சாகம் அடைந்தோம். எனக்கு அது ஓர் அபூர்வ அநுபவமாயிருந்தது.

செ: பிறகு?

ம: ஒரு நாள் தமயந்தி இலக்கியத்தில் 10-க்கு 2-மார்க்கு வாங்கிஞள் என்று தெரிந்தது. அதிர்ச்சியடைந்தேன்.

செ: ஏன்?

ம: அழகுடைய பெண்ணுக்கு இலக்கியவன்மை இயற்கையாக உண்டு என்று நான் எண்ணியிருந்தேன்!

செ: பிறகு?

ம: ஏது, விடமாட்டாய் போலிருக்கே. பிறகு மார்க்குக் குறைச்சலாகக் கிடைத்ததற்குத் தமயந்தி கண்ணீர் விட்டாள் என்று கேள்விப்பட்டேன். பின்னும் அதிர்ச்சியடைந்தேன்!

செ: ஏன்?

ம: கலாசாலையில் படிக்கும் பெண் கண்ணீர் விடமாட்டாள் என்று எண்ணியிருந்தேன்.

செ: பிறகு?

ம: படிப்பு முடிந்து கலாசாலையை விட்ட பிறகு தமயந்தியிடம் முதல்தரம் ஐந்து நிமிஷம் பேச நேர்ந்தது; பின்னும் அதிர்ச்சி யடைந்தேன்!

செ: ஏன்?

ம: தமயந்திக்கும், கலாசாலை வாசனையேயறியாத என் அக்கா மஞ்சுளத்திற்கும் ஒரு வித்தியாசமும் இல்லை என்று தெரிந்தது.

செ: எப்படி?

ம: தமயந்திக்கும் இதர ஐந்து பெண்களுக்கும் அவ்வளவு காலமும் பரஸ்பரம் பேச்சு வார்த்தை இல்லையாம்; அவ்வளவு ஒற்றுமையாகப் படித்தார்களாம்!

செ: தமயந்தியைப்பற்றி இவ்வளவு உத்ஸாகமாகப் பேசுகிறுயே! அவளைக் கல்யாணம் பண்ணிக்கிறதுதானே?

ம: நன்ருய்க் கேட்டாய்! கல்யாணப் பெண் பார்க்கவா என்னை எங்க அப்பா கலாசாலைக்கு அனுப்பிஞர்? மேலும், அழகான பெண்களை எல்லாம் கல்யாணம் பண்ணிக்கொள்ள நான் என்ன நவீன அர்ஜுனஞ, அல்லது ஏதாவது ஸம்ஸ்தானத்து மகாராஜாவா? உத்தியோக வேட்டைக்குப் போகிறவனுக்குக் கல்யாணம் எதற்கு?

செ: உத்தியோகம் என்றவுடன் ஞாபகம் வருகிறது. கேட்க வேண்டுமென்றிருந்தேன். நீ என்ன உத்தியோகத்தில் இருக்கே?

ம: வடக்கே கவர்ண்மெண்டு உத்தியோகம்.

செ: என்ன சம்பளம்?

ம: கேட்டு விட்டாயோன்னே? எங்கே இத்தனை நாழி கேட்கவில்லையே என்று ஆச்சரியப்பட்டேன். இதோ பார். இத்தனை நாழி நான் சொன்னதை யெல்லாம் மறந்துவிடு. நீ நம்மூர்க்காரி என்று ஞாபகமூட்ட வேறென்றும் வேண்டாம். இந்த இரண்டு கேள்விகளே போதும். 'உனக்கு என்ன உத்யோகம்? எத்தனை ரூபாய் சம்பளம்?' நீதான் சொல்லேன், உனக்கு என்ன உத்தியோகம்? எத்தனை ரூபாய் சம்பளம்?

[மணி இதை முடிப்பதற்குள் சென்னைத் தேவதை மறைகிருள். பொழுது புலர்ந்தது என்பதைக் குறிக்க நாகஸ்வரத்தில் பூபாள ராகத்தில் ஒரு கீர்த்தனை.

மணி ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருக்கிருன். மணியின் தம்பி, வருது 'காப்பி' கொண்டு வந்து கொடுக்கிருன்.]

வருது: இந்தா. ஆறித்தானிருக்கு; சுருக்கச் சாப்பிடு.

ம: ரொம்ப நாழி தூங்கிவிட்டேன் போலிருக்கு. முன்னுடியே எழுப்பறதுதானே?

வ: இரண்டு நாள் பிரயாணமாச்சே, களைப்பாயிருக்கும், தூங்கட்டும் என்றிருந்தேன். அதற்குள் உன்னைப் பார்க்க யாரோ வந்தா.

ம: யாரு?

வ: யாரோ ஷில்லாங்கில் இருக்காராமே, சக்கரபாணி ஐயங்கார்; அவருடைய பிள்ளை. நீ ஷில்லாங்குக்குப் போகிருய் என்று தெரிந்து காப்பிக்கொட்டையும் பாக்கும், தன் அப்பாவுக்குக்

கொண்டுபோய்க் கொடுக்கும்படி சொல்வதற்கு வந்தான். வாங்கி வெச்சிருக்கேன்.

ம: நல்லது; வருது. முதலில் நான் கொண்டுவந்த சாமான்களைச் சேர்க்கவேண்டும். அதோ இருக்கு பார், அந்த மூட்டையை அரிசிக்காரத் தெருவில் சேர்க்க வேண்டும்.

வ: என்ன அண்ணு அது?

ம: கிட்டு அகமுடையாளின் பழம் புடைவைகள். அதை மயிலாப்பூரில் இருக்கும் கிட்டுவின் மன்னி என்ன பண்ணுவாள் தெரியுமா? 'சூ, மந்திரக்காளி' என்பாள். அத்தனையும் புதுப் பித்தளைப் பாத்திரங்களாக மாறிவிடும். அவைகளை அடியேன் கிட்டுவிடம் சேர்க்கவேண்டும். தெரிஞ்சுதா? ... பிறகு அதோ இருக்கு பார், ஒரு 'டின்'. அதை நைனியப்பன் தெருவில் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும்.

வ: அது என்ன?

ம: கடுகெண்ணெய். ரெயில் சிநேகத்துடன் அது நிற்கும் என்று எண்ணினேன்; ஆனல் என்னுடைய சாமான் பையில் (hold-all) பட்டுப் பரவி என்னுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறது. ....சரி, வருது, இவ்விரண்டு காரியங்களும் உன்னுல் ஆகவேண்டியது. பாக்கி எல்லாம் என்னுடைய பொறுப்பு....என்ன சொன்னுய்? சக்கரபாணி ஐயங்கார் பிள்ளையா? பையன் எப்படி இருக்கான்?

வ: மூக்கும் முழியுமாகத்தான் இருக்கான். ஏதுக்குக் கேட்கிறுய்?

ம: டெல்லியில் என்னுடைய சிநேகிதர் ஒருவர் 'பட்டணத்துக்குப் போறீரே, நல்ல வரன் ஏதாவது தெரிஞ்சால் விசாரித்துக் கொண்டு வாரும்' என்று சொல்லியிருக்கிறுர்.

வ: பையன் தேவலே. சிவப்பு நிறம். 'கணக்கு ஆனர்ஸ்' (Mathematics Honours); கடைசி வருஷமாம்.

ம: கோத்திரம் என்னவாம்?

வ: காப்பிக்கொட்டை கொடுக்க வந்த பையனை உடனே கோத்திரம் எப்படிக் கேட்கிறது? நீ வரன் பார்க்க வந்திருக்கே என்று எனக்குத் தெரியுமா? சாயங்காலம் மறுபடியும் வந்து உன்னைப் பார்க்கிறேன் என்று சொல்லியிருக்கான். அப்போது விசாரிப்போம். இப்போது மூலங்குடி அம்மாஞ்சி உன்னைப் பார்க்க வறேன் என்று சொல்லி யனுப்பியிருக்கிறுன். அவனுடைய பிள்ளை தேவு டெல்லியில் இருக்கானேன்னே? அவனைப்பத்தி விசாரிக்க வருவான்.

ம: நான் தேவுவைப் பார்த்துக் கிட்டத்தட்ட ஒரு மாசமாகிறதே.

வ: பயப்படாதே: அம்மாஞ்சி நீ கூறும் பதிலைக் கவனிக்க மாட்டான். கேள்விகளாக் கேட்டுக்கொண்டே போவான். அதோ வந்துகொண் டிருக்கான் பார் !

[மூலங்குடி அம்மாஞ்சி, கம்பீரமாக வருகிறான். கனத்த குரலுடையவன். உற்சாகம் நிரம்பியவன்.]

அம்மாஞ்சி: ஏண்டா, மணி, எப்போ வந்தே? எங்களை யெல்லாம் மறந்துவிட்டாயோடா?

ம: நேத்திக்கு....

அ: இப்போது என்னடா வேலை உனக்கு?

ம: இப்பவா ....?

அ: என்ன சம்பளம்?

ம: சம்பளம் வந்து....

அ: ஏண்டா, எங்க தேவுவைப் பார்த்தயோ?

ம: ஆத்துக்கு வந்திருந்தான்....

அ: ஹோட்டல் சாப்பாடு பிடிக்கலையாம், அது எல்லாம் விஷம் (It's all poison) என்று எழுதியிருக்காண்டா?

ம: ஓஹோ! அந்த....

அ: ஏண்டா, ஆபீஸிலே அவனுக்கு நல்ல பேரா?

ம: எனக்குத் தெரிந்தமட்டில்....

அ: டெல்லியில் எப்படியடா? பஞ்சாபிகள் எல்லாரும் நல்ல வாளா? இல்லாவிட்டால் ஒத்தருக்கு ஒத்தர் வத்தி வைப்பாங்களா?

ம: அவனவன் தன்....

அ: எல்லாரோடும் ஜாக்கிரதையாகப் பழகணும் என்று தேவுக்கு எச்சரிக்கை பண்ணியிருக்கேன்.

ம: தேவு என்ன, குழந்தையா?

அ: ஏன்டா அவன் எனக்குக் கடிதாசே எழுதறதில்லை?

ம: அம்மாஞ்சி மதனிக்கு வாரம்வாரம் எழுதுகிறேன் என்றானே!

அ: ஏண்டா, நீ நம்மாத்துக்கு ஒரு நாள் சாப்பிட வரவேண் டாமோ?

ம: அதற்கென்ன ....?

அ: உங்க மாமனார் என்னுடைய ஸ்நேஹபாடியடா!

ம: ஓஹோ!

அ: ஏண்டா, நம்ம உறவு சீமாச்சு, அங்கே பெரிய வேலையில் வந்திருக்கானுமே, பார்த்தயா? இப்போது எப்படியிருக்கான்?

ம: பார்க்கணும் என்று....

அ: மகா அல்பம்டா அவன்! தேவுக்கு வேலையைப்பத்தி அவன் இங்கேயிருந்தபோது ஒரு லெட்டர் எழுதினேன்; பதிலே

போடல்லேடா. அவன்: ஏண்டா, மணி, இன்னும் எத்தனை நாள் இங்கிருப்பே?

ம: நிச்சயமாகத் தெரியாது. இன்னும்....

அ: நீ வந்திருக்கேன்னு கேட்டதும் உன் அம்மாஞ்சி மதனிக்கு இருப்புக் கொள்ளல்லே. வந்து பார்க்கணும் என்று துடிக்கிறாள்.

ம: அவள் ஏன் சிரமப்படணும்? நானே....

அ: சரி, மணி, உன்னைப் பார்த்ததில் எனக்கு ரொம்ப ஸந்தோஷம். நாழியாச்சு. எனக்குக் கொஞ்சம் சுாரியம் இருக்கு. நீ போவதற்குள் இன்னொரு நாள் வந்து பார்க்கிறேன்....ஏண்டா, வருது, ஸ்நான அறைக்கு எப்படியடா போகிறது?..சரி, சரி, நானே பாத்துக்கறேன்.

[போகிறான்.]

மணி: ஏண்டா, வருது? ஒரு கேள்விக்காவது என்னைப் பதில் சொல்லவிடாதவன், அம்மாஞ்சி மதனியிடம் போய் என்ன சொல்லப் போகிறான்?

வ: அதெல்லாம் அவளுக்குத் தெரியும். கேள்விகளை இவன் கேட்டாச்சோன்னோ? உனக்கும் நோட்டீஸ் கொடுத்தாச்சு. பதில் வாங்கிண்டு போக மதனி சாயங்காலம் வருவாள் பார். அதற்குள் தயார் செய்துகொள்....அதோ கடலூர் சித்தியா வராப்போல் இருக்கு. பென்ஷன் வாங்கிண்டு இங்கேயே இருக்கார். உன்னைப் பார்க்கணும் என்று சொல்லிண்டிருந்தார்.

[கடலூர்ச் சிற்றப்பா வருகிறார். பழைய காலத்து உத்தியோகஸ்தர். பெரிய உத்தியோகஸ்தர்களின் சிநேகத்தை நாடுபவர்.]

கடலூர்ச் சிற்றப்பா: ஏம்பா மணி, வரப்போறேன்னு கேள்விப்பட்டேன்.

ம: ஆமாம் சித்தியா, நேத்திக்கு வந்தேன்; ஸௌக்கியமா?

சி: இருக்கேன். மணி, இப்போது என்ன வேலை உனக்கு?

ம: என்ன பிரமாத வேலை! சொன்னதைச் செய்கிற வேலை.

சி: என்ன சம்பளம்?

ம: ஏதோ, வயத்துக்குச் சரிக்கட்டி வருகிறது.

சி: ஏம்பா, நம்ப சீமாச்சுக்கு அங்கே கமிஷனர் வேலையாமே?

ம: ஆமாம்.

சி: அவனைப் பார்த்தயோ?

ம: இன்னும் இல்லை.

சி: போய்ப் பாருடா, நம்மூர் மனுஷன் நல்ல வேலையில் இருக்கிறான்.

ம: நேர்ந்தால் பார்க்கிறேன்.

சி: ஏண்டா மணி, அந்தக் கொடவாசல் ஐயங்காரை உனக்குத் தெரியுமோ? அவரும் அந்தப் பக்கத்தில் வேலையா யிருக்காராம்; 'டெபுடி கண்ட்ரோல'ராமே?

ம: தெரியாது. ஆனால், அவரைப்பத்திக் கேள்விப்பட்டிருக்கேன்.

சி: பார்க்க நேரிட்டால் என்னைப்பத்திச் சொல்லு, அவர் என்னுடைய மச்சினிக்கு நாத்தனார் அகமுடையான்டா.

ம: ஓஹோ!

சி: ஏண்டா, உன் தம்பி இப்போது எங்கே இருக்கான்?

ம: (வருதுவைக் காட்டி) இதோ இருக்கானே!

சி: இவனில்லையடா. லக்ஷ்மியைச் சொல்லுகிறேன்.

ம: பாட்னாவுக்கு அருகே இருக்கான்.

சி சின்னவனாயிருக்கச்சே பார்த்தது. ஐ. ஸி. எஸ். தேறின பிறகு அவனைப் பார்க்கவில்லை. இப்போது அவனிடம் போவயோ?

ம: ஏது, நான் போகும் வழியில் இல்லையே அவன்? என்ன செய்யணும்?

சி: ஒண்ணும் இல்லை. அவனுக்குக் கடிதாசு எழுதச்சே, 'கடலூர் சித்தியா உன்னை ரொம்ப விசாரிச்சார்' என்று எழுதறயா?

ம: ஆஹா.

சி: அப்புறம் பார்க்கிறேன். நான் வரட்டுமாப்பா?

[போகிறார்.]

வருது: அண்ணா, நான் அரிசிக்காரத் தெருவுக்குப் போய் விட்டு வருகிறேன். வரமட்டும் இங்கேயே இரு....அதோ உன் சிநேகிதன் நாணா வருகிறான்.

[போகிறான்]

['மணி' என்று கூப்பிட்டுக்கொண்டு நாணா வருகிறான்.]

நாணா: ஏண்டா 'ராஸ்கல்!' எப்போது குதிச்சே இங்கே?

ம: நேத்திக்கு ராத்திரி. உட்காரு. இதோ பார் நாணா, நீ கேட்க வந்திருக்கும் முதல் இரண்டு கேள்விகளுக்கும் பதில் என்ன தெரியுமா? புண்ணாக்கு!

நா: எந்தக் கேள்விகள்?

ம: முதலாவது, 'உனக்கு இப்போது என்ன உத்தியோகம்?' இரண்டாவது, 'என்ன சம்பளம்?'

நா: நான் அதையா கேட்க வந்தேன் என்று எண்ணினாய்?

ம: பின் என்ன கேட்க வந்திருக்கே? இதுவரைக்கும் இதே கேள்விகளைத்தான் ஒருவர் மாத்தி ஒருவராய் எல்லாரும் கேட்டார்கள். உன்னுடைய கேள்விகள் என்ன?

நா: நான் ஒரு கேள்வியும் கேட்க வரவில்லை. ஆனால் உன்னிடம் ஒரு ரஸமான சேதி சொல்ல வந்திருக்கேன்.

ம: என்ன?

நா: தமயந்தியை ஞாபகமிருக்கா உனக்கு?

ம: இல்லாமே என்னடா? நீயும் நானுந்தான் அவளை ஒண்ணு விட்டு ஒரு நாள் மானஸிகமாக 'லவ்' பண்ணினோமே!

நா: இனிமேல் அவளை 'லவ்' பண்ணாதே. நான் அவளைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டேன்.

ம: நீயா?

நா: ஆமாம்; எனக்கென்னடா குறைச்சல்?

ம: நிச்சயமாகவா?

நா: ஆம்.

ம: அப்படியானால் இங்கேயே சற்று உட்கார்ந்துகொண்டிரு; கதவைச் சாத்திவிட்டு ஒரு பேனாக்கத்தியால் உன்னைத் தீர்த்துவிட்டு மறுகாரியம் பார்க்கிறேன்.

நா: சபாஷ்! மாறியிருக்கயோ என்னவோவென்று பார்த்தேன். அப்படியே இருக்கயே! பழைய நாள் அநுபவங்களைப்பத்தி என்னுடைய அகமுடையாளுடன் அடிக்கடி சொல்லுவேன். விழுந்து விழுந்து சிரிப்பாள்.

ம: என்னைப்பத்தியுமா சொல்வாய்?

நா: நீ என்ன கொக்கோ? உன்னைபத்தித்தான் நிறையச் சொல்லியிருக்கேன். அவள் என்ன பதில் சொன்னாள் தெரியுமா?

ம: என்ன சொல்லியிருப்பாள்? —'நாணாவின் அகமுடையாள் நாணிக்கொண்டிருப்பாள்' என்றா?

ம: இல்லேடா. 'அப்படியானால் அடுத்த ஜன்மத்தில் அவருக்கு வாழ்க்கைப்படலாம் என்றிருக்கேன்' என்றாள்.

ம: இதுக்குக்கூட 'அட்வான்ஸ் புக்கிங்கா?' (Advance Booking.) ரொம்பச் சரி. எனக்கு முற்றிலும் சம்மதம். ஆனால் ஒண்ணு சொல்லறேன் கேட்டுக்கோ.

நா: என்ன?

ம: போன ஜன்மத்தில் அகமுடையானாச்சே என்று உன்னோடு அவள் ஸ்வாதீனமாகப் பேச வரக்கூடாது.

நா: வடக்கே இருக்கயோன்னோ, ஒரு 'கூர்க்கா'வையும் வாங்கிக் கொடுத்துவிடு. சரியாய்ப் போய்விடும். ஏண்டா, மணி, நீயும் உன் அகமுடையாளும் எப்படி? பழைய சுதந்தரத்தோடு இருக்கயா? அல்லது அடிமை ஆகிவிட்டாயா?

ம: டெல்லியில் முக்கால்வாசிப் பேர் அகமுடையாளுக்கு அடிமைதாண்டா!

நா: நீ எப்படி?

ம: பதில் சொல்வதற்குக் கஷ்டமான கேள்வியடா அது!

நா: சொல்லேன்.

ம: என் அகமுடையாளைக் கேட்டால், 'நீங்களா அடிமை? நன்னாயிருக்கு! நீங்கள் ஒரு வழிக்கும் வரமாட்டீர்களே!' என்கிறாள். என்னுடைய சிநேகிதர்களைக் கேட்டால், '8-மணியானால் என்ன? ஊரடங்குச் சட்டமா (Curfew order)? ஆத்துக்காரி ஒரு போடு போட்டுடுவள் என்று பயப்படுகிறாயோ? இரு, இன்னொரு 'ரப்பர்' ஆடிவிட்டுப் போகலாம்' என்கிறார்கள்.

நா: அவா சொல்றது இருக்கட்டும். நீ என்ன சொல்கிறாய்?

ம: நான் சிரித்துக்கொண்டு வீட்டிற்குப் போய்விடுகிறேன். நீ எப்படியடா?

நா: நானா? காரியமெல்லாத்தையும் அவள் பார்த்துக்கறாள். பேச்செல்லாம் நான் பார்த்துக்கறேன்....சரி, மணி, இதையெல்லாம் சாவகாசமாகப் பேசிக் கொள்வோம். இன்னிக்கு ராத்திரி சாப்பாடு நம்மாத்திலே! தம்பியையும் கூப்பிட்டுக்கொண்டு வா.

ம: சரி. வெங்காய ஸாம்பார் உண்டானால் வறேன் என்று ஆத்துக்காரியிடம் சொல்லு.

# 3

# கட்டக்

**பாத்திரங்கள்**
உத்கல் ராணி
மணி
நாராயண ஐயர்

மணி, 'கட்டக்' ஸ்டேஷன் 'பிரயாணிகள் அறை' யில் படுத்து உறங்குகிறன். கலிங்கதேசத்தின் இஷ்ட தேவதையாகிய உத்கல் ராணி (கட்டக்) அவனுடைய கனவில் தோன்றுகிருள்.

[கீத கோவிந்தத்திலிருந்து ஒரு பஜனைப்பாட்டு.]

உத்கல் ராணி: *வாப்பா. ஏது இந்தப்பக்கம், அபூர்வமாய்!*

ம: *இப்போதுதான் வர நேர்ந்தது; வந்தேன்.*

உ: *பார்த்து ரொம்ப நாளாச்சோன்னே?*

ம: *ஆமாம்; சரியாகப் பத்து வருஷங்களாச்சு; ஆனல் நீ என்னவோ அப்படியே இருக்கயே!*

உ: *எந்த விதத்தில்?*

ம: *அப்போதும் விடியற்காலே நாலு மணிக்குத்தான் உன்னிடம் வந்தேன். இப்பவும் அதே நேரந்தான். கொஞ்சம் ஏமாந்திருந்தால் தூக்கத்தில் உன்னைத் தாண்டிக் கல்கத்தா போயிருப்பேன். ஏம்மா, உன்னுடைய ஆட்சிக்கென்று தனிமாகாணம் கிடைத்த பிறகும் மெயில்வண்டி உன்னிடம் இப்படி இரண்டுங்கெட்டான் வேளையில் வருவதைப் பார்த்துக்கொண்டு இருக்கயே?*

உ: *வந்தாலென்ன? அப்படியாவது என்னிடம் வருபவர்கள் விடியற்காலேயில் எழுந்திருக்கப் பழகிக் கொள்ளட்டுமே!*

ம: *நியாயம் என்னவோ சரியானதுதான். ஆனல் அனுஷ்டிக்க முடியாதே! இந்தக் கஷ்டத்தை உத்தேசித்துத்தானே என்னவோ வெகுதூரம் இருக்கும் கல்கத்தா, பம்பாய், டெல்லி, எல்லா இடங்களும் எங்கள் ஊர் மனுஷாளுக்கு நன்ருய்த் தெரிந்திருக்கு. ஆனல் உன்னைப்பத்தி அநேகம் பேருக்குத் தெரியாது; நேரே அழைத்துக்*

கொண்டு வந்த பிறகுங்கூட எங்கம்மா உன்னைக் 'கடக்' என்றுதான் உச்சரிப்பாள்.

உ: உங்களூர் மனுஷாளைப்பத்தி ரொம்பப் பேசாதே.

ம: ஏன்?

உ: ஆமாம்; புதுப்புது ஊர்களுக்கெல்லாம் போய்ப் பார்க்கணும் என்ற ஆசையே உங்களுக்குக் கிடையாது. உள்ளூரை விட்டுப் புறப்படணும் என்றால், ஒண்ணு உத்தியோகம் செய்யும் இடமாயிருக்கவேணும் அல்லது மாமனார் இருக்கும் ஊராயிருக்கவேணும்.

ம: மூன்றாவது ஒரு காரணம் இருக்கே!

உ: என்ன?

ம: 'காப்பி' கிடைக்கும் ஊராயிருக்க வேணும்.

உ: அதைப்பத்திக் கவலைப்படாதே. இங்கே உனக்கு வேண்டிய 'காப்பி' கிடைக்கும்.

ம: நிச்சயமாகவா?

உ: ஆமாம்; இரண்டு வருஷமாச்சு. 'ரேவன்ஷா காலேஜு'க்கு எதிரே ஒருவர் 'காப்பி ஹோட்டல்' வைத்திருக்கிறார். ஆகையால் நானும் 'காப்பி' சாப்பிடப் பழகிக்கொண்டிருக்கேன். காலேஜில் படிக்கும் என்னுடைய பையன்களும் இந்தப் பழக்கத்தைக் கொண்டிருக்கிறார்கள். என்ன! - பாதி மதராஸிகளாய் விட்டோமோன்னோ?

ம: பாதி போராது. முழுவதும் ஆகிவிடுங்கள்! முன்னுக்கு வருவீர்கள்.

உ: எப்படி?

ம: முதல் முதலில் உன்னுடைய மூடுவண்டி இருக்கு பார். இரட்டைக் குதிரை மூடுவண்டி! இன்னும் வைத்துக்கொண்டிருக்கயோன்னோ?

உ: வெச்சிண்டிருக்கேன்.

ம: அதை விட்டுவிடு!

உ: ஏன்?

ம: மூடு மந்திரமே ஒண்ணும் வேண்டாம்.

உ: பின்னே, வெட்டவெளிச்சத்தில் எல்லார் கண்ணிலேயும் படும்படிப் போகச் சொல்கிறாயா?

ம: போனால் என்ன?

உ: பயமாயிருக்கே!

ம: பயம் என்ன உனக்கு?

உ: ஏழையாச்சே, நான்.

ம: அந்த எண்ணத்தை விட்டுவிடு. ஏழை 'பெங்காலி' போல் இருக்கும் வழக்கத்தை விட்டுவிடு; ஸ்வய மரியாதையுடன் தலை நிமிர்ந்து பார்.

உ: அப்படி என்ன எனக்குப் பெருமை வந்துடுத்து ?

ம: உன்னுடைய பெருமை ஸாதாரணமானதா ? அசோக சக்கரவர்த்திக்குப் புத்தி கற்பித்தவள் அல்லவா நீ ?

உ: அது எந்தக் காலமோ, அப்பா !

ம: அந்தக் காலம் திரும்பிவிடும்; பயப்படாதே !

உ: சரி, மூடுவண்டியாச்சு; இன்னும் என்ன செய்யணும் ?

ம: இன்னுமா ? உன்னைப் பார்த்தால் எங்கள் ஊர் ஒண்ணு ஞாபகம் வருகிறது.

உ: எது ?

ம: கும்பகோணம்.

உ: ஏன் ?

ம: உன்னிடம் மகாநதியிருப்பதுபோல் அங்கே காவேரி நதி இருக்கு. அங்கேயும், உன்னிடம் இருப்பதைப்போல் குறுகியதும் நெருக்கமாயும் உள்ள கடை வீதி. அதுவும் தண்ணீரும் தோப்பும் அடங்கியுள்ளது. அங்கேயும் ராத்தூக்கத்தைக் கெடுக்க லக்ஷக்கணக்கான கொசுக்கள் இருந்தன.

உ: இப்போது இல்லையா ?

ம: இல்லை. அதைத்தான் சொல்ல வந்தேன். கொசுக்களை ஒழி; உன்னை எல்லோரும் நாடுவார்கள்.

உ: அதுமட்டும் போராது அப்பா. இன்னும் ரொம்ப விஷயங்கள் இருக்கு. மகாநதிக்குப் பாலம் போடணும். எங்களுக்காகத் தனி 'யூனிவர்ஸிடி' வேண்டும். 'ஹைகோர்ட்டு' வேண்டும். 'ரேடியோ ஸ்டேஷன்' வேண்டும்.

ம: இதையெல்லாம் வைஸ்ராய் இங்கு வரும்போது அவரிடம் தெரிவி; என்னிடம் சொல்லாதே.

உ: பின் எப்படி நான் மதராஸியாகிறது ?

ம: அதற்கா ? ஒரு ஸூக்ஷ்மமான உபாயம் சொல்கிறேன் கேள்.

உ: என்ன ?

ம: எங்களோடு கொடுக்கல், வாங்கல் வைத்துக்கொள்.

உ: அப்படியென்றால் ?

ம: பெண்ணைக் கொடுத்துப் பெண்ணை வாங்கிக்கறது என்று அர்த்தம்.

உ: நாங்கள் கோஷாவாச்சே !

ம: மூடு வண்டியோடு அதுவும் போய்விடும்.

உ: சரி, யாருக்குப் பெண்ணைக் கொடுக்கிறது ? உனக்குக் கல்யாணம் ஆய்விட்டதா ?

ம: எனக்கு ஆய்விட்டது; அடுத்த ஜன்மத்திற்கும் இப்போதே தீர்மானமாகிவிட்டது.

உ: பின், யாரைப் பார்க்கிறது?

ம: வேறு ஒசத்தியான வரனைப் பார். இங்கே எங்களூர் ஐ. ஸி. எஸ். காரர் யாராவது இருக்கிறார்களா?

உ: இருக்கிறார்கள்.

ம: பார், அவர்களை. கிஸ்தி வசூல் செய்வதிலேயிருந்து கவர்னர் வேலைமட்டும் அவர்களால் எல்லாவற்றையும் செய்யமுடியும். ஒரு கலிங்கக் கன்னிகையையா மணம் செய்துகொள்ள முடியாது?

உ: பிரயத்தனம் பண்ணினால் பிரயோசனம் உண்டா?

ம: ஏன் இல்லை? எங்களூர் ஐ. ஸி. எஸ். காரர்களுக்கு இதர மாகாணப் பெண்கள் வாழ்க்கைப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கேன். ஆனைப்பட்ட வெள்ளைக்காரக் கன்னிகைகளே வாழ்க்கைப் பட்டிருக்கிறார்கள். உன்னுடைய மாகாணத்திற்குத்தான் அந்தக் குறை இருப்பானேன்?

உ: இருக்கத்தான் இருக்கும்.

ம: ஏன் அழுத்தந் திருத்தமாய்ச் சொல்கிறாய்?

உ: உங்கள் பிரதேசத்தாருக்கே அகமுடையாளைச் சரியாக வைத்துக்கொண்டிருக்கத் தெரியாது என்று நான் கருதுகிறேன்.

ம: நீ எதைக் கொண்டு அப்படிச் சொல்லுகிறாய்?

உ: இங்கே இரண்டு மதராஸிகள் இருக்கா, மனைவிகளுடன். அவர்களை அறிந்து சொல்லுகிறேன்.

ம: என்னத்தை அறிந்தாய்?

உ: ஒருவர் தம்மனைவியை அந்தர்பாவத்தில் தமக்குத் தகுந்தவள் அல்ல என்று நினைக்கிறார். மற்றொருவர் மனைவி தன் கணவரைப் பவிஷு கிடைத்த அல்பன் என்று எண்ணுகிறாள்.

ம: இதோ பார். அகமுடையான் பெண்டாட்டிக்குள் ஆயிரம் இருக்கும்; அவைகளை நீ அலசி ஆராய்ச்சி செய்யக்கூடாது.

உ: இருந்தாலும் பொதுவாக நீங்கள் எல்லாரும் புத்தியைக் கொண்டு உங்கள் ஸ்திரீகளுடன் பழகுகிறீர்கள். பக்தியைக் கொண்டு பழகினீர்களானால் தாம்பத்ய வாழ்க்கையில் சிறப்படைவீர்கள்.

ம: சிறப்பை ஸ்திரீகள் தாம் அடைவார்கள். அப்புறம் எங்களை அகமுடையாளின் அடிமைகள் என்று எல்லாரும் சுட்டிக்காட்டவா?

[உத்கல் குமாரி மறைகிறாள். நாராயணையர் என்று ஒருவர் வருகிறார்.]

நாராயணையர்: ஸார்....ஸார்.....ஸார்!

ம: (தூக்கத்திலிருந்து எழுந்து) யார்?

நா: நான்தான் நாராயணையர். நீங்கள் வருவதாகச் சேஷமணி எழுதியிருந்தார். ரெயிலுக்குச் சரியாக வரணும் என்றிருந்தேன். சற்றுக் கண்ணயர்ந்துவிட்டேன்.

ம: உங்களுக்குச் சிரமம் என்னத்துக்கு, கார்த்தாலே போய்க் கொள்ளலாம் என்று இங்கேயே தங்கினேன்.

நா: சிரமம் என்ன? வீடு கிட்டக்கேதான் இருக்கு. ஹோட்டலும் பக்கத்தில்தான். 'வெயிட்டிங் ரூமில்' எதற்குத் தூங்கணும்? வாங்கோ போகலாம்; ' வண்டி கொண்டுவந்திருக்கேன். இதெல்லாம் உங்கள் சாமான்தானே?

[ குதிரை வண்டி போகும் சத்தம். ]

# 4

# கல்கத்தா

**பாத்திரங்கள்**

மணி

சாமா

கமலி

கல்கத்தா 'சௌரிங்கீ'யில் 'பஸ்'ஸுக்காக மணி காத்துக்கொண்டு நிற்கிருன். அப்போது ஒரு புருஷனும் ஸ்திரீயும் அதே இடத்தை நோக்கி வருகின்றனர். வந்ததும் புருஷன் மணியைப் பார்க்கிருன். பார்த்ததும் ஒரே உற்சாகத்துடன் 'மணீ!' என்று கூறித் துள்ளிக் குதிக்கிருன். மணியைக் கட்டிக்கொள்ளுகிருன்.

["ஜனகணமன" என்று ஆரம்பிக்கும் ரவீந்திரநாத் டாகுரின் பாட்டு]

மணி: *சாமா !*

சா: *ஏண்டா, மணி, சட்டுனு தெரிஞ்சுதோ உனக்கு?*

ம: *தெரிஞ்சுது.*

சா: *பின் ஏன் தயங்கினே? நான் தான் உன்னைக் கண்டதும் தெரிந்துகொண்டேன்.*

ம: *நானும் உன்னைச் சாமாவாகத்தான் இருக்கணும் என்று எண்ணினேன். ஆனால் மாமியைப் பார்த்ததும் நீ சாமாதானோ என்று கொஞ்சம் சந்தேகம் ஏற்பட்டது.*

சா: *(அடங்காச் சிரிப்புடன்) யாரடா மாமி? இவள் என் அகமுடையாள்ளு ! கமலி, மணிடீ, டெல்லி மணி!*

கமலி: *உங்களைப்பத்தி அடிக்கடி சொல்லுவார்.*

சா: *மணி, உன்னைப் பார்த்து எத்தனை வருஷங்கள் ஆச்சுடா ? (உற்சாகத்துடன்) மணீ !*

ம: *பன்னிரண்டு வருஷங்கள்.*

சா: *மணி, உன்னைப் பார்த்ததிலிருந்து எனக்கு நிலையே தெரியவில்லை. என்னென்னவோ செய்யணும்போல் இருக்கே !*

ம: ஒண்ணும் செய்ய வேண்டாம். அதோ 'பஸ்' வருகிறது. நீங்கள் எந்தப் பக்கம் போகவேண்டும் ?

சா: 'பாலிகஞ்சு'. நீ ?

ம: அங்கேதான்.

சா: மணி, உன்னோடு நாள்கணக்காப் பேசணும் போலிருக்கே !

ம: சரி, இப்போது மாமி கையைப் பிடித்துக்கொண்டு வண்டியில் ஏறு.

['பஸ்'ஸில் மூவரும் ஏறுகிறார்கள்.]

சா: மணி, இன்னும் எத்தனை நாள் இங்கே இருப்பே ?

ம: மூன்று நாள்.

சா: சரி, மூன்று நாளும் எங்களுடன் இருக்கணும்; இப்போது யாராத்தில் இருக்கே ?

ம: கணேசனுடைய தம்பி இங்கே இருக்கான்; அவனுடன் தங்குகிறேன்.

சா: அதெல்லாம் முடியாது. உன்னுடைய ஸாமான் எல்லாத்தையும் எடுத்துக்கொண்டு எங்காத்துக்கு வந்துடணும். ஊருக்குப் போகுமட்டும் எங்களுடன் இருக்க வேணும். (உற்சாகத்துடன்) பன்னிரண்டு வருஷமாகப் பார்க்கல்லேயேடா, உன்னை. (கமலியைப் பார்த்து) சந்தோஷம் தாங்கலே, கமலி ; எங்க மணீடி !

ம: இந்தா, சாமா, இது பஸ்ஸுடா. பார்க்கறவா ஏதாவது எண்ணிக்கப் போறா ! இறங்கற மட்டும் சும்மா இரு.

சா: அதெல்லாம் முடியாது. வருஷக்கணக்காய்ப் பார்க்காமல் இருந்துவிட்டு இப்போது எப்படியடா சும்மாயிருக்க முடியும் ?

ம: ஆனால் இரண்டு முக்கியமான விஷயங்கள் சொல்கிறேன். ஞாபகம் வைத்துக்கொண்டு, பிறகு எனக்கு நினைவுப்படுத்து.

சா: என்னென்ன ?

ம: முதலாவது ஒரு டஜன் கல்கத்தாக் கரண்டிகள். இரண்டாவது இரண்டு 'டின்' ரஸகுல்லா. நான் எப்பெப்போ கல்கத்தாவுக்கு வறேனோ அப்போதெல்லாம் இவை இரண்டும் என் அகமுடையாளுடைய 'ஸ்டாண்டிங் ஆர்டர்கள்' (Standing orders).

சா: 'எங்க சாமாவைப் பார்த்தேன். வாங்க மறந்துபோய் விட்டேன்' என்று சொல்லிவிடு.

ம: சாமாவானாலும் அல்லது 'விக்டோரியா மெமோரியல்' (Victoria memorial) ஆனாலும் அல்லது 'மல்லிக்'கின் அரண்மனையானாலும் சரி, எதைப்பற்றிச் சொன்னாலும் என் சொல் அம்பலம் ஏறாது. கல்கத்தாக் கரண்டியில்லாமல் நான் டெல்லிக்குப் போனால், நான் பேச்சுக் கேட்க வேண்டியதோடில்லாமல் நாலு குடும்பங்களில் களிம்பு ஏறின குழம்பு பரிமாறப்படும்.....சரி, சாமா, இங்கேதான் நாங்கள் இறங்க வேண்டும் ; நீ என்ன செய்யப் போகிறாய் ?

சா: நாங்களும் இங்கேயே இறங்கி விடுகிறோம். இறங்கு, கமலி. (பஸ்ஸிலிருந்து மூவரும் இறங்குகிறார்கள்.) மணி, இப்போது ஒண்ணு செய்வோம். எங்கள் வீடு கிட்டக்கேதான் இருக்கு. கமலிக்கு வழி தெரியும். தனியாகவே போவாள். நான் உன்கூடவே வந்து உன்னை அழைத்துக்கொண்டு வருகிறேன்.

ம: அசடே, அன்பனை நம்பி அகமுடையாளைக் கைவிடலாமோ? சாமா, நீ இப்போது மாமியை அழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போ. இன்னும் அரை மணிக்குள் நான் வந்து சேருகிறேன்.

சா: கட்டாயமா?

ம: ஆமாம்.

சா: நான் காத்துக்கொண் டிருப்பேன்.

ம: சரி.

சா: போவதற்குள் ஒரு கேள்வி கேட்க வேண்டும் போல் இருக்கு. ஏண்டா மணி, நீ உன் அகமுடையாளுடன் எப்படியடா பேசுகிறாய்?

ம: என்ன விசித்திரமான கேள்வி!

சா: ஒண்ணிலேயும் பட்டுக்கொள்ளாமல் பேசிண்டே இருப்பயே! ஆத்துக்காரியிடம் எப்படிப் பேசுகிறாய் என்று தெரியணும் போலிருக்கு.

ம: மாமியை அழைத்துக்கொண்டு போ. எல்லாம் நான் வீட்டிற்கு வந்தபின் சொல்லுகிறேன்.

[போகிறான்.]

[சாமாவும் கமலியும் வேறு பக்கம் போகிறார்கள்.]

சா: கமலிக் கண்ணு!

க: ஏன்?

சா: பார்த்த க்ஷணமே மணியைத் தெரிஞ்சு கொண்டேன்; அப்படியே இருக்காண்டி. கோட்டுக்குப் பொத்தான் போட்டுக்க மாட்டான். தலைமயிர் முன்னுச்சி நெத்தியில் வளைந்து விழுந்திருக்கும். மணியைப் பார்த்தது ஒரு பெரிய நிதியை அடைந்தது போல இருக்கு நேக்கு.

க: எங்கே நீளப்போகிறேளே! இங்கே திரும்பவேண்டாமா?

சா: ஆமாம். மணியை நினைச்சுண்டே மெய்ம்மறந்து விட்டேன். கமலிக்கண்ணு, இப்போது எனக்கு ஒரே ஆனந்தமாய் இருக்கு. நீ ஆயிரம் மடங்கு அழகாகத் தோணறே.

க: போங்கோன்னு!

சா: நிஜமாச் சொல்கிறேன். மணியைப்பத்தி நான் அடிக்கடி நினைச்சுண்டதுண்டு. நல்ல குணம். களங்கமற்ற மனசு; சண்டை சச்சரவு எல்லாத்தையும் தாண்டியிருக்கும் நேர்த்தியான பிரதேசத்தில்

அவனுடைய நுட்பமான புத்தி விகஸிக்கும். ஆழ்ந்த ஆத்ம சக்தியுள்ளவன்; பாசமற்றுப் பயமின்றி இருப்பான். ஆனால் துளிப்போலே குறும்பு வெச்சுப் பேசுவான். அவனுடன் பழகுவது வெகு இன்பமாயிருக்கும். கமலிக்கண்ணு, உன்னை அப்படியே கசக்கிப் பிழிந்து விடணும் போலிருக்கு எனக்கு இப்போது.

க: ஏன் ?

சா: மணியைக் கண்ட குதூகலத்தினால்!..வீடு வந்துடுத்து, இப்போது நீ என்ன செய்யணும் தெரியுமா ? 'காப்பி' போட்டு மணிக்குச் 'சுடச்சுட' வெச்சுக்கொண்டிருக்கணும். டெல்லிக் குளிரில் இருந்தோமோன்னோ, சாப்பிடுவதற்கு எதைக் கொடுத்தாலும் 'சுடச் சுட இருக்கா' என்று கேட்ட பிறகுதான் மணி சாப்பிடுவான்.

பழைய நாள் நினைவு; அப்படியே பளிச்சென்றிருக்கு. உன்னை மேலைக்காவேரியில் விட்டுட்டு உத்தியோகத்திற்காக டெல்லிக்குப் போனேனா? நம்மூர் மனுஷா அப்போவெல்லாம் டெல்லியில் ரொம்பக் குறைச்சல். நாங்கள் எட்டுப்பேர் ஒன்றாயிருந்தோம்.

'நாயுடுகாரு' என்று சொல்லுவோம் ஒருவனை. எல்லாத்துக்கும் 'இன்னாப்பா' என்ற பீடிகையுடன் பேச ஆரம்பிப்பான். அவனுக்கு ஒரு நாடகத்தில் வேஷம் கொடுத்து ஒரு சந்தர்ப்பத்தில், 'அண்ணா, என் வாள் எங்கே ?' என்று கூறச் சொன்னபோது 'அன்னா, என் வால் எங்கே?' என்றான்.

அப்புறம் கிட்டு என்னும் பாலக்காட்டுப் பையன் 'மோப்ளா' பாட்டுக்கள் பாடுவான்.

> "நானொரு பெண்ணினைக் கண்டு
> மோகம் கொள்ளுன்னே ! அல்லா !
> மோகம் கொள்ளுன்னே !"

என்றும்,

> "கல்லாயிப்பாலத்து
> கற்றின்னேம் நூனம் பத்து
> அல்லா சதிச்ச சதி"

என்றெல்லாம் பாடுவான்.

அப்புறம் சாரியின் மூக்குக் கண்ணாடியை எடுக்கச் சொல்லிவிட்டு, ரி, இது எத்தனை விரல்டா ?' என்றால் முழிப்பான். ஆனால் சுறு சுறுப்புள்ளவன். காலையில் எழுந்ததும் காப்பி சாப்பிட்டுவிட்டு ஸைகிளில் ஏறி, வேலையிருக்கோ இல்லையோ, 'இபாட்ஸம் ரோட்டை' (Ibbotsom Road) இரண்டு தரமாவது சுற்றிவந்தால்தான் அவனுக்கு இருப்புக் கொள்ளும்.

க: ஜலம் பொங்கறது; சித்தே பொடி அரைச்சுண்டு வரயளா?

சா: பேஷாய்! (போய்க் 'காப்பி' மெஷினைச் சுற்றுகிறான்) அப் புறம்; கோபால கிருஷ்ணனைப்பத்தி உன்னிடம் சொல்லியிருக்கேனா?

க: நாடகங்களில் பொம்மனாட்டிப் 'பார்ட்டு' எடுத்துக் கொள்வார் என்று சொல்வீர்களே?

சா: ஆமாம்; ஸ்திரீரூபம் அவனுக்கு நன்றாய்ப் பொருந்தும். அதனால் நாங்களெல்லோரும் சேர்ந்து, 'அடுத்த ஜன்மத்தில் பெண் ணாய்ப் பிறந்துவிடு. நாங்கள் ஏழுபேரும் உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறோம்' என்று கேலி செய்வோம்......இந்தா காப்பிப் பொடி....ஏன் கமலி, உனக்கு ஐயங்காரைப்பத்திச் சொல்லி யிருக்கேனா?

க: உங்களுக்கெல்லாம் குரு என்பீர்களே?

சா: ஆமாம்; அவர்தாம்! குறையாத ஆற்றலும் உற்சாகமும் கொண்டவர்; உபகாரி. சொன்ன காரியத்தைச் சுருக்கவும் சாமர்த்திய மாகவும் செய்பவர். கமிஷன்களிலும் கமிட்டிகளிலும் வேலை செய்து இந்தியா முழுவதும் சுற்றிப் பார்த்தவர். ஒருதரம் எங்களையெல்லாம் 'போட்டோ'ப் பிடித்தார். நாங்கள் ஒருவரும் அதில் விழவில்லை; 'பேக்கிரௌண்ட்' (Background) தான் விழுந்தது.

க: கொஞ்சம் சக்கரை டப்பாவை எடுத்துக்கொண்டு வரயளா?

சா: இந்தா! (கொடுக்கிறான்.)......அப்புறம் ஜிம்மியைப் பத்தித்தான் உனக்குச் சொல்லி யிருக்கேனே.

['சாமா' என்று கூப்பிட்டுக்கொண்டு, மணி உள்ளே வருகிறான்.]

சரியான சமயத்தில்தான் வந்தாய். இந்தா 'காப்பி'.

ம: சுடச்சுட இருக்கா?

க: அப்படிக் கேட்பீர்கள் என்று இப்பத்தான் சொல்லிக்கொண் டிருந்தார்.

சா: ஆமாம் மணி. பழைய நாட்களைப்பற்றிக் கமலியிடம் சொல்லிக்கொண் டிருந்தேன். நீயும் வந்தாய். (கமலியைப் பார்த்து) 'ஜிம்மி'யைப் பத்திச் சொல்ல ஆரம்பித்தேனோடி? அவன் ஒருவன்தான் எங்களுள் அகமுடையாளுடன் இருந்தவன். எங்களுடன் சாயங்காலம் வரும்போதெல்லாம் அகமுடையாளுடைய செருப்பைப் போட்டுக் கொண்டு வருவான். எங்களுள் சிலபேர் அதை வாங்கித் தங்களுடைய காலில் போட்டுப் பார்த்து மகிழ்வார்கள்.

க: (முதல் தரம் கேட்டவள் போல் சிரிக்கிறாள்.)

மணி: சாமாவுக்கு ஏற்ற ஜோடுதான் நீங்கள்!

க: ஏன்? எதைக்கொண்டு சொல்லுகிறீர்கள்?

ம: சாமா எங்களைப்பத்தி யெல்லாம் எத்தனை தடவை சொல்லி யிருக்கான்?

க: எவ்வளவோ தரம்.

ம: திருப்பித் திருப்பிச் சொல்வதைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களே. அதனுல்தான் சாமாவுக்கு ஏற்றவர் என்றேன்.

க: அதென்னவோ ! நீங்கள் வந்தது நல்லதாச்சு ; இல்லா விட்டால் இன்று ராத்திரி என்னைத் தூங்கவிடமாட்டார். நினைவுகளை யெல்லாம் விரிவாகச் சொல்லிக்கொண்டே இருப்பார். இப்போது நீங்கள் இருவரும் ராத்திரியெல்லாம் பேசிக்கொண் டிருங்கோ. காரியம் கொஞ்சம் இருக்கு ; நான் போறேன்.

சா: கொஞ்சம் இரு. மணிக்குப் பாட்டுன்னு ரொம்பப் பிடிக்கும்.

க: உங்களுக்குப் பாடத்தெரியுமா ?

ம: சாமாவுக்குப் பாடத் தெரியுமென்ருல் சாமா சிநேகித னுக்கும் தெரியணுமா ? பாடத் தெரியாது எனக்கு ; ஆனுல் கேட்கத் தெரியும்.

க: எதைப் பாடணும் ?

ம: கல்யாணியில் ஏதாவது பாட்டு.

க: சரி ; ('கமலாம்பாம் பஜரே' என்னும் பாட்டைப் பாடுகிருள்.)

ம: சாமா, இனிமேல் போது போவதற்கு ஒரு நல்ல 'ஹாபி' (hobby) கிடைத்திருக்கு.

சா: என்னதுடா ?

ம: பாட்டைக் கவனிக்கல்லே நீ ; (கமலியைக் காட்டி) 'கமலாம்பாம் பஜரே' :

சா: பார்த்தாயாடி !

ம: (கமலியைப் பார்த்து) நீங்கள் முகத்தைச் சற்று அந்தண்டை திருப்பிக் கொள்ளுங்கள். பாடினது திவ்யமாயிருந்தது என்று சொல் லப் போகிறேன். கல்யாணி என்றுலே எனக்கு ரொம்ப இஷ்டமான ராகம். அதை நீங்கள் பாடினது பொருத்தமாயிருந்தது. ஏன் தெரியுமா ? கல்யாணி ஒரு ஸம்பூர்ண ராகமோன்னே? அதைப் பாடின உடனே என்ன தோணித்து தெரியுமா?

மேலேக்காவேரியில் ஒரு பெண் ; கைக்குழந்தையை வைத்துக் கொண்டு வடக்கே சென்றிருக்கும் ஆத்துக்காரரைப்பத்தி, 'எப்போ வருவாரோ என்றன் கலி தீர' என்று சிந்தித்தவண்ணம் காலத்தைக் கழிக்கிருள். மூன்று வருஷங்கள் ஆகின்றன. அவர் வந்தபாடில்லே. குடும்பத்தின் வறுமையைத் தீர்க்கவும் ஓர் உத்தியோகத்தைத் தேடி யடையவும் வடக்கே சென்றிருக்கிருர். படிப்போ ஸ்வல்பம். பரந்த உலகில் எல்லாம் புதுமையாயிருக்கிறது. ஏமாற்றம், வீண், புறக்

கணிப்பு, கஷ்டம், விரகதாபம் எல்லாம் அவரை வாட்டி வருத்து கின்றன. ஆனால் இயற்கையாயுள்ள மலர்ச்சியும், விடாமுயற்சியும், நல்ல நண்பர்களும் அவரைத் தாங்கி நின்றதால் கடைசியில் அவருக் குக் கோரின லக்ஷ்யம் கைகூடுகிறது. இந்த ஸம்பூர்ண குணத்தைக் கல்யாணியில் காணலாம்.

சா: பார்த்தாயா, நம்முடைய வாழ்க்கையைச் சித்திரம்போல் விளக்கிவிட்டான்.

க: நீங்க பேசிண்டிருங்கோ. நான் வறேன்.

[போகிறாள்.]

சா: அப்புறம், மணி, டெல்லியைப்பத்திச் சொல்லுடா.

ம: நீ இருந்த டெல்லிக்கும் இப்போது இருக்கும் டெல்லிக்கும் ரொம்ப வித்தியாசம் இருக்கு. அப்போது நாம்ப 80, 90 பேர்கூட இல்லை யோன்னோ? இப்போ 2000-க்குமேலே இருக்கா.

சா: அவா இருக்கட்டும்; நம்ப பசங்கள் எல்லாரும் என்ன செய்கிறா? நாயுடு எங்கே இருக்கான்?

ம: ஸெகிண்டிராபாத்தில் இருக்கான்.

சா: கிட்டு?

ம: 'காண்ட்ராக்டு பிரிட்ஜ்' (Contract bridge) ஆடுகிறான்.

சா: சாரி? ஸைகிளில் இன்னும் சுத்தறானா?

ம: ஆகா; முன்னெல்லாம் 'இபாட்ஸம் ரோடை'ச் சுற்றி வருவான். இப்போது டெல்லி பூரா அவனுக்குச் சிநேகிதர்கள்.

சா: கோபாலகிருஷ்ணன்?

ம: இப்போது ரொம்ப 'ஸீரியஸ் மைன்டட்' (Serious-minded) ஆகிவிட்டான். கோவிலுக்கு நித்தியம் போகிறான்.

சா: குரு?

ம: அப்படியேதான் குடுமி வைத்துக்கொண்டு இருக்கார். உற்சாகத்திற்குக் குறைவில்லை. எது எதுலேயாவது பொக்கிஷதார ராகவோ கமிட்டி மெம்பராகவோ இருந்துகொண்டு பொறுப்புடன் உழைக்கிறார்.

சா: எல்லாரையும் ஒரு தரம் வந்து பார்க்கணும் போல் இருக்குடா!

ம: ஒரு மாசம் லீவு எடுத்துண்டு வா, பார்க்கலாம்.... ஏண்டா, சாமா, 'ஹரீஷ் முகர்ஜீ ரோட்' எங்கே யிருக்கு?

சா: கிட்டக்கேதான் இருக்கு; ஏன்?

ம: நாளைக்கு அங்கே போய் நான் ஒருவரைப் பார்க்கணும்.

சா: யாரை?

ம: உனக்குத் தெரியாது.

சா: யார், சொல்லேன். இந்தப்பக்கம் இருக்கும்' மதராஸிகளை யெல்லாம் எனக்குச் சுமாராய்த் தெரியும்.

ம: மதராஸியில்லே. ஒரு வங்காளப் பெண்மணி.

சா: பெங்காலிப் பெண் யாருடா, இங்கே உனக்குச் சிநேகம்?

ம: டெல்லியில் இருப்பவள், இங்கே வந்திருக்காள். சந்தேகப் படாதே. அவள் என்னுடைய தங்கை மாதிரியாக்கும்.

சா: விஷயத்தை உன் அகமுடையாளுக்குத் தெரிவிக்கட்டுமா?

ம: அவளுக்குத் தெரியும். உமா, அவளை 'மன்னி' என்றுதான் அழைப்பாள்.

சா: உமாவோடு பேசுவதற்கு அகமுடையாள் அனுமதி கொடுத்திருக்காளா?

ம: ஆகா! தனியாகத்தான் பேசக்கூடாது. மூன்றும் மனுஷ்யர் இருக்கும்போது பேசலாம்.

சா: அப்படீன்னு, நான் மூன்றும் மனுஷனு யிருக்கேன். அழைத்துக்கொண்டு போகிறுயா?

ம: ஆகா.

சா: மணி, என்னுடைய 'டிராமா போட்டோ' எல்லாம் காட்டுகிறேன் வா. பூனுவில் வருஷம் இரண்டு டிராமாக்கள் போட்டோம். அடுத்த ரூமில் இருக்கு....வா.

[போகிறுர்கள்.]

# 5

# ஷில்லாங்

**பாத்திரங்கள்**

மணி
சக்கரபாணி ஐயங்கார்
தமயந்தி

மணி ஷில்லாங்கில் சக்கரபாணி ஐயங்கார் என்பவருடைய வீட்டிற்கு வந்திருக்கிறன். ஐயங்கார் சாயந்தரம் வீட்டிற்கு வருகிறார்.

[ 'மாயே' என்று ஆரம்பிக்கும் தரங்கிணீ ராகப்பாட்டு; புல்லாங்குழல் 'ரிகார்டு.']

மணி: *வாருங்கோ.*

சக்கரபாணி ஐயங்கார்: *நான் ஆத்தில் இருந்து கொண்டு உங்களை வாருங்கோ என்று அழைப்பதற்கில்லாமல் நீங்கள் முன்னடி வந்து என்னை அழைக்கும்படியாயிருக்கே!*

ம: *அதனால் என்ன? நீங்கள் அனுப்பினவர் என்னைச் சரியாக மோட்டார் ஸ்டாண்டில் கண்டு வீட்டிற்கு அழைத்து வந்தார். எனக்கு யாதொரு கஷ்டமும் இல்லையே.*

ச: *அதற்குச் சொல்லவில்லை. ஆத்தில் வேறொருவரும் இல்லையே என்பதைத்தான் சொன்னேன். என்னுடைய அகமுடையாள் இங்கிருந்தாளானால் எனக்கு ஒரு கவலையும் இருக்காது.*

ம: *இப்போது மாத்திரம் கவலைக்கு என்ன வந்தது? எனக்கு ஒண்ணும் அதிக உபசாரங்கள் வேண்டாம். எல்லா இடங்களிலும் ஸமாளிச்சுக்கொள்வேன்... உங்கள் பையன்கள் மாம்பலத்தில் என்னைப் பார்க்க வந்தார்கள். காப்பிக் கொட்டை, பாக்கு எல்லாம் உங்களுக்கு கொடுத்தனுப்பி யிருக்கா. கொண்டுவந்திருக்கேன். பார்க்கிறீர்களா?*

ச: *ரொம்பச் சிரமம் கொடுத்துவிட்டேன் ஸார், உங்களுக்கு (போய் ஒரு டப்பாவைத் திறந்து பார்க்கிறார்.) இன்னும்) என்னவோ*

அனுப்பிச்சிருக்கா போலிருக்கே! ஆமாம் ஸார் 'தொக்கு' அனுப்பிச் சிருக்கா. இதென்னவோ இருக்கே!....பருப்புப் பொடி அனுப்பிச் சிருக்கா!

ம: பின் என்ன குறைவு?

ச: அதற்கில்லை. அத்தி பூத்தாப்போலே நீங்க வந்திருக்கும் போது என் அகமுடையாள் இங்கே யிருந்து, எனக்கும் கொஞ்சம் வேலை ஓய்வு இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? பார்ப்பதற்கு இங்கே எவ்வளவோ நேர்த்தியான இடங்கள் இருக்கு. 'சிர்ரபுஞ்சி' இங்கேயிருந்து 32-மைல்தான். அழைத்துக்கொண்டு போய்க் காண்பிப்பேன்.

ம: எனக்கும் அதைப் பார்க்கணும் என்ற ஆசைதான். ஆனால் இரண்டு நாள்தானே தாமஸம்? இரண்டு நாளும் வேலையிருக்கு. எதைப் பார்க்க முடியும்?

ச: (உள்ளே போய் இரண்டு வாழைப்பழங்களை எடுத்து வந்து) இந்தாங்கோ, இதைச் சாப்பிட்டுப் பாருங்கோ.

ம: இப்போது எதற்கு, ஸார்! சாப்பாட்டுக்கு முன்?

ச: இதைச் சாப்பிட்டுப் பாருங்களேன். இதற்கு 'சிர்ரபுஞ்சி' என்று பெயர்; தேன்போல் ருசியுள்ளது. பேச்சுக்குச் சொல்லவில்லை; உண்மையாகவே தேனின் சுவையுள்ளது. (தானும் ஒன்றைச் சாப்பிட்டுக்கொண்டே) இல்லையா?

ம: ஆமாம், ஸார். தேன் சுவைதான். உங்கள் ஊர் சிறப்புக்காகச் சொல்லுகிறீர்களோ என்று எண்ணினேன். இல்லை; உண்மைதான். வழியில் 'ஸாந்த ஹார்' ஸ்டேஷனில் ரயில் வந்து நின்றது. என்னுடன் ஒரு பெங்காலி பிரயாணம் செய்தான். 'என்ன? ஸாந்த ஹார் வந்திருக்கு, பேசாமலிருக்கிறீர்களே?' என்றான். 'என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்டேன். 'ஸாந்தஹாரில் வாழைப் பழத்தை வாங்கவேண்டாமோ? ஸாந்தஹார் பழம் அகில இந்தியச் சிறப்புடையதாச்சே' என்றான். ஆனால் சரியென்று அரை 'டஜன்' பழங்கள் வாங்கினேன்.

ச: எப்படியிருந்தது?

ம: எல்லாம் நம்மூர் ரஸ்தாளிப் பழத்தின் காலில் கட்டியடிக்க வேண்டியதுதான்.

ச: அது கிடக்கிறது. 'சிர்ரபுஞ்சி' எப்படி?

ம: நான் சாப்பிட்ட பழங்களுள் முதல் தரமானது என்று ஒப்புக்கொள்ளுகிறேன். சிர்ரபுஞ்சியில் அடைமழை என்பதைத்தான் எல்லாரும் அறிவார்கள். அதனுடைய வாழைப்பழத்தின் அருமையை இன்னும் அறியவில்லை.

ச: சிர்ரபுஞ்சி மாத்திரமா? அஸ்ஸாமே, அருமையான பிரதேசம், ஸார். வரச்சே பார்த்திருப்பீர்களே, எப்படி இருந்தது?

ம: மனோரம்மியமாய் இருந்தது. பிரம்மபுத்திரா நதியைத் தாண்டின உடனேயே அஸ்ஸாமின் அழகு கண்கொள்ளவில்லை. 'கோஹதி' வந்தேன். ஸ்ரீனிவாஸையங்கார் பிரஸிடெண்டாக இருக்கும்போது காங்கிரஸ் கூடின இடமல்லவா?...அதன் பிறகு மலைகளின்மேல் ஏற ஆரம்பித்தோம். நேர்த்தியாகவும் பச்சைப் பசேலென்றும் இருந்தது. இயற்கைத் தேவி மலர்ச்சியடைந்த குதூகலத்தினால் மதர்ளிச்சிருப்பதாகத் தோன்றியது.

ச: உங்கள் ஸிம்லாவைப்போல் இல்லையே? எங்கே கண்டாலும் போலீஸ்காரன் போல் நிற்கும் தேவதாரு மரங்கள்!

ம: ஸிம்லாவை ஏன் இழுக்கிறீர்கள்? ஸிம்லாவுக்கு இயற்கைச் சிறப்பைக் காட்டிலும் அங்கு இருக்கும் மனிதர்களின் சிறப்பு அதிகம்! என்ன இருந்தாலும் அஸ்ஸாம் ஒரு ஸௌந்தர்ய பூமி. வழியில் வரச்சே பார்த்தேன். வாழை ஒவ்வொன்றும் பனை மரம் போல் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருக்கே! மூங்கிலும் போத்துப் போத்தாய் வாய்க்கால் கரையோரங்களில் அடர்த்தியாக வளர்ந்திருக்கின்றன. மலைகளும் செங்குத்தாய் நின்றுகொண்டு சிடுசிடுவென்ற தோற்றத்தைக் கொள்ளவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகக் கிரமமாக ஏற்றம். 'காமரூபம்' என்று முன்னோர்கள் இந்தப் பிரதேசத்திற்குப் பெயரிட்டார்களல்லவா? ரொம்பப் பொருந்தினதுதான்!......... என்னுடைய அகமுடையாளையும் ஒரு தரம் இந்த ஊருக்கு அழைத்துக்கொண்டு வரவேணும் என்று எண்ணியிருக்கேன்.

ச: பேஷாய் அழைச்சுண்டு வாங்கோ. எவ்வளவு நாட்கள் இருந்தாலும் உங்களுக்கு இவ்வூர் அலுக்காது. நானும் இங்கு வந்து பதினெட்டு வருஷங்களாகின்றன. குழந்தைகளுடைய படிப்புக்காகவும் பெண்களுக்குப் பாட்டுச் சொல்லி வைப்பதற்காகவும் என் அகமுடையாள் பட்டணத்திலிருக்க வேண்டியிருக்கு. இல்லாவிட்டால் அவளை இதை விட்டு அனுப்பியே இருக்க மாட்டேன்!

ம: ஏன் ஸார், இந்த ஊர் பூர்விக ஜனங்கள் விசித்திரமான ஸம்பிரதாயம் உள்ளவர்களாமே!

ச: ஆமாம்; இவர்களுக்குக் கபடு, சூது ஒண்ணும் தெரியாது. அதுவும் 'காஸி' என்று சொல்லப்படும் ஜாதியினர் வெகு ஸாதுக்கள். வீட்டைத் திறந்து போட்டுவிட்டுப் போகலாம். ஒண்ணும் திருட்டுப் போகாது. 'காஸி' பெண்கள் நல்ல வனப்பும் அழகும் உடையவர்கள், அவர்களுள் விசித்திரமான முறை என்ன தெரியுமா?

ம: என்ன?

ச: ஒருவனுடைய ஆஸ்திக்கு உரிமை அவனுடைய கடைசிப் பெண்ணுக்குத்தான்!

ம: அப்படீன்னு பாக்கிப் பெண்களுக்குக் கல்யாணம் ஆவது சிரமமாயிருக்குமே?

ச: அது நம்மைப்போல் வரதக்ஷிணை வாங ்கும் ஸமூகத்தில் தான். இவாளெல்லாம் ரொம்ப ஸமான்ய ஜனங்கள் (Simple folk)

ம: ஏன் ஸார், இந்தப் பிரதேசத்தாரிடம் இன்னுமொரு விசித்திரமான விதி இருக்காமே!

ச: என்னது?

ம: டாக்டர் 'ஹட்டன்' கூட அசெம்பிளியில் சொன்னூர்: மாமியார் ஸௌபாக்கியத்தை இழந்தாளானுல், அவளை மாப்பிள்ளை மறுகல்யாணம் புரிந்துகொள்ள வேண்டுமாமே?

ச: எனக்குத் தெரிந்தமட்டில் இது 'காஸி' ஜாதியாரிடம் இல்லை. வேறு வகுப்பினரிடம் இருக்கலாம்.

ம: விசித்திரமாக இல்லை?

ச: ஏன்?

ம: உறவு சொல்லிப்பது கஷ்டமா யிருக்குமே! மனைவிக்குப் பிறந்த குழந்தை மாமியாருக்குப் பிறந்த குழந்தையைத் 'தம்பீ' என்று அழைக்குமா அல்லது 'மாமா' என்று அழைக்குமா?

ச: மாமியாருக்குக் குழந்தை பிறக்கும் என்று எப்படிச் சொல்கிறீர்?

ம: கல்யாணம் செய்துகொண்டால் குழந்தை பிறக்காதா?

ச: கல்யாணம் செய்துகொண்டால் 'எல்லாம்' என்று அர்த்தமா?

ம: இல்லையா?

ச: இல்லை; பூர்விக ஜாதியினரின் பழக்க வழக்கங்களை நம்முடைய ஸம்பிரதாயப்படி அறியக்கூடாது. அவர்களுடைய வாழ்க்கை முறைப்படி அறியவேண்டும்.

ம: ஆனுல், நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

ச: இந்த வழக்கம் இயற்கை அம்சத்தை ஒட்டித்தான் இருக்கு என்பேன்;

ம: எப்படி?

ச: தாய்களுக்குப் பெரும்பாலும் பிள்ளையைக் காட்டிலும் பெண்மேல்தான் பிரியம் அதிகம். பிள்ளைக்குக் கல்யாணமாகி விட்டால் பிறகு மனைவியின் வசமாகித் தாயைப் புறக்கணித்து விடுகிருன். தன்னுடைய புருஷனை இழந்தபின் தாய், பெண்ணுடன் கூடி ஸ்வாதீனமாக இருக்க விரும்புகிருள். இவ்வூர் ஜனங்களின் முறை இந்த இயற்கை ரீதியை ஒட்டியிருக்கலாம் அல்லவா?

ம: ஆனுல் கல்யாணம் எதற்குப் பண்ணிக்கனும்? மாப் பிள்ளையின் வீட்டில் வந்து இருக்கிறதுதானே?

ச: கல்யாணம் என்ருல் எல்லாமா என்று அப்பவே கேட் டேனே! நாகரிகமடைந்த ஜனங்கள்போல் இவர்கள் அல்பாயுசுகள் இல்லே. நீடித்து வாழ்பவர்கள். மாமியார் மாப்பிள்ளை வீட்டிற்கு வரச்சே கிழவியாகத்தான் வருவாள். ஆகையால் 'கல்யாணம்' என்ருல் விட்டில் வைத்துப் போஷிக்கவேண்டிய பொறுப்பு என்று தான் இவ்விடத்தில் பொருள். 'ரக்ஷதி விருத்தத்வே', 'ஸ்திரியை விருத்தாப்பியத்தில் புத்திரன் ரக்ஷிக்கிருன்' என்று மனு விதித் தாரோன்னே! அது மாதிரி இவர்களுடைய மனு 'புத்திரி' என்று இன்னும் பொருத்தமாக விதித்தார்.

நீங்கள்தாம் சொல்லுங்கள்; அநுபவத்தை யொட்டி, எது தேவலே? பிள்ளையோடும் மாட்டுப் பெண்ணேடும் இருந்து அவதிப் பட்டுண்டு 'மாமியாரா? ராக்ஷஸின்னு!' என்று பேச்சுக் கேட்பதா? அல்லது சொந்தப் பெண்ணுடன் இருந்துகொண்டு பிரியமுடன் வாழ்வது தேவலேயா?

ம: உங்கள் வியாக்கியானந்தான் தேவலே.

ச: சரி, நாழியாச்சு; சாப்பிடப் போவோம் வாருங்கோ. சாப்பிடும் போதெல்லாம் தனிமையைப் போக்க நான் ஒரு 'ரிகார்டு' வைப்பது வழக்கம். வெக்கட்டமா?

ம: ஆகா.

ச: என்ன வெக்கலாம்? 'கரகரப்பிரியா' வெக்கட்டுமா?

ம: வையுங்கள். எனக்கு ரொம்பப் பிடிக்கும். நாம் பிரியப் படுவதையெல்லாம் திரட்டி வைத்திருக்கிறது 'கரகரப்பிரியா' ராகத்தில். காமரூபத்துக்குக் கரகரப்பிரியா எடுத்ததுதான்.

('Clarionet'ல் 'ராமா நீயடா' என்று பாட்டு)

[சாப்பிட்டு வந்து சிறிது நேரத்திற்கெல்லாம் இருவரும் படுத்துக் கொள்ளப் போகிருர்கள்.]

ச: இந்தாங்கோ, பாலேச் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கோங்கோ. அதற்கு முன்னுல் இதைக் கொஞ்சம் சாப்பிடுங்கோ.

ம: அது என்ன?

ச: ஆரஞ்சுத் தேன். இந்த ஊரில் விசேஷமானது; உடம்புக்கு ரொம்ப நல்லது. பாலோடு சேர்க்காதேயுங்கோ. பால் நீர்த்துப் போய்விடும். அப்படியே சாப்பிடுங்கோ.

ம: என்ன உபசாரம் ஸார்! இப்படியெல்லாம் எனக்குச் செய்து விட்டுக் குறைப்பட்டுக்கொண்டு, 'என் அகமுடையாள் இங்கு இருந்தா ளானுல்' என்கிறீரே?

ச: சரி, இப்போது குளிருக்குப் போர்த்திக்கொள்ள என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள்? 'ரக்' மட்டுந்தானு?

ம: இரண்டு 'ரக்'குகள். நான் டெல்லிக் குளிரைத் தாங்கிக் கொள்பவன்.

ச: எத்தனை 'ரக்'குகளைப் போர்த்திக் கொண்டாலும் இங்கே போராது; இந்தாருங்கோ! இந்த 'ரஜாயி'யைப் போர்த்திக் கொள்ளுங்கோ........விளக்கை அணைத்துவிடட்டுமா?

ம: ஆகா; ஷில்லாங், சிர்ரபுஞ்சி, கரகரப்பிரியா, பருப்பு சாம்பார், பால், தேன், இரண்டு 'ரக்'குகள், ரஜாயி, இன்னும் என்ன ஸார் ஒரு மனுஷனுக்கு வேண்டும்?

ச: சரி, அகமுடையாளை நினைத்துக்கொண்டு தூங்குங்கோ!

[இருவரும் தூங்குகிறுர்கள். வீணையில் 'உசேனி' ராகத்தில் 'நேற்றந்தி நேரத்திலே' என்று ஆரம்பிக்கும் பாட்டு. மணி கனவு காண்கிறுன். தமயந்தி தோன்றுகிறுள்.]

மணி: தமயந்தி!

தமயந்தி: மணீ!

ம: எங்கிருந்து வருகிறுய் நீ?

த: உன்னிடமிருந்து.

ம: என்னிடமிருந்தா?

த: ஆம்; உன்னுடைய ஹ்ருதய கமலத்திலிருந்து.

ம: அங்கே பாப்பா இருக்காளே! நீ இங்கே வந்தது அவளுக்குத் தெரியுமா?

த: தெரியும்.

ம: இருந்தாலும் உன்னோடு நான் எப்படிப் பேசுவது? மூன்றும் மனுஷ்யர் எதிரில்தான் நான் உன்னோடு பேசலாம் என்று பாப்பா சொல்லியிருக்காள்.

த: (ஐயங்காரைக் காட்டி) அதோ இருக்காரே மூன்றும் மனுஷர்!

ம: ஆனுல் சரி, உட்கார். முன்னே பார்த்த மாதிரியாகவே இப்பவும் இருக்கிறுய்.

த: நீயுந்தான்.

ம: இல்லை; எனக்கு அப்போது குடுமி இருந்தது; இப்போது, 'கிராப்'.

த: அது வெளித் தோற்றம்; உன் உள் தோற்றம் மாறவில்லை.

ம: உன் உள் தோற்றம் எப்படி?

த: நீயே சொல்லு!

ம: சரி, நீ இவ்விதம் என்னிடம் வந்ததற்காக உனக்கு ஒரு நல்லொழுக்கப் பரீக்ஷை வைத்து 10க்கு இரண்டு மார்க்குகள் கொடுத்தேனுனல் இப்பவும் முன்போல் கண்ணீர் விடுவாயா?

த: விடுவேன்.

ம: வேண்டாம்; பார்த்தவுடனேயே நான் உன்மேல் பிரியப் பட்டேன். ஏன் பிரியப்பட்டேன் என்பது தெரியாது; இப்பவும் தெரியாது. ஆனல் உன்னைக் காண்பதில் எனக்கு எப்பவும் பிரீதி. ஆனல் உன்னை மற்றொருவரிடம் சரியாக விவரிக்க முடிகிறதில்லை. ஆயினும் நீ என்னுடைய மனசில் எப்பவும் இருக்கிறுய். ஏன்? காரணம் உனக்குத் தெரியுமா?

த: தெரியும்.

ம: எதனுல்?

த: எனக்கு எப்போதும் உன்னுடன் தொடர்பு உண்டு.

ம: எப்படி?

த: நான் உன்னுடைய தாயாக இருந்திருக்கிறேன்.

ம: எப்போது?

த: ஒரு ஜன்மத்தில்; மற்ருெரு ஜன்மத்தில் உன்னுடைய சகோதரியாக இருந்திருக்கேன்........ உன் புத்திரியாக இருந்திருக்கேன்........ உன் உறவினளாக இருந்திருக்கேன்........ உன் சிநேகிதியாக இருந்திருக்கேன்.

ம: எப்போதாவது என் மனைவியாக இருந்திருக்கிறுயா?

த: ஆகா.

ம: எப்போது?

த: இப்போது.

ம: பாப்பான்னு என் மனைவி.

த: நான்தான் பாப்பா!

ம: அது எப்படி? இது டெல்லியில்லையே? இது காமரூபம்னு!

த: நான்தான் காமரூபம்!

ம: நிச்சயமாகவா?

த: ஆம்; ருஜுப்படுத்துகிறேன் பார்.

[மறைகிருள். உடனே ஒரு சின்னப் பூகம்பம் ஏற்படுகிறது.]

ம: (கண்விழித்து) ஸார், எழுந்திருங்கோ, பூகம்பம்!

ச: பயப்படாதேயுங்கோ; இவ்வூரில் வருஷத்திற்குச் சுமார் 150 பூகம்பங்கள் ஏற்படும். எல்லாம் ஸ்வல்ப அதிர்ச்சி யள்ளவை. விசாரப்படாமல் தூங்குங்கோ.

[தூங்குகின்றனர்.]

6

# கிருஹ ஆகமனம்

**பாத்திரங்கள்**

மணி

பாப்பா

மணி திக்கு விஜயம் முடிந்தபின் டெல்லிக்கு வந்து சேர்ந்திருக்கிறன். பாப்பா மணிக்கு வெற்றிலை பாக்கு எடுத்துக் கொடுத்துக்கொண்டிருக்கிறள்.

[மத்தியமாவதி ராகத்தில் 'விநாயகுனி' என்று ஆரம்பிக்கும் பாட்டு.]

மணி: *உன்மேல் கோபம் எனக்கு, பாப்பா.*

பாப்பா: *ஏன்?*

ம: *நித்தியம் எனக்குக் கடிதம் எழுதிகிறதுதானே?*

பா: *நன்ருயிருக்கே! எனக்கு வேறு வேலையில்லையா?*

ம: *நான் எழுதல்லை? எனக்கு மாத்திரம் வேலையில்லையா?*

பா: *என்ன வேலை? ஊர் சுத்திவரப் போயிருந்தீர்கள்?*

ம: *நன்ருச் சொன்னே! ஊர் சுத்திவரவா? எல்லா இடங்களிலும் ஒரே வேலையடியம்மா எனக்கு. ரெயிலில்கூட வேலை செய்தேன். ஒரு நாள்கூட ஓய்வு கிடைக்கவில்லை.*

பா: *அப்படீன்ஞு எனக்கு எப்படி நித்தியம் எழுத முடிந்தது?*

ம: *நீதான் சொல்லேன்........உன்மேல் எனக்கு இருக்கும் பிரியந்தான் காரணம்;*

பா: என்மேல் இப்போதாவது பிரியம் வந்ததே? வரட்டும் என்றுதான் நான் உங்களுக்கு உடனே பதில் எழுதவில்லை. கொஞ்ச நாள் பிரிந்து இருந்தால் என் குணம் தெரியும். பிரியம் உண்டாகலாம் என்றெண்ணியே உங்களுக்கு எழுதாமல் இருந்தேன். என்னைப்பத்தி எப்போதாவது நினைச்சுக் கொண்டீர்களா?

ம: ஏன் அப்படிக் கேட்கிறாய்? அடிக்கடி நினைத்தேன்.

பா: எப்போது நினைத்தீர்கள்?

ம: பட்டணத்தில்.

பா: பட்டணத்தில் எதற்காக என்னை நினைத்தீர்கள்?

ம: எல்லாம் சொல்லணுமோ?

பா: சொன்னால்தானே உண்மையா, இல்லையா என்று புலப்படும்; சொல்லுங்கோ.

ம: சரி. நாணாவின் அகமுடையாளைப் பார்க்கச்சே உன்னை நினைத்துக் கொண்டேன்.

பா: ஏன்?

ம: அவளும் உன்னைப்போலவே கறுப்புக்கலர் போட்ட பெங்களூர்ப் புடைவையை உடுத்திருந்தாள்.

பா: அதற்குத்தானா என்னை நினைத்தீர்கள்?

ம: இல்லை. அவளும் உன்னைப்போலவே மனப்பான்மை உடையவளாயிருந்தாள்.

பா: எந்த விதத்தில்?

ம: குறை கூறுவதில்.

பா: நான் குறை கூறுகிறேனா?

ம: இல்லையா? நான் உன்னிடம் பிரியமாயில்லை என்கிறாய்; டெல்லியில் குடித்தனம் செய்வது பிடிக்கவில்லை என்கிறாய்.

பா: அவள் என்ன சொன்னாள்?

ம: நாணா பிரியமாயிருக்கிறதில்லை என்றும், பட்டணத்தில் குடித்தனம் செய்து அலுத்துப்போச்சு என்றும் கூறினாள்.

பா: அதற்கு நீங்கள் என்ன சொன்னீர்கள்?

ம: அப்படி அலுப்பாயிருந்தால் நான் அவளைக் கல்யாணம் பண்ணிண்டு டெல்லிக்கு அழைச்சுண்டு போகிறேன் என்றேன்.

பா: நன்னாயிருக்கு!

ம: இப்போது இல்லை, பாப்பா. அடுத்த ஜன்மத்தில்! அதற்கு அனுகூலமாயிருப்பதற்காக நாணாவையும் அவளையும் நம்முடன் ஒரு மாசம் வந்து இருக்கும்படிச் சொல்லியிருக்கேன்.

பா: பட்டணத்தில் இன்னும் யாரைப் பார்த்தீர்கள்?

ம: விச்வநாதனைப் பார்த்தேன்.

பா: யார் அவர்?

ம: ரொம்ப ரஸமான மனுஷர். நல்ல படிப்பாளி. பட்டணத்துச் 'செக்ரடேரியட்'டில் (Secretariat) இருக்கார். முன் ஒரு தரம் டெல்லிக்கு வந்திருந்தார். உன்னைப்போல் அலுப்பு ஏற்படாமல் அவருக்கு டெல்லியின்மேல் சபலம் அதிகமாயிருக்கு. என்னைக் கண்டதும் அத்யந்த உற்சாகம் அடைந்தார். பட்டணத்தில் தங்கின நாட்கள் முழுவதும் பெரும்பாலும் அவருடன்தான் கழித்தேன். வெகு இடங்களுக்கு அழைத்துச் சென்றார்.

பா: நல்ல மனுஷன் போலிருக்கு.

ம: ரொம்ப நல்லவர். கடைசியில் வேடிக்கையாக ஒண்ணு சொன்னார்.

பா: என்ன?

ம: உன் மேல் எனக்கு ரொம்ப விச்வாசம் அப்பா மணி. அந்த ஊர் எனக்குப் பிடிக்கல்லே. டெல்லிக்கு மாத்திண்டு வரவேண்டுமென்று ஒரே ஆவலாயிருக்கு; போனதும் நான் சொன்னேனே! அவரிடம் என்னைப்பத்திச் சொல்லு. நான் உனக்குச் செய்த உபசாரங்கள் எல்லாம் அவர் நிமித்தம் என்று எண்ணிக்கோ. அப்போது மறக்கமாட்டாய் என்றார்.

பா: இன்னும் எங்க மனுஷாள் யாரையாவது பார்த்தீர்களா?

ம: ராஜலக்ஷ்மியைப் போய்ப் பார்த்தேன்.

பா: என்ன சொன்னாள்?

ம: பருப்புப்பொடியைத் தனியாப் பிசைஞ்சு சாப்பிட்டுவிட்டு, பிறகு ரஸஞ்சாதம் சாப்பிடுவதைக் காட்டிலும், அதிலேயே ரஸம் விட்டுண்டு சாப்பிட்டால் இன்னும் ருசியாயிருக்கும் என்று சொல்லி அவ்விதமே எனக்குப் பரிமாறினாள். வெகு நேர்த்தியாக இருந்தது.

பா: ஆமாம்! இன்னொருத்தர் சமையலேத்தான் நீங்கள் மெச்சுவீர்கள்! இன்னும் என்ன சொன்னாள்?

ம: உன்னைப்பத்தி விசாரித்தாள். நீ ரொம்பச் சமர்த்து என்று சொன்னாள்.

பா: சரி, இன்னும் எப்போது என்னைப்பத்தி நினைத்துக்கொண்டீர்கள்?

ம: கல்கத்தாவில் நினைத்தேன்.

பா: எப்போது?

ம: உமாவைப் பார்க்கப் போயிருந்தேன். "மன்னி சௌக்கியமா?" என்றாள், அப்போது.

பா: உமா ஞாபக மூட்டின பிறகுதான் என் நினைவு வந்ததோ?

ம: இல்லே, அதற்கு முன்னதாகவே வந்தது.

பா: எப்போது?

ம: அவளைப் பார்க்கப் போகும் முன் 'தனியாகப் போகக்கூடாது' என்று நீ சொல்லியிருக்கயோன்னோ, அதை நினைச்சுண்டேன். உன் ஞாபகம் வந்தது.

பா: தனியாகத்தானே போனீர்கள் ?

ம: என்ன சந்தேகமடியம்மா ! சாமாவை அழைத்துக் கொண்டு சென்றேன்.

பா: யார் கண்டா ? என்னவோ நீங்கள் சொல்வதை நம்புகிறேன். சரி, இன்னும் எப்போது என்னை நினைத்தீர்கள் ?

ம: ஷில்லாங்கில்.

பா: எப்போது ?

ம: தமயந்தியைக் கண்டேனே, அப்போது.

பா: தமயந்தியை ஷில்லாங்கில் எப்படிப் பார்த்தீர்கள் ?

ம: கனவில் கண்டேன் !

பா: தெரியுமே நேக்கு உங்களுடைய குணம் ! என்னை நினைத்துக் கொண்டீர்கள் என்று ஏன் வீண் வார்த்தை சொல்லுகிறீர்கள்? என்னைத் தவிர வேறு எல்லா ஸ்திரீகளைப் பற்றித்தான் உங்களுக்கு நினைவு. கனவிலுங்கூட அதே நினைவு.

ம: இதோ பார், பாப்பா, என்பேரில் வீண் புகார் செய்யாதே. நானாகத் தமயந்தியைத் தேடிக்கொண்டு போகவில்லை. அவளாகத்தான் என்னைப் பார்க்க வந்தாள் ! முழுவதும் கேட்கமாட்டேன் என்கிறாயே, என்ன சொன்னாள் தெரியுமா ?

பா: என்ன சொன்னாள் ?

ம: நான்தான் பாப்பா என்றாள்.

பா: போறது. அவளுக்காவது என்னைப்பத்தி நினைவு இருந்ததே. இந்தாங்கோ, நான் சொல்வதைக் கேளுங்கோ. இனிமேல் இதுமாதிரிப் பேச்சே வேண்டாம். பொறுப்புடன் ஏதாவது காரியத்தை ஏற்றுக்கொண்டு செய்யுங்கோ.

ம: என்ன செய்யச் சொல்லறே?

பா: பத்மா ஆத்துக்காரர் மாதிரி நீங்களும் ராமாயணம் வாசியுங்களேன்.

ம: அடே! சீனு ராமாயணம் வாசிக்க ஆரம்பிச்சிருக்கானா?

பா: ஆமாம்!

ம: யார் சொன்னா?

பா: பத்மா சொன்னாள்.

ம: பத்மா பட்டணத்திலிருந்து திரும்பி வந்துட்டாளோ?

பா: அவள் பட்டணத்துக்குப் போகவே யில்லையே! போயிருந்தால் நன்னாயிருக்கும்டீ என்று அடிக்கடி சொல்லறா!

ம: ஏன்?

பா: குளிச்சு ஐம்பது நாள் ஆகிறதாம்.

ம: ஓகோ......பாப்பா, உனக்குக் கொஞ்சம் ஸூக்ஷ்மம் குறைச்சல் என்று தோணுகிறது.

பா: ஏன்?

ம: சீனு ராமாயணம் வாசிக்கிறுன்னு என்னவோ ஒசத்தியாச் சொன்னயே! இப்போ தெரிஞ்சுதா எதுக்கு வாசிக்கிறுன்னு?

பா: (புன்சிரிப்புடன்) ஓஹோ! நான் அதைப்பத்தி யோசிக்கவேயில்லே.

ம: சரி, இப்போது நானும் ராமாயணம் வாசிக்கட்டுமா?

பா: வேண்டாம், வேண்டாம்!

